## அமுல் அளிக்கும் புதுமை!

# அமுல்ஸ்ப்ரே

## புரதச் சத்துச் சேறிந்த குழந்தை உணவு

### உடல் வளர்ச்சிக்கான புரதத்தை உங்கள் குழந்தைக்கு இதைவிட அதிகமாகத் தரும் பாலுணவு வேறில்லை!



**வளர்ச்சிக்குப் புரதம்:**

நாளுமடங்கு எடை ஏறும்படி, உங்கள் குழந்தை அதிவேகமாக வளருகிறது முதல் இரு ஆண்டுகளிலே. அதற்குப் பெருமளவிலும் ஆதாரம் புரத சத்து. கொழுகொழு வென்று உங்கள் மகவு திடமுடன் வளரத் தேவையான உடல் வளர்ச்சிப் புரதம் யாவுமே அடங்கியது அமுல்ஸ்ப்ரே!



**வைட்டமின்களும் வேறு பல நலன்களும் அடங்கியது!**

அவசியமான எல்லா வைட்டமின்களும் அடங்கப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, தவிர பாஸ்பாஸ், இரும்புத்தாதுக்கள் ஆகிய மூலாதாரப் பொருள்களும் உகந்த விகிதங்களிலே நிரவப்பெற்றது. நியாஸின், சோடியம் அஸ்கோர்பேட், ஃபாலிக அமிலம் ஆகியவையும் இயல்பான வடிவில் இடம் பெற்றுள்ளன.




அமுல்ஸ்ப்ரே
500-கிராம் டப்பாக்களிலும்
1000-கிராம் டப்பாக்களிலும்
கிடைக்கின்றன.



**ஜீரணிக்க எளிது!**

அமுல் ஸ்ப்ரேயின் ஸ்ப்ரே—ட்ரை செய்முறை, ஒவ்வொரு சொட்டுப் பாலையும் சின்னஞ்சிறு நுட்பத் திவலைகளாக சிதர்த்து விடுகிறது (தாய்ப் பாலைப் போலவே). எனவே ஜீரணிக்க எளிதாகி விடுகிறது. அதன் சுவை மிகவும் பிடித்தமாகி, எடுத்த எடுப்பிலேயே ஏற்றுக் கொள்கிறது குழந்தை.



**நவீன ஸ்ப்ரே-ட்ரை செய்முறை**

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கையாளப்படும் ஸ்ப்ரே-ட்ரை முறை மூலம் ஆக்கம் பெறுகிறது அமுல்ஸ்ப்ரே. மிகக் குறைந்த சூட்டு நிலைகளிலே பாலைப் பவுடராக மாற்றவும் இம் மேலான முறை, பாலின் புரத வளமைக்கும் மேன்மைக்கும் உயரிய பாதுகாப்புத் தருகிறது.



**அற்புதமாகக் கரைந்திடும்!**

விழுது குழைக்கத் தேவையில்லை. முழு அளவு வெந்நீரிலே அமுல்ஸ்ப்ரே சேர்த்து, நன்கு கலக்கினால் போதும், பவுடர் முழுதும் கரைந்திடும். கிப்புள் துகள்கள் அடைத்துக் கொள்ளாது.

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட். கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேட்டிவ் மில்க் ப்ரட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

ASP/AS-2/67

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, பங்குனி 4 — மார்ச் 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம் 10ம் பக்கம் பார்க்க



இந்தியாவின் கடலுடன் என்னை ஒப்பிடாதீர்கள்! நான் குட்டை-யாகக் காணப்படுவேன்!

இமயமலை

நிருபர்கள்





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 33



# கென்யா விவகாரம்

கென்யாட்டா அவர்கள் ஆட்சியதிகாரம் பெறும் வாய்ப்பு அதிகரித்த போதே கிழக்கு ஆப்பிரிக்கா (கென்யா)வில் வசிக்கும் இந்தியருக்குத் துரதிர்ஷ்டம் ஏற்படப் போகிறது என்று எனக்குத் தெரியும். நீண்ட நாட்கள் இன்னல்களை அனுபவித்த ஆப்பிரிக்கக் குடிகள் இந்தியர்களைத் தம்மவராக நினைப்பதற்கு விசேஷமாகக் காரணமில்லை. இந்தப் பகுதிகளில் சர்வாதிபத்தியம் நடத்திய வெள்ளைக்காரர்களோடு இந்தியரையும் அவர்கள் ஒன்றாக வைத்துப் பார்ப்பதற்கே அதிகக் காரணமுண்டு. சர்வாதிபத்தியம் செலுத்தியவர்களின் ஆட்சி முடிந்ததும், அவர்களோடு நட்பு கொண்டிருந்த சமூகத்தினரையும் வெளியேற்றத் தோன்றியிருக்கிறது.

ஃ ஃ ஃ

தன் நாட்டில் அந்நியர் குடியுரிமை பெறும் விஷயத்தில் நீண்ட நெடுங்காலமாக இனபேதம் காட்டாமல் புகழ்பெற்றிருந்த பிரிட்டன், இப்போது மற்ற பல வல்லரசுகள்போல் இன வித்தியாசம் பாராட்டிச் சட்டம் இயற்றிவிட்டது. மனச்சாட்சியை விடச் சமயோசித சௌகரியத்தைப் பெரிதாக மதித்து பிரிட்டன் இப்படிச் செய்து விட்டது.

பிரிட்டனின் புது மசோதா குறித்துப் பேசுகையில் ப்ராக்வே பிரபு பின்வருமாறு கூறினார்: ''கென்யாவிலிருந்து இந் நாட்டுக்கு (இங்கிலாந்துக்கு) வரும் மக்கள் பிரிட்டிஷாராகவோ வெள்ளையராகவோ இருந்திருந்தால், (அவர்கள் வராமல் கட்டுப்படுத்தும்) இதுபோன்ற ஒரு மசோதா கொண்டு வரப்பட்டே இராது. இது இன அடிப்படையில் அமைந்த மசோதா என்பதற்கு இந்தக் காரணமே போதுமானது.'' ஒளிவு மறைவின்றி அவர் இப்படிப் பேசியதிலிருந்து மனச்சாட்சியின் தூய்மையைக் காக்க விரும்புவோர் பிரிட்டனில் எப்போதும் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. இதற்கு மாறாகச் சர்க்கார் நடக்கும்போது அவர்கள் மனம் விட்டுப் பேசுகின்றனர். பிரிட்டனின் கௌரவத்தை இது காக்கிறது. எனினும் இதுபோல் பேசுபவர்களை அவர்களது சகோதரப் பிரிட்டிஷ் பிரஜைகளோ கோணல் புத்திக்காரர்களாக மதிக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

கென்யாவால் வெளியேற்றப்பட்டு, பிரிட்டனில் பிரவேசிப்பதற்கு அனுமதி மறுக்கப்பட்ட ஆசிய மக்களின் பிரச்னையைக் காமன்வெல்த் நாடுகள் ஒன்று சேர்ந்து எப்படித் தீர்க்கலாம் என்பதற்கு திரு கார்டன் வைலஸ் கூறியுள்ள யோசனை வருமாறு: பிரிட்டனுக்குப் பதிலடி தர வேண்டும் என்று மற்ற நாடுகளுக்குச் சபலம் தோன்றுவது இயற்கை. ஆனால் இதன் விளைவு பரிதாபகரமாயிருக்கும். இந்த நடவடிக்கையை விடுத்து பிரிட்டன், கென்யா, இந்தியா, கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து முதலிய எல்லா காமன்வெல்த் நாடுகளும் ஒரு வட்ட மேஜை மகாநாடு நடத்தி, கென்யாவிலிருந்து வெளியேற்றப்படும் 1,20,000 ஆசியர்களைத் தம்மனைவரின் பொதுக் கவனத்துக்குரியவராகக் கருதித் தீர்வு காண வேண்டும். காமன்வெல்த் நாடுகளில் ஏதேனும் ஒன்றின் தலைநகரில் மாநாடு நடத்தப்படலாம். காமன்வெல்த்தில் நீண்டகாலமாக அங்கத்தினராயுள்ள கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து ஆகிய மூன்று நாடுகளிலும் புதிதாகக் குடியேறுபவருக்கு இடவசதி அளிப்பதற்கு பிரிட்டனையும் இந்தியாவையும்விட அதிக சௌகரியம் உண்டு. எனவே, தற்போது நாடற்றவராகும் துர்ப்பாக்கிய நிலையிலுள்ள கென்யா ஆசியர்களில் ஒரு பகுதியினருக்கு இம்மூன்று நாடுகளும் குடியிருப்புத் தருவது பொருத்தமாயிருக்கும். எல்லா நாடுகளும் இவ்வாறு ஒன்றிணைந்து திட்டம் வகுத்தால், நாடிழப்பவர்களில் பாதிப் பகுதியான 60,000 பேருக்கு மூன்றாண்டுகளில்

காமன்வெல்த் நாடுகள் குடியிருப்புத் தர இயலும். இம்மாதிரி மற்ற காமன்வெல்த் நாடுகள் முன்வருவதை ஒட்டிக் கென்யா சர்க்காரும் தம் கொள்கையை இளக்கி, ஆசியரின் வெளியேற்றத்தைப் பல ஆண்டு களில் சிறிது சிறிதாகச் செய்ய வேண்டும். இவ்வாறு கார்டன் வைஸ் கூறுகிறார்.

கிழக்காப்பிரிக்காவைச் சேர்ந்த பாகிஸ் தானியரைப் பிரிட்டனில் சேர்த்துக்கொள் கிற அளவுக்கு இந்தியரை அங்கு சேர்த்துக் கொள்ளப் பிரிட்டன் விரும்பாதிருக்கலாம். (இதன் காரணத்தை இங்கு விளக்கத் தேவை யில்லை. அது நன்கு புரிகிற விஷயம்.) அந்நிய நாடுகளிலிருந்து பிரிட்டனுக்கு வருபவரைக் கட்டுப்படுத்தும் சட்டத்தில் ஹிந்துக்களையும் சீக்கியரையும் விட முஸ்லீம்களுக்குச் சலுகை காட்டினால், அதுபற்றி நாம் சண்டை இளைப்பு வதில் ஒரு லாபமும் இராது. நமக்கு இப் போது ஏற்பட்டுள்ள துரதிர்ஷ்டம் போதா தென்று, நம்மீது கரி பூசிக்கொண்டதாகவும் ஆகும்.

இலங்கையிலிருந்து இந்தியரை வெளி யேற்றம் செய்வதால் தமிழகமும் கேரளமும் அதன் அழுத்தத்தை அதிகம் தாங்க வேண்டி யிருப்பது போல், கென்யா இந்தியர் பாரதம் திரும்பினால் குஜராத் அந்தச் சுமையில் பெரும் பகுதியை ஏற்க நேரிடும்.

ஃ ஃ ஃ

தென் ஆப்பிரிக்காவிலுள்ள நேட்டாலைச் சேர்ந்த பல இந்தியர்களை நான் சந்தித் திருக்கிறேன். இவர்கள் அங்கு நீண்ட கால மாக வாழ்ந்து வருபவர்கள். சமூகத்தில் முக்கியத்துவம் பெற்றவர்கள். தங்கள் மனைவிமாருடன், தமது புனிதத் தாயகமான பாரதத்துக்கு க்ஷேத்திராடனம் வருவார்கள். இவர்களும் நானும் மனம் விட்டுப் பேசி யிருக்கிறோம். இந்தப் பேச்சுக்களிலிருந்து, இவர்கள் தமது புனிதத் தாயகத்துக்கு வந்து வாழ்ந்தால் எப்படி இருக்கமுடியுமோ, அதைவிடத் தென் ஆப்பிரிக்காவில் வாழ்வதி லேயே அதிக மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்று நான் நிச்சயமாக முடிவு செய்திருக் கிறேன். தென் ஆப்பிரிக்காவில் வெள்ளை யர்கள் இனஒதுக்கல் கொள்கையைக் கடைப்பிடிப்பது வாஸ்தவம்தான். இதை இந்தத் தென்னாப்பிரிக்க இந்தியர்களும் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். ஆனாலும் இந்தக் கொள்கையின் அடிப்படையில் செய்யப்படும் காரியங்களுக்கு மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டால், மற்றபடி மக்கள் பொதுவாகச் சர்க்காரிடமிருந்து எதிர்பார்க்கும் கல்வி முதலிய எல்லாப் பொது நலன்களையும் தாங்கள் பெற முடிகிற தென்றும், இந்த அம்சங்களில் சர்க்காரின் மீது குறையேதும் கிடையாதென்றும் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இன ஒதுக்கல் கொள்கை காரணமாக, தென் ஆப்பிரிக்க சர்க்காரைப் பகிஷ்கரிக்க வேண் டும் என்று இந்தியா முழுவதும் விரும்புகிறது. ஆயினும், தென்னாப்பிரிக்காவிலிருந்து என் னைக் காண வந்தவர்களை நான் குறுக்குக் கேள்விகள் கேட்டதிலிருந்து, இன பேதம் தவிர, தென்னாப்பிரிக்காவைத் தாயகமாகச் சுவீகரித்துள்ள இந்தியரைப் பொறுத்தமட் டில் தென் ஆப்பிரிக்கா சர்க்கார் ஒரு நல்ல அரசாங்கமே என்று உறுதியாகத் தெரிய வருகிறது. காந்திஜி அந்த அரங்கிலிருந்து வெளிவந்து ஐம்பதாண்டுகளுக்கு மேலாகப் போகிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். ஆப்பிரிக்காவில் குடியேறிய இந் தியர்களுக்குப் பிறந்த பிள்ளைகளும் பெண் களும், பேரன்களும், பேத்திகளும் அங்கு மகிழ்ச்சியாகவே இருக்கின்றனர்; அந்த நாட்டைவிட்டு வந்துவிட விரும்பவில்லை. இந்தியாவைச் சுற்றிப் பார்த்து, இங்கு நடப் பதையெல்லாம் அறிந்தபின் அவர்களுடைய அபிப்பிராயம் மேலும் திடமாகிறது. நமது ஆலயங்களையும் புண்ணிய தீர்த்தங்களை யும் திருவிழாக்களையும் அவர்கள் விரும்பு கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் தென்னாப்பிரிக்காவைவிட்டு வந்து இந்தியப் பிரஜைகளாவதற்கு அவர்கள் பிரியப்பட வில்லை. இந்தியாவிலிருந்து மதத் தலைவர் களும், மற்றத் தலைவர்களும் தங்கள் நாட் டுக்கு விஜயம் செய்து தங்களுக்குப் புதிய விழிப்பைத் தர வேண்டும் என்றே அவர்கள் ஆசைப்படுகின்றனர். ஹிந்து மதத்திலும் தத்துவ சாஸ்திரத்திலும் அவர்களுக்கு ஆழ்ந்த பற்றுதல் உள்ளது. ஆனால் அவர்கள் சாதி முறையை விட்டே விட்ட னர் எனலாம். எல்லாச் சாதிகளும் அடங்கிய தென்னாப்பிரிக்க ஹிந்து சாதி என்று ஒன்று அமைதியான முறையில் உருவாகியிருக்கிறது. இதிலேயே அவர்கள் திருப்தி காண்கின்றனர்.

'தென்னாப்பிரிக்காவில் இது வரை இருக் கும் இந்தியரைத் தொந்தரவு செய்யக் கூடாது; புதிதாக இந்தியர் குடியேறுவதைத் தடை செய்யலாம்' என்று காந்தியடிகள் போராடி ஓர் உறுதியான ஒப்புதலைப் பெற்றார். இதே போல் கென்யாவாழ் இந் தியர் குறித்தும் ஓர் ஒப்பந்தத்துக்கு முயற்சி செய்யலாம். ஆனால் இதற்குக் கென்யாவில் குடியேறி உள்ள இந்தியர்கள் அதையே தமது தாயகமாகக் கொள்வதற்கு இணங்க வேண்டும். ஒருவேளை இது கடினமான நிபந் தனையாக இருக்கக் கூடும்.

தென்னாப்பிரிக்கர்களுடன் நான் சம்பாஷித் ததிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகப் புரிந்தது. இன ஒதுக்கலைப் பின்பற்றும் வெள்ளையர் ஆட்சியைவிட, அந்நாட்டுப் பெரும்பான்மையினரின் ஜனநாயக ஆட்சி ஏற்படுவதைக் கண்டே இந்தியர்கள் அஞ்சு கின்றனர். அந்நாட்டுப் பெரும்பான்மையின ரின் ஆட்சி என்பது நீக்ரோ ஆதிவாசித் தலைவர்களின் ஆட்சியேயாகும். இன 'ஒதுக் கல்' செய்வது மட்டுமின்றி இவர்கள் ஓர் இனத்தை முற்றிலும் விரட்டிவிட நினைப் பவர்கள். கிழக்காப்பிரிக்காவில் விஷயங்கள் போகிற போக்கைப் பார்க்கும்போது ஆப்பி ரிக்காவிலுள்ள இந்தியர்களின் அச்சம் நீங்க வழியில்லை என்றே தோன்றுகிறது.

— ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.

# என்ன சேதி?

## ஹிந்தி சினிமாவும் தமிழக மாணவர்களும்

**ப**ம்பாய் சிவசேனைக்காரர்கள் தமிழ்ப் படாதிபதிகள் தயாரிக்கும் ஹிந்திப் படங்களுக்கு ஆட்சேபம் தெரிவித்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் சென்னையில் ஹிந்திப் படங்கள் திரையிடப் படாததுதான். பின் சிவசேனைக்காரர்களுக்கு ஹிந்தி மீது அபார மான மோகம் ஏற்பட்டு இப்படிக் கூறுவதாக யாராவது நினைத்தால் அதைப் போன்ற தவறு ஒன்றுமில்லை. இதில் தொக்கி நிற்கும் விஷயம் பொருளாதார விஷயம்தான்.

பெருவாரியான ஹிந்திப் படங்கள் பம்பாயிலும் தமிழ் நாட்டிலும்தான் தயாரிக்கப் படுகின்றன. ஹிந்தி மொழியில் படமெடுத்து அந்த வருவாயினால் பயன் அடைபவர்கள் மகாராஷ்டிரர்களும் தமிழர்களும்தான். ஆகவே சென்னையில் ஹிந்திப் படமெடுத்து பம்பாய் மகாராஷ்டிரர்கள் அதைப் பார்க்கப் பணம் கொடுக்க, பம்பாய் மகாராஷ்டிரர்கள் எடுக்கும் ஹிந்திப் படத்தைத் தமிழ் மக்கள் ஏன் பணம் கொடுத்துப் பார்க்கக்கூடாது என்பது சிவசேனைக்காரர்கள் வாதம்.

சென்னையிலும் தமிழகத்திலும் ஹிந்திப் படங்கள் திரையிடப் படாததால் வட நாட்டில் முக்கியமாக பம்பாய் பட முதலாளிகளுக்கு விளையக் கூடிய நஷ்டம் மிகச் சொற்பம். தமிழ் நாட்டில் தயாரிக்கப்பட்ட ஹிந்திப் படங்கள் வடநாட்டில் காண்பிக்கப் படாவிட்டால் தமிழகத்துக்கு விளையக் கூடிய நஷ்டம் மிகப் மிகப் பெரிது. பாரத தேசமெங்கும் (தமிழக மக்களைத் தவிர்த்த) மார்க்கெட்டை இழந்து விட நேரும். இதன் விளைவாக இத்துறையை யொட்டி வாழும் லட்சோப லட்சம் தொழிலாளர்கள் வேலை இழந்து அவதிப்பட நேரலாம். இவை எல்லாவற்றையும் விட இத்தகைய மனோபாவம் மற்ற தமிழகத் தொழில் சம்பந்தமாக வட நாட்டில் வளர இடம் கொடுத்து விட்டால் தமிழகத்தின் பொருளாதாரம் என்னவாகும் என்று ஊகிக்கவே பயமாக இருக்கிறது.

தியேட்டர்காரர்களும், தமிழக அரசாங்கமும் ஹிந்திப் படங்களைத் திரையிட முன் வந்தபோது தமிழக மாணவர்களின் போக்குக் காரணமாக, ஹிந்திப் படங்கள் திரையிடப் படுவது கைவிடப்பட்டது என்பதனை அறிய வருத்தப்படாதவர் இருக்க முடியாது.

இத்தகைய சிந்தனைகளிடையில் சினிமா அதிபர் திரு ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சி பலனளிக்க வில்லை என்பதைக் காண வருத்தமாக இருக்கிறது.

ஹிந்தி — ஒரு பிரதேச மொழி. ஆட்சி மொழி என்ற அந்தஸ்தை அது பெறுவதைத் தான் ஆட்சேபிக்க வேண்டும். ஆனால் ஹிந்தியை அர்த்தமற்ற முறையில் துவேஷிப்பது நமக்கே ஹானியாக முடியும். தமிழகத் தொழில் வளர்ச்சிக்கும் வியாபாரத்துக்கும் தீங்கு விளையக்கூடிய வகையில் ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைக் கொண்டு போகலாகாது.

தமிழக மாணவர்கள் அறிவுடையவர்கள், புத்திசாலிகள் என்று பெயர் எடுத்தவர்கள். போர் முறையில், முன்னேறிச் செல்வது எவ்வளவு திரமிக்க செயலோ, அவ்வளவு திரமிக்க ராஜதந்திரமுள்ள செயலாக மதிக்கப்படுகிறது சில சமயங்களில் பின் வாங்குவதும்.

ஹிந்திப் படங்கள் திரையிடப்படுவதை எதிர்க்கும் மாணவர் தங்கள் கருத்தினை மாற்றிக்கொள்ள வேண்டும்.

## இரட்டிப்பு மகிழ்ச்சி!

**இ**ந்தியக் கிரிக்கெட்டின் சரித்திரத்திலேயே முதன் முதலாக அயல் நாட்டு மண்ணில் பாரத கோஷ்டியை வெற்றிக்கு இட்டுச் சென்ற பெருமை காப்டன் பட்டோடியைச் சேரும். அவரை வாழ்த்துகிறோம்.

அயல் நாட்டு மண்ணில் நம் இந்திய ஆட்டக்காரர்கள் தோல்விக்கு மேல் தோல்வி அடைந்து வருகிறார்களே என்று வருந்தினோம். ஆஸ்திரேலியாவில் பெற்ற தோல்விகள் நெஞ்சைத் திடுக்கிட வைத்தன. ஆனால் நியூஸிலாந்து நாட்டில் நம் இந்தியக் கோஷ்டியினர் இரண்டு தடவைகளில் வெற்றி பெற்று நமக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியை அளித்தனர்.



மூன்றுவது டெஸ்டில் வாடேகரின் அற்புதமான 143 ரன்களும் நட்கர்னி ஆறு விக்கெட்டுகளை 43 ரன்களுக்கு எடுத்ததும் மாபெரும் வெற்றிக்கு அஸ்திவாரமாக அமைந்தன.

இந்தியக் கிரிக்கெட்டிலிருந்து 'அரசியல்' ஒழிந்து விட்டால் நாம் இந்த விளையாட்டில் மேலும் சிறக்க முடியும் என்று அத்துறை அறிஞர்கள் உறுதியாகச் சொல்லுகிறார்கள். கிரிக்கெட் என்ற சொல்லே நேர்மையைக் குறிக்கும் ஒரு பதமாக உபயோகப்படும் போது அதில் 'அரசியலை'ப் புகவிடலாமா?

நியூஸிலாந்தில் பெற்ற வெற்றிகள் நமது கிரிக்கெட்டில் நல்ல ஆரோக்கியமான திருப்பத்தை ஏற்படுத்த உதவட்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

சிறிய பிரதேசமாகிய கச்சத் தீவு பற்றி எழுந்துள்ள இந்திய — இலங்கைச் சர்ச்சையில் ராமநாதபுரம் மன்னர் சில பழைய விஷயங்களைத் தெரிவித்திருக்கிறார். அவர் கூறுவதிலிருந்து நன்னம்பிக்கைக்கான ஒரு பெரிய காட்சி உதயமாகிறது. எந்த இரு நாடுகளுக்குமிடையே யாருக்கும் சொந்த மற்ற ஒரு திட்டு இருப்பது எவ்வளவு நல்ல விஷயம்! அரசியல் கலப்பின்றி, விழாக்களுக்காக இருநாட்டு மக்களும் பாஸ்போர்ட் — விஸா ஆகியன இன்றி இத்திட்டுக்களில் சந்திப்பதும், விழா முடிந்தவுடன் தத்தம் நாட்டுக்குத் திரும்புவதும் எவ்வளவு நல்ல ஏற்பாடு !

* * *

எதிர்பார்த்ததைவிடச் சர்க்கார் வருமானம் எல்லா இனங்களிலும் குறைந்திருப்பதாலேயே நடப்பு ஆண்டு பட்ஜெட்டில் ரூ. 300 கோடி துண்டு விழுந்திருக்கிறது. ஓர் எல்லையை மீறி விட்டால் விளைவு குறையும் என்பதையே சர்க்கார் வருமானத்தில் ஏற்பட்டுள்ள குறைவு காட்டுகிறது.

சர்க்காரின் கொள்கைகளால் தொடர்ந்து பற்றுக்குறை பட்ஜெட் போடவேண்டியுள்ளது. இது எல்லாப் பொருள்களின் விலையையும் உயர்த்திப் பொருளாதாரம் முழுவதையும் பாதிக்கிறது. பட்ஜெட் பற்றுக்குறையால் ரூபாயின் மதிப்பு மேலும் மேலும் குறைந்தபடியே உள்ளது. விலை உயர்வு என்பது மூடி மறைக்கப்பட்ட வரியாக ஏழைகள் மீது இறுதியில் விழுகிறது. ஏனெனில், அவர்களால் அச்சுமையை வேறு யார் மீதும் தள்ள முடியாது.

எங்கிலும் பெரு வெள்ளம் ஏற்பட்ட போது குட்டைகளும் குளங்களும் முக்கியத்துவம் இழந்து விடுகின்றன.—'யாவானர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே' என்று பகவத்கீதை சொல்வது போல். இந்த ரீதியில் பட்ஜெட்டில் பெரிய துண்டு விழுந்துள்ள போது, கண்ணுக்குத் தெரிகிற புது வரிகள் முக்கியத்துவம் இழக்கின்றன.

* * *

'வலதுசாரி', 'இடதுசாரி' என்பது பற்றிச் சிறிது சொல்ல வேண்டும். உற்பத்தியை அதிகபட்சமாக்குவதே ஒரு நாட்டின் இலட்சியம் என்று எல்லாச் சாரியினரும் ஒப்புவர். இதில் வலம், இடம் என்பதில்லை. உற்பத்தி உயர்வைத் தனிமனிதனின் லாப நோக்கத்தின் மீது அடைவதா, உற்பத்தியாளர்களின் தன்னலம் பாராட்டாத தேச பக்தியின் மீது அடைவதா, அல்லது சர்க்கார் உத்தரவு மூலமும் கட்டாயத்தின் மீது அடைவதா என்பதில்தான் கருத்துமாறுபாடுகள் உள்ளன. எதைப் பின்பற்றினால் திறமான முறையில் உற்பத்தியைப் பெருக்கலாம் என்று உணர்வதே இதற்குத் தீர்வு. அதோடு இவற்றில் எந்த உபாயத்தில் ஏற்படும் தவறுகளைக் கட்டுப்படுத்த முடியும் என்றும் பார்க்க வேண்டும். தேசபக்தியின் மீது ஏராளமான தனிமனிதர்கள் சுயநலம் பாராது நீண்ட காலத்துக்கு உற்பத்தி செய்வர் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. சாத்தியப்படுகிற சில சமயங்களில் மட்டுமே இதை ஓர் உபாயமாகக் கொள்ளலாம். எனவே, இந்த உபாயத்தை விட்டுவிடலாம். இனி, 'தனியார் லாபம்', 'சர்க்கார் கட்டுப்பாடு' இவற்றில் எது திறமான கருவியாகச் செயல்படும் என்பதே கேள்வி. தனியார் லாபத்தை உரியபடி கட்டுப்படுத்தி வைத்தால், இதுவே சர்க்கார் நிர்ப்பந்தத்தைவிடச் சிறந்ததென்று யாரும் எளிதில் காணலாம். வலது — இடது, சோஷலிஸ்ட் — கம்யூனிஸ்ட் என்பவற்றைவிட, இவ்விஷயத்திலுள்ளதே உண்மையான பிரிவுக்கோடு.

நம்பகமான, புகழ்பெற்ற ஒரு தனி முதலீட்டாளர் ஒரு முக்கியமான தொழிற்சாலை நிறுவி உற்பத்தியைப் பெருக்க முன்வருகிறார். ஆனால் நாட்டுக்கு மிகவும் முக்கியம் வாய்ந்த இத்தொழிற்சாலை தனியார் துறைக்குப் போகக்கூடாது என்பதால் இது ஆட்சேபிக்கப்படுகிறது. சர்க்காரின் மூலதனம் கொண்டுதான் இத்தொழிற்சாலையை நடத்தலாம் என்று வாதிக்கப்படுகிறது. சர்க்கார் மூலதனம் வரிச் சுமையாக மக்கள் மீதே விழுகிறது. சர்க்கார் நிறுவனமாகத் தொழிற்சாலை நடக்கும் போது நிர்வாகச் சீரழிவினால் மகத்தான நஷ்டமும் ஏற்படக் கூடும். இருப்பினும் இதுவே சரி என்பது நிகழ்கால விபரீதப் பொருளாதாரக் கொள்கைக்கு ஓர் உதாரணம். திறமை போதாவிட்டாலும் சரி, வசதி போதாவிட்டாலும் சரி, அநுபவம் போதாவிட்டாலும் சரி, சர்க்காரே உற்பத்தி உயர்வைச் சாதிக்க முடியும் என்பது வறட்டுச் சித்தாந்தம் மட்டுமல்ல; இது முட்டாள்தனமேயாகும். இது பெரிய அளவில் பரவிவிட்டால், தேசத்துக்குச் செய்யும் பயங்கரமான தீமையுமாகும்.

எதிர்க்கட்சித் தலைவர்களின் விவேகமின்மை காரணமாகக் காங்கிரஸ் வாழ்ந்து வருகிறது. எதிர்க்கட்சித் தலைவர்களிடையே பரஸ்பர இணக்கம் இல்லை. தாங்கள் மற்ற எதிர்க்கட்சித் தலைவர்களை மதிப்பதில்லை என்பதை அவர்கள் விளம்பரப்படுத்திக் கொள்ளவும் செய்கிறார்கள். இந்நிலையில் கூட்டுச் சேர்ந்து திட்டம் போடுவது சாத்தியமில்லை. சமீபகால அநுபவம் காரணமாக, இம்மாதிரிக் கூட்டுத் திட்டங்களுக்கு ஆதரவாக இருந்தவர்களும் அச்சமடைந்து விலகிப் போக நேரிடும். இவ்வாறாக, காங்கிரஸ் கட்சி தனது பிரசார கோஷங்களின் மீதும், வறட்டுக் கோட்பாடுகள் மீதும் வளர்ச்சி பெற இடம் ஏற்பட்டு வருகிறது.

* * *

தாய்மொழியையும் ஆங்கிலத்தையும் தவிர இன்னொரு மொழியை மாணவர் கற்க வேண்டுமாயின், அவர்கள் தமது அண்டை ராஜ்ய மொழி ஒன்றுக்கு முதலிடம் தர வேண்டும் என்பது என் கருத்து. ஹிந்தி பற்றிய சர்ச்சைகளும், மத்திய சர்க்கார் தந்திரங்களும் ஒருபுறமிருக்க, தமிழ் மாண

வர்கள் இன்றுபோல் தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளை அறியாமலிருப்பது சரியல்ல. இதேபோல் அந்த மொழி மாண வர்கள் தமிழறிவு பெறுததும் யுக்தமல்ல. சரளமாகப் பேசுகிற அளவுக்காவது மற்ரெரு திராவிட மொழியில் மாணவர்கள் பயிற்சி பெறுவது அவசியமாகக் கருதப்பட வேண்டும். உச்சியிலிருந்து ஒருமைப்பாடு ஏற்படுத்த முடியாது; அஸ்திவாரத்தி லிருந்துதான் தொடங்க வேண்டும்.

ஃஃஃ

தேசியக் கொடியை எரித்த மாணவர்களைத் தமிழக அரசாங்கமோ, தி. மு. க.வின் கட்சி அமைப்போ தூண்டிவிடவில்லை என்று மத்திய உள்துறை ராஜாங்க மந்திரி ஸ்ரீ வி. வி. சுக்லா திருப்தி தெரிவித்திருக்கிறார். இம் மாணவர்கள் தமக்குத் தாமே பிரதிநிதிகள், வேறு எவருக்கும் அல்ல என்று மந்திரி கூறியிருக்கிறார். இதில் நான் நிம்மதி காண்கிறேன்.

தேசக் கொடியை அவமதிப்பது பற்றிச் சட்டபூர்வமாகப் பேசுவது ஒருபுறமிருக்க, மத்திய சர்க்கார் கொள்கைக்கு மாணவர் தெரிவித்த எதிர்ப்பு அக்கொள்கையை அவர்கள் பரிசீலித்து முடிவுக்கு வந்ததன் மீதேயன்றி, வெளி அரசியல்வாதிகளின் தூண்டுதலால் அல்ல. ஹிந்தியைப் புகுத்துவதைவிட உண்மை நிலையைக் கண்டுபிடிப்பதிலேயே மத்திய சர்க்காருக்கு அதிக கவனம் இருக்குமாயின் ஸ்ரீ சுக்லா சொன்னதை முக்கியமாகக் கருத வேண்டும். இளைஞரின் எதிர்ப்பை அலட்சியம் செய்வதற்கில்லை. வருகிற தலைமுறைகளுக்கு நீதி வழங்கியாக வேண்டும். ஹிந்திப் பகுதிகளில் வாழும் எழுதப் படிக்கத் தெரியாத எளிய மக்களிடமிருந்து காங்கிரஸுக்கு வாக்குப் பெறுகிற நோக்கத்தோடு சர்க்கார் நடத்துவதைவிட, சரியான மார்க்கத்தில் அரசாங்கத்தை இயக்குவதே முறை.

ஃஃஃ

முதலிலேயே பரீட்சிக்கப்பட்டு, மத்திய சர்க்கார் உத்தியோகம் கிடைக்கும் என வாக்குறுதி பெற்ற மாணவர்களுக்குக் குறிப்பிட்ட ஒரு மொழியில் பயிற்சி தருவது நியாயம். அப்படிச் செய்யாமல், உத்தியோகத்துக்கு உத்தரவாதம் தராமலே, ஒரு போட்டியை உண்டாக்கி, ஹிந்தியைத் திணிப்பது அம் மொழியைப் பிரசாரம் செய்யத்தான் உதவுமேயன்றி, நீதிக்கு உதவாது. மக்களின் பணத்தைக் கஜானாவுக்குத் திருப்பிக் கொள்ளும் லாட்டரிச் சீட்டு போன்ற ஏமாற்றுத் திட்டமே இது. இந்தப் போக்கை ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டும்.

ஃஃஃ

ரொடீஷிய ஹைகோர்ட்டில் மரண தண்டனை விதிக்கப்பட்ட நீக்ரோக்களைப் பிராணத் தியாகிகளாக நமது பிரதமர் கருதுவதற்கு விசேஷ காரணம் ஏதேனும் இருக்குமாயின், அதைப் பிரதமரோ பத்திரிகை அறிக்கைகளோ விளக்கவில்லை. இது வருத்தத்துக்குரியது. ரொடீஷியப் புரட்சியைச் சோதனைக்குள்ளாக்குவதற்காகப் பிரிட்டிஷ் ராணி இவ்விஷயத்தில் தலையிட்டிருக்கலாம். அவ்வாறாயின் இது இங்கிலாந்துக்கும் ரொடீஷிய சர்க்காருக்கும் இடையே ஏற்பட்டுள்ள ஒரு போராட்டம். இதில் இந்தியா ஈடுபடவோ, இது பற்றிக் கொந்தளிப்படையவோ காரணமில்லை.

இங்கிலாந்து சர்க்கார் ரொடீஷிய சர்க்காரை அடக்கி வைக்க முடியவில்லை. ரொடீஷிய சர்க்காரும் அதன் நிறுவனங்களும் முன்போலவே செயல்பட்டு வருகின்றன. அதன் பிரதம நீதிபதி இவ்விஷயத்தில் ராணியின் பெயர் இழுக்கப்பட்டதற்கு உரிய முறையில் வருத்தம் தெரிவித்திருக்கிறார். (சாதாரணமாக மரண தண்டனையை ரத்துசெய்வது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பெயரில்தான்.)

நம் நாட்டு வழக்குகளை இங்கிலாந்து பிரிவி கௌன்ஸிலுக்கு நாம் எடுத்துச் செல்வதில்லை என்பதையும், நம் நாட்டில் தண்டனை விதிக்கப்பட்டவர் பிரிட்டிஷ் மன்னரிடம் ரத்து கோர முடியாது என்பதையும் நாம் மறப்பதற்கில்லை.

---

## காமகோடியின் கருணைமொழி



மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்பதற்காக அரசாங்கத்தார் அநேக திட்டங்களைப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாட்டிலும் தரித்திரம் நாளுக்கு நாள் பெருகிக்கொண் டிருக்கிறது. வாழ்க்கைத்தரம் உயர்வது என்றால் ஒருவன் இரண்டுவேளை காப்பி சாப்பிடுவது நான்கு வேளையாக வேண்டும்; குடிசையில் இருப்பவன் மாட மாளிகையில் இருக்க வேண்டும்; இரண்டு வேஷ்டி வைத்துக்கொண் டிருப்பவன் இருபது வேஷ்டிகள் வைத்துக்கொள்ளவேண்டும் என்கிற அபிப்பிராயம் வளர்ந்தால் அது பெரிய தப்பு. வாழ்க்கைத்தரம் உயர்வது என்கிற வார்த்தைக்கே அர்த்தமில்லை. வாழ்க்கைத் தரம் உயர்வது என்று சொல்லிக்கொண்டு வாழ்க்கைத் தேவைகள் நாளுக்கு நாள் மனுஷ்யர்களுக்கு அதிகமாகிக் கொண்டே போனால் நாட்டில் தரித்திரம்தான் மிஞ்சும். மனுஷ்யர்களுக்கு மானம், உயிர் இரண்டையும் காப்பாற்றிக்கொள்ள மிகமிக அத்தியாவசியமானவை எவையோ, அவை நாட்டில் உள்ள அத்தனை ஜனங்களுக்கும் கிடைக்க வேண்டும். அதற்குத்தான் திட்டம், ஒழுங்கு எல்லாம் வேண்டும்.

---

# அறுபத்தெட்டில் எழுபத்தைந்து!

மாநிலக்கல்லூரி பாட போதனையில் ஒரு பிரிவாகவே இருந்த சட்டப் படிப்புக்கு, தனி அந்தஸ்துக் கொடுத்து அதற்குத் தனிக் கட்டடமும் ஒதுக்கி அதன் முதல் முதல்வராக ரெஜினல்ட் ஏ. நெல்சன் என்னும் பாரிஸ்டரை நியமித்த ஆண்டு 1891. ஆகவே, இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே, கொண்டாடப்பட்டிருக்க வேண்டிய 'பிளாட்டினம் ஜுபிலி' என்னும் எழுபத்தி ஐந்தாவது ஆண்டு நிறைவு விழாவைச் சற்றுத் தாமதமானாலும் சிறப்பான முறையில் இப்போது கொண்டாடிவிட, சட்டக் கல்லூரி முதல்வரும், நிர்வாகிகளும் தீர்மானித்து விட்டார்கள். இதுதான் 68ல் 75 !

"இந்த விழாவை ஒட்டிப் புதிய உபகாரச் சம்பளங்களுக்கான நிதி ஒதுக்கப்படும். இதற்காகச் செல்வாக்குள்ள பல வழக்கறிஞர்கள் நிதி உதவி செய்திருக்கிறார்கள். சேலம், திருநெல்வேலி, நாகர்கோவில் போன்ற இடங்களிலுள்ள வழக்கறிஞர்கள் சங்கங்கள் தங்கள் தங்கள் பெயரில் உபகாரச் சம்பளங்கள் அளிக்க முன்வந்துள்ளன. விடுதியில் தங்கியிருக்காத மாணவர்களின் சௌகரியத்துக்காகக் கல்லூரியை ஒட்டிச் சிறு கட்டடம் திறக்கப்பட விருக்கிறது. விளையாட்டு விழாக்கள், பேச்சுப் போட்டிகள், மலர் வெளியீடு எல்லாமே உண்டு" என்று தெரிவித்தார் கல்லூரி முதல்வர் திரு ஏ. பழனிச்சாமி.

இவர் 'இன்டர் நேஷனல் லாஸ்' தொகுதியை 'சர்வதேசச் சட் . . . ' என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்து அந்த நூலின் சுரத்துக்காகத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசையும் பெற்றவர். இன்றைய மாணவர்களின் மனத்தைப் புரிந்து கொண்டு இங்கிதமாகப் பழகி வெற்றி பெறும் வித்தையில் கைதேர்ந்தவர்.

முதல்வரை சந்தித்து அதைத் தொடர்ந்து சில மாணவ மாணவிகளுடன் சம்பாஷித்து



சட்டக் கல்லூரியின் எழுபத்தைந்தாவது ஆண்டுவிழா சக்கைப் போடாக நடைபெற விருக்கிறது.

❋







1. பிரின்ஸிபால் ஏ. பழனிச்சாமி
2. எம். எம். இஸ்மாயில் எம். ஏ., பி. எல்.
3. பி. கே. வேங்கட நரசிம்மன் எம். ஏ., பி. எல்.
4. குமாரி சரளா தேவி

விட்டுத் திரும்பும் போது கடந்த பல ஆண்டுகளில் வெவ்வேறு காலங்களில் இந்தக் கல்லூரி மாணவர்கள் எப்படி இருந்தார்கள் என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் எழுந்தது.

ஏறத்தாழ ஐம்பத்தி இரண்டு ஆண்டுகளுக்குமுன் சட்டக் கல்லூரி வாழ்க்கை எப்படி இருந்தது என்று உற்சாகத்துடன் நினைவுபடுத்திக் கொண்டு சொன்னவர் ஓய்வு பெற்ற சுப்ரீம் கோர்ட் நீதிபதி திரு டி.எல். வெங்கடராமையர்.

**1914–16** ஆண்டுகளில் இவர் சட்டக் கல்லூரியில் படித்த போது முதல்வராக இருந்தவர் ஆர்தர் டேவிஸ். பால் அப்பாசாமி என்பவர் பேராசிரியர். விஞ்ஞானப் பாடங்களுக்கான பரிசோதனைகள் நடத்திப் பார்ப்பது போல், சட்டக் கல்லூரி மாணவர்கள் தாங்கள் கற்றுக் கொள்வதை நடைமுறையில் அவ்வப்போது எப்படிக் கொண்டு வருவது என்பதற்காக ஆசிரியர்கள் முன்னால் கற்பனை செய்யப்பட்ட வழக்குகளில், முழு வழக்கறிஞர்கள் போலவும் நீதிபதிகள் போலவும் பேசிப் பார்ப்பார்களாம். இதைக் கவனிக்க, பேராசிரியர்களுடன் சில சந்தர்ப்பங்களில் உயர்நீதிமன்ற நீதிபதிகள் கூட வருவார்கள்.

ஒரு கற்பனை வழக்கு — மானநஷ்ட வியவகாரம். ஐந்து மாணவர்கள் நீதிபதிகளாக அமர்ந்தார்கள். தீர்ப்பு அளிக்கும்போது திரு டி. எல். வி. மற்றவர்களுடன் இணையாமல் மாறுபட்ட தீர்ப்பு அளித்தார். பார்வையாளராக இருந்த பால் அப்பாசாமி அந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாமற் போனாலும், அது எடுத்துக் கூறப்பட்ட முறை மிகச் சிறந்ததாக இருந்தது என்று பாராட்டினார்.



திரு டி. எல்.வேங்கடராம அய்யர்

சட்டப் பாடங்களை, குறிப்பாக ரோமன் லா, ஹிந்து லா, இரண்டையும் சொல்லிக் கொடுக்கும்போது லத்தின் பதங்களும் சம்ஸ்கிருதப் பதங்களும் நிறைய உபயோகத்தில் வரும். மாணவர்கள் ஆசையுடன் இந்த மொழிகளையும் கற்றுக் கொண்டு ஆசிரியர்கள் விளக்குவதைப் புரிந்து கொள்ளத் தயாராக இருப்பார்கள்.

மாலை வேளைகளில் ஐந்து மணிக்குப் பிறகு உயர்நீதி மன்றத்தின் அலுவல்களெல்லாம் முடிந்த பிறகு, சட்டக் கல்லூரி மாணவர்களில் சிலர் உயர்நீதி மன்ற வராந்தாக்களில் போய் நின்றோ நடந்து கொண்டோ அசல் வழக்கறிஞர்கள் போல் தங்களுக்குள்ளாகவே விவாதித்துப் பார்த்துக் கொள்வார்கள். பிற்காலத்தில் உயர்நீதி மன்றம் ஏதும் அச்சத்தைத் தோற்றுவிக்காமலிருக்க இந்தப் பழக்கம் உதவுமல்லவா ?

மாணவர்கள், வழக்கறிஞர்களாகவும், நீதிபதிகளாகவும் பேசி நடித்துப் பழக்கம் பெற வாய்ப்பளிக்கும் 'மூட் கிளப்' என்ற சங்கம் அப்போது பிரசித்தி பெற்றிருந்தது. மாணவர்கள் பாடபுத்தகங்களுடன் நின்றுவிடாமல், கேஸ் ரிப்போர்ட்டுகளையும் கரைத்துக் குடிப்பார்கள்.

அனுபவமிக்க வழக்கறிஞராக இன்று தொழில் நடத்தும் திரு சி. கே. வெங்கட நரசிம்மன் சுமார் முப்பத்தி ஏழு ஆண்டுகளுக்கு முன் சென்னை சட்டக் கல்லூரி மாணவராக இருந்தவர். அப்போதெல்லாம் ஆந்திரப் பிரதேசம் சென்னை மாகாணத்தின் பகுதியாகவே இருந்ததால் ஆந்திர மாணவர்கள் கணிசமான அளவில் சட்டக் கல்லூரியில் சேர்ந்து படித்தனர். இப்போதைய ஆந்திர மாநில முதல்வராக இருக்கும் பிரும்மானந்தரெட்டி திரு வெங்கட நரசிம்மன் படித்த ஆண்டுகளில்தான் சட்டக் கல்லூரியில் சேர்ந்திருந்தார்.

இவர் காலத்தில்தான் முதன் முதலாக சட்டக் கல்லூரியில் 'கிரிக்கெட் கிளப்' தொடங்கப்பட்டது. 'மூட் கிளப்' ஓரளவு பிராபல்யத்தை இழந்திருந்தது.

இப்போது சென்னை உயர்நீதி மன்றத்தில் ஒரு நீதிபதியாகப் பணியாற்றும் திரு எம். எம். இஸ்மாயில் இதே சட்டக் கல்லூரியில் இருபத்தி மூன்று வருடங்களுக்குமுன் படித்தவர். அப்போது கே. கிருஷ்ணமேனன் முதல்வர். திரு எஸ். கோவிந்தராஜுலு நாயுடு உதவி முதல்வர். திரு கே. வி. வெங்கடசுப்பிரமணிய ஐயர் பேராசிரியர்.

வெங்கடசுப்பிரமணிய ஐயரிடம் மாணவர்களுக்குப் பக்தியே இருந்தது. அவர் வகுப்புகளில் மாணவர்கள் நிரம்பி வழி



தண்டால் எடுக்கத் தெரியுமா? ஒரே சமயத்தில் ஐம்பதுக்குக் குறையக் கூடாது!

பர்வதவர்த்தினியின் படத்தை அனுப்பியவர்:
**எஸ். சண்முகவேலு,**
111-6, வடக்குத் தெரு,
இராமநாதபுரம்

வார்கள். அவருடைய கம்பீரமான குரலும், 'ஹிந்து லா' போதிக்கும் போது அநாயாசமாக அவர் உபநிஷதங்களிலிருந்தும் வேதங்களிலிருந்தும் எடுத்துக் காட்டும் மேற்கோள்களும் கேட்போரைப் பிரமிக்க வைக்கும். வெளியார்கள்கூட இவருடைய வகுப்பை ரசிக்க உள்ளே வந்து உட்கார்ந்து விடுவார்கள்.

ஓர் ஆங்கிலேய நீதிபதிதான், நீதிமன்றத்தில் இவருடைய வாக்குவன்மையை ரசித்து விட்டு, 'இவரால் சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு நிறைய பலன் கிட்டும்' என்று பேராசிரியராக அனுப்பி வைத்தாராம். சில ஆங்கிலேய நீதிபதிகளினால் இவருடைய வேகமான ஆங்கில வாதங்களைப் பின்பற்றிப் புரிந்து கொள்ளக்கூட இயலாத நிலையும் இருந்தது.

முதல்வர் கிருஷ்ணமேனன் சில நாட்களில் காலையில் கல்லூரி வகுப்புகள் தொடங்கிச் சில நிமிடங்களுக்குப்பின்தான் உள்ளே வருவார். ஒரு நாள் காலையில் ஒரு மாணவர் தன் வகுப்பில் ஆஜர்ப்பட்டியலுக்குப் பெயர் கொடுத்து விட்டு, வெளியே நழுவ விரும்பினார். ஆசிரியர் கவனித்து விடுவாரோ என்ற அச்சமும் இருந்தது. மெதுவாக, ஆசிரியரைப் பார்த்தபடியே பின்னால் காலரியிலிருந்து இறங்கினார். அந்த நேரத்தில் அவர் பின்னால் முதல்வர் கிருஷ்ணமேனன் வந்து சேர்ந்தார். அப்படியே அந்த மாணவரை முன்னால் தள்ளி மீண்டும் வகுப்புக்குள் விட்டு விட்டுத் தம் அறைக்குப் போனாராம்.

திரு இஸ்மாயில் காலத்தில்தான் மாணவர்கள் பிரதிநிதித்துவக் கௌன்சில், தமிழ் சங்கம் எல்லாம் கொஞ்சம் சுறுசுறுப்படைந்தன. முதன் முதலாகச் சட்டக் கல்லூரி மாணவர்கள் அமரர் தேவனின் 'கோமதியின் காதலன்' தமிழ் நாடகத்தை நடத்திக் காட்டினர். திரு இஸ்மாயிலும் நடித்தார்.

திரு இஸ்மாயிலுக்கு 1951ம் ஆண்டிலிருந்து சுமார் எட்டு ஆண்டு காலம் இந்தக் கல்லூரியில் ஆசிரியராகப் பணி செய்யும் வாய்ப்பும் கிட்டியது.

'பிராக்ஸி' என்று குறிப்பிடப்படும் ஆஜர்ப் பட்டியலுக்குப் பதில் குரல் கொடுக்கும் பழக்கம் உள்ள ஒரு மாணவரை திரு இஸ்மாயில் திணறவைத்த சம்பவம் சுவையானது. இவருடன் மாநிலக் கல்லூரியில் படித்த ஒருவர், சட்டக் கல்லூரி ஆசிரியராக இருந்த போது இவரிடம் மாணவராக வந்து சேர்ந்தார். அவர் ஒரு நாள் இவர் வகுப்புக்கு மட்டம் போட்டார். ஆஜர்ப்பட்டியல் எடுத்தபோது அவர் குரலுக்குப் பதிலாக வேறு குரல் 'இருக்கிறேன்' என்று எழுந்தது. ஆசிரியர் ஆள் மாறாட்டத்தை உணர்ந்து கொண்டார். மீண்டும் ஒரு முறை ஆஜர்ப் பட்டியலைப் படித்தார். அதே மாறு குரல் உதவிக்கு வந்தது. அந்தக் குரலுக்கு உடையவரை கவனித்துக் கொண்டு 'வகுப்பு முடிவில் என்னைச் சந்திக்கவும்' என்று சொல்லிவிட்டுப் பாடத்தைத் தொடர்ந்தார்.

வகுப்பு முடிந்ததும் அந்த மாணவர் வந்தார் ''உங்கள் கையெழுத்தைப் போடுங்கள்'' என்று ஆசிரியர் சொன்னதும் அவர் சாக்குப் போக்குகள் சொல்லி நழுவ முயன்றார். ''மிஸ்டர்! சட்டம் படிக்கும் நீங்கள் செய்தது கிரிமினல் குற்றமாயிற்றே! ஆள் மாறாட்ட வியவகாரமல்லவா? நீங்கள் யாருக்காக இரவல் குரல் கொடுத்தீர்களோ, அவர் எனக்கு நன்கு தெரிந்தவர் அல்லவா?'' என்று ஆசிரியர் சொன்னதும் மாணவர் வெல வெலத்துப் போனார். ஆசிரியருக்கு எல்லா மாணவர்களையும் நன்கு தெரியும் என்ற எண்ணமும் நிலவ ஆரம்பித்து விட்டது.

நான்கு ஆண்டுகளுக்குமுன் படித்துப் பட்டம் பெற்றவர் குமாரி சரளாதேவி. சட்டப் படிப்புப் படிக்கும் போதே, உயர் நீதிமன்றத்தில் தன்னைப்போன்ற பெண் வழக்கறிஞர்கள் எப்படி வாதாடுகிறார்கள் என்று கவனம் செலுத்துவதில் ஆர்வம் உண்டு. மாணவர்கள், பூனைக் குரலும் பறவைக் குரலும் எழுப்பி மாணவிகளைக் கிண்டல் செய்வதன் மூலம் மாணவிகளுக்குத் தைரியத்தையே உண்டாக்குகிறார்கள் என்பது இவர் அபிப்பிராயம். ஆரம்பத்தில் ஒரு மாதிரியாக இருந்தாலும், போகப் போக, பயம், துணிவாக மாறி விடுமாம்! நீதிமன்றங்களில் எதிர்த்தரப்பு வழக்கறிஞர்களின் தாக்குதல்களை எல்லாம் சமாளிக்கத் தைரியத்தை இங்கேயே பெறலாமே!

''பயிற்சி முடிந்து முதல் நாள், நான் தனியாக, என் சீனியர் பக்கத்தில் இல்லாமல், கோர்ட்டார் முன் நின்ற சில கணங்களை என்னால் என்றும் மறக்க முடியாது. பதற்றத்தில், கோர்ட்டாரைப் பார்த்துப் பேச்சில் உபயோகிக்க வேண்டிய சட்டத் துறைப் பதங்களை மறந்து சாதாரணமுறையில் பேசிவிட்டேன்'' என்றார் இவர்.

''இந்தக் கட்டடம், சென்ற நூற்றாண்டின் கடைசியில் கட்டப்பட்டது. அப்போதிலிருந்து இன்று வரை ஒரு செங்கல்கூட இங்கு மாற்றப்படவில்லை. அன்று வகுப்புகளுக்குப் போட்ட மர ஆசனங்களும் அப்படியே...... அவ்வளவு உறுதியாக இருக்கின்றன'' என்று இந்தக் கல்லூரி ஆசிரியர்களில் ஒருவரான திரு மாயகிருஷ்ணன் குறிப்பிட்டது நினைவுக்கு வருகிறது.

எத்தனையோ 'ஜாம்பவான்களை' நீதித் துறைக்கு அளித்திருக்கும் இந்தக் கல்லூரி, இன்னும் அதே மரபில், அதே சூழ்நிலையில் எத்தனை மேதைகளை வருங்காலத்தில் அளிக்குமோ, பார்க்கலாமே! **— பட்டினத்தார்**



# முகம்மது-பின்-துக்ளக்

இந்த நாடகத்தில் 'சோ' மத்திய சர்க்காரையும் ராஜ்ய சர்க்காரையும் மட்டுமல்ல, மக்களையும் குறைகூறித் தாக்குகிறார். அப்படியிருந்தும் அரசாங்கம் இந்நாடகம் தொடர்ந்து நடக்க அனுமதித்திருக்கிறது. மக்களும் ஒவ்வொரு நாடகத்தின் போதும் பெருந் திரளாக வந்து 'ஹவுஸ்புல்' ஆக்குகிறார்கள்.

இதிலிருந்தே இந்த நாட்டில் ஜனநாயகம் தழைக்கும் என்ற நம்பிக்கை உறுதிப்படுகிறதல்லவா? எப்போது நல்லெண்ணத்துடன் செய்யப்படுகிற கிண்டலையும் கேலியையும் கண்டு ஆத்திரப்படாமல் சிரிக்கக் கற்றுக் கொண்டு விடுகிறோமோ அப்போது திருந்தவும் இடமிருக்கிறது; முன்னேறவும் வாய்ப்பிருக்கிறது அல்லவா?

ஆனால் ஒன்று. மக்கள் சோ செய்யும் தாக்குதலைச் சும்மா கேட்டுக் கொண்டு போய்விடவில்லை. பதில் தாக்குதலும் செய்கிறார்கள். நாடகம் நடக்கும்போதே விமரிசனமும் நடக்கிறது:

''சோ எப்பவுமே இப்படித்தான். 'ஸப்ஸ்டன்ஸே' கிடையாது. வெறும் தமாஷ் மட்டும்தான்.''

''இரண்டு வாரத்து ஆனந்தவிகடனையும் கல்கியையும் எடுத்து வைத்துக் கொண்டு அதில் உள்ள ஜோக்குகளை மட்டும் படித்துப் போட்டு விட்டால் எப்படி? அப்படித்தான் இவர் நாடகமும்!''

''அடுத்த டைலாக் என்னன்னு முன்கூட்டியே சொல்லிக்கிட்டு வரேன். நூற்றுக்கு எண்பது கரெக்டா இருக்கும் பாரு!''

இப்படி யெல்லாம் சிறந்த விமரிசனங்கள் காதில் விழுகின்றன!

அறுபது சதவிகித நடிப்பு, முப்பத்தி ஐந்து சதவிகித மேடைப் பிரசங்கம், ஐந்து சதவிகித அநாவசியக் குழப்பம் ஆகிய மூன்று ஐயிட்டங்களும் சேர்ந்ததுதான் முகம்மது-பின்-துக்ளக். புதைபொருள் ஆராய்ச்சிப் பேராசிரியரின் குடும்பத்திலே நடிப்பு மிளிர்கிறது. பிரதம மந்திரி 'சோ'வின் காபினெட் மீட்டிங்குகளில் மேடைப் பிரசங்கம் ஒலிக்கின்றது. மகாதேவன், பதுதா வியவகாரம் குழப்பத்தில் முடிகிறது.

பேராசிரியர் ரங்காச்சாரியாக நடிக்கும் அம்பி இந்த நாடகத்தில் சுலபமாக முதல் இடம் பெற்று விடுகிறார். அதற்கான வாய்ப்புக்கள் அவருக்கு நிறைய இருக்கின்றன. தேர்தல் காலங்களில் வானொலி அறிக்கைகளைக் கேட்கும் ஆர்வம் சில குடும்பங்களில் எவ்வளவு தீவிரமாக இருக்கிறது என்பதை அற்புதமாகக் காட்ட ஏற்பாடு செய்திருக்கிறார் சோ — நாடக டைரக்டர் என்ற முறையில். நாடகத் துறையில் சோவின் நகைச்சுவை நடிப்பு என்றுமே ஏ ஒன்தான்.

ரங்காச்சாரியின் மனைவி ஸ்ரீமதியாகத் தோன்றும் சுகுமாரி அவ்வப்போது காட்சி மாற்றங்களுக்காக மேடையை விட்டு உள்ளே போனாலும், பார்ப்பவர்களின் மனத்தில் நிரந்தரமாகத் தங்கி விடுகிறார். அநாயாசமான ஐயங்கார் பாணி நடிப்பு. அதற்காகப் பூஜை செய்யும்போது அசைவ உணவுகளின் பெயரைச் சொல்லித்தான் சிரிப்பை எழுப்ப வேண்டுமா என்ன? வேறு முறையைக் கையாளக் கூடாதோ?

சம்பந்திகளாகத் தோன்றி 'பாலிடிக்ஸ்' டிஸ்கஸ் பண்ணும் முத்துவும், வி. ஆர். சீனிவாசனும் கனகச்சிதம்.

கதை அமைப்பில் கொஞ்சமாவது கனம் இருக்க வேண்டுமே என்ற கவலை இருந்தால்தான் சோவுடைய சிருஷ்டிகள் ஓரளவு காலத்தோடு போட்டி போட்டு நிற்கும். தேர்தல் கால வாக்குறுதிகள் போல் அவருடைய நாடகங்களையும் பொதுமக்கள் மறந்துவிட்டால் கலை உலகுக்குத்தானே நஷ்டம்!



# வாளோங்கி வளரும் வாய்ப்பு...

# ராம்கோ பிராண்ட் போர்ட்லண்ட் சிமெண்ட்

## கொண்டு நிறுவப்பட்டுள்ள

**இந்திய-உலக வர்த்தக தொழில் பொருட்காட்சியின் மைய கோபுரம்....**




சென்னையில் நடைபெற்ற
இந்திய-உலக வர்த்தக
தொழில் பொருட்காட்சியின்
நடுவில் அமைக்கப்பட்டுள்ள
154 அடி உயரமான
"டாக்டர் விஸ்வேஸ்ரய்யா
கோபுரம்" முழுவதும் கட்டுவதற்கு
**ராம்கோ பிராண்ட் சிமெண்ட்**
உபயோகிக்கப்பட்டுள்ளதை
மகிழ்வுடன் அறிவிக்கிறோம்.
நாட்டின் புனர் நிர்மாண
நற்பணியில்
**மதராஸ் சிமெண்ட்ஸ்**
நிறைவேற்றி வரும் சிறந்த
பங்குக்கு இதுவும் ஓர்
உயர்ந்த சான்றாகும்.

உற்பத்தியாளர் :

**மதராஸ் சிமெண்ட்ஸ்
லிமிடெட்,**
ராஜபாளையம்.

ராஜபாளையம், "ராம்கோ"
குழுவைச் சேர்ந்த
ஓர் ஸ்தாபனம்.

IAM-MC 1051

# செய்திப் படங்கள்

1. ராஷ்டிரபதி இந்த வருஷ சங்கீத நாடக அகாடமிப் பரிசை வயலின் வித்துவான் திரு கே.எஸ். வேங்கடராமையா அவர்களுக்கு வழங்குகிறார். 2. தருமபுர ஆதீனம் 25வது மகாசன்னிதானமும் திருவாவடுதுறை ஆதீனம் 22வது மகாசன்னிதானமும் முதன்முறையாகச் சமீபத்தில் சந்தித்தனர். 3. கோயமுத்தூர் மக்கள் சமீபத்தில் பழம்பெரும் தேச பக்தர் திரு சுப்ரி அவர்களைப் பாராட்டிக் கௌரவித்தனர். கோவை அதிபர் ஜி. கே. சுந்தரம் எம். பி. திரு சுப்ரி அவர்களுக்குப் பழத் தட்டை வழங்குகிறார். 4. கும்பகோணம் மகாமகம் சர்வோதயக் கண்காட்சியைத் தொடங்கி வைத்த மதுரை பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு தொ.பொ.மீ. அவர்களுக்குத் தமிழ்நாடு சர்வோதயப் பொருளாளர் திரு பாலகிருஷ்ணன் பட்டு சால்வையை அணிவிக்கிறார். 5. இலங்கை, நாரேலியாவில் சமீபத்தில் நடைபெற்ற இலங்கை தொழிலாளர் காங்கிரஸின் 22வது மகாநாட்டில் திரு எஸ். தொண்டைமான் , தலைமையுரை ஆற்றுகிறார்.














# சிக்கட்டிய கிரிக்கட்டு

**கா**ப்டன் தம்மைவிட வயதான, அநுபவம் பெற்ற ஆட்டக்காரருடன் சேர்ந்து 'பாட்' செய்து கொண்டிருந்தார். அந்த முதியவர் தொட்ட பந்து விக்கெட் கீப்பரின் கையில் கிடைத்து விட்டது. பந்து வீசுபவர் 'ஹௌ இஸ் தட்?' என்று உயிரை விட்டுக் கத்தினர். அம்பயரும் 'அவுட்' என்று கையைத் தூக்கிவிட்டார். அந்த முதிய 'பாட்ஸ் மன்' தயங்கி நின்று முணுமுணுத்துவிட்டுப் பிறகு மெதுவாக மைதானத்தை விட்டு விலகினர். காப்டன் தம் ஆட்டம் முடிந்ததும் வந்து அந்த முதிய ஆட்டக்காரரின் நடத்தைக்குக் காரணம் கேட்டார்.

''பந்து என் மட்டையில் பட்டதே எனக்குத் தெரியவில்லை காப்டன்! நான் தொடர்ந்து விளை யாடலாமோ என்று நினைத்தேன்!'' என்றார் அந்த முதிய ஆட்டக்காரர்.

''அது கிரிக்கெட் அல்ல!'' என்று ஓங்கி யடித் தார் காப்டன் வொரல்.

வெள்ளையர்தான் கிரிக்கெட் காப்டனாக இருக்க வேண்டும்; கறுப்பர்களுக்குத் தலைமை ஏற்கத் தெரியாது என்றஎண்ணத்தைப் பொய்யாக்கித் தம் ஆட்டத் திறமையினாலும் அதற்கும் மேலாகத் தம் பண்பாட்டினாலும் மேற்கிந்தியக் கிரிக்கெட்டுக்குப் புகழும் பெருமையும் தேடித் தந்ததோடு, அகில உலகிலும் மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக் காரர்களுக்கு மாபெரும் வெற்றி தேடித் தந்தவர் வொரல். காப்டன் வொரல், தாம் ஆடும்பொழுது 'அவுட்' என்று தெரிந்து கொண்டு விட்டாரானால் அம்பயர் கைதூக்கக் காத்திராமல் தாமாகவே மைதானத்தை விட்டு வெளியேறும் பண்பு படைத்தவர்! மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக் குப் பண்பைக் கற்றுக் கொடுத்த காப்டன் வொரல் இன்று இல்லை. தம் நாற்பத்திரண் டாவது வயதிலேயே இவ்வுலகை விட்டு மறைந்து விட்டார். அவர் நினைவைப் போற்ற கிரிக்கெட் உலகம் முன் வந்துள் ளது. அவரது பெய ரால் நினைவு நிதி திரட்டி, சர்வகலா சாலை மாணவர்களின் விளையாட்டுக் கலையை அபிவிருத்தி செய்தல், காமன்வெல்த் நாடு களிலுள்ள விளையாட் டுக் கலைஞர்களுக்கு வசதி செய்தல், வொரல் குடும்பத்துக் குப் பாதுகாப்பும் கல்வி வசதியும் அளித் தல் போன்ற பல நற் காரியங்களைச் செய்ய விருக்கிறது.

**வொ**ரல் நினைவு நிதி கிரிக்கெட் ஆட் டம், சர்வதேச கிரிக் கெட் குழுவினருக்கும் முதன் மந்திரி கிரிக்கெட்கோஷ்டியினருக்கும் சேப்பாக் கம் மைதானத்தில் நான்கு நாட்கள் நடந்தது. அதிகாலை நான்கு மணிக் கும், ஐந்து மணிக்கும் சாப்பாட்டு மூட்டைகளோடு டிக்கெட் வாங்கத் தவம் கிடக்கும் சென்னை கிரிக்கெட் ரஸிகர்கள் சாவதானமாகப் பத்தரை மணிக்கு வந்தார்கள். வந்திருந்த சுமார் மூவாயிரம் பேருக்கும் ''வாருங் கள்! நீங்களாவது இந்த மட்டும்

காப்டன் ஸ்டுவேர்ட்

சட்டில்





பர்னேஷா

வந்தீர்களே!'' என்று சென்னை கிரிக்கெட் சங்கத்தினர் ஆரத்தி சுற்றி வரவேற்காத குறைதான்!

''என்ன ஸார்! சேப்பாக்கம் கிரிக்கெட் சரித்திரத்தில் இத்தனை குறைவான ரஸிகர்களைப் பார்த்ததில்லையே?'' என்று பல கிரிக்கெட் பந்தயங்களைக் கண்டு ரசித்த பழம் பெருச்சாளி ஒருவர் அங்கலாய்த்தார்.

''இதென்ன ஸார், டெஸ்ட் மாச்சா? ஆடறவங்க இரண்டாந்தர ஆசாமிகள்! நம் முதல்தர ஆட்டக்காரர்கள் நியூஸிலந்துக்குப் போய் விட்டார்களே! எப்படிக் கூட்டம் இருக்கும்?'' என்று சமாதானம் சொன்னார் இன்னொருவர்.

''பள்ளிக்கூடம், கல்லூரிகள் நீண்ட நாட்கள் மூடியிருந்து இப்போதுதான் திறந்திருக்கிறபடியால் மாணவர்கள் பார்வை கிரிக்கெட் பக்கம் திரும்பவில்லை!''

''ஸார்! தமிழக அரசு லீவு விடும் என்று எதிர்பார்த்தோம். விடவில்லை!'' என்று குறைப்பட்டார் கிரிக்கெட் சங்க ஆசாமி ஒருவர்.

''வந்திருக்கும் ஆசாமிகளைவிடப் போலீஸ்காரரும் ஹோம்கார்டும் அதிகமாக இருப்பார்கள் போலிருக்கிறதே! அவர்கள் உட்கார்ந்து பார்க்கட்டுமே?''

''இதோ ஆட்டம் ஆரம்பமாகிவிட்டது. சர்வதேசக் கட்சி பாட்டிங்! முதன் மந்திரி கட்சி பீல்டிங்!''



இபதுல்லா

''பாகிஸ்தான் ஆட்டக்காரர் இபதுல்லா சாஹேப் துரானி பந்தில் 'ஸிக்ஸர்' அடிச்சுட்டாரே! அவர் ஆடறதைப் பார்த்தால் சதம் போட்டுட்டுத்தான்விடுவார்போலிருக்கிறது!'' என்றார் கிரிக்கெட் ரஸிகர்.

''இங்கே பார்த்தீர்களா? நம்ம பக்கத்தில் ஓய்வுபெற்ற நீதிபதி ராஜமன்னார் அவர்களின் தந்தை வெங்கடரமண ராவ் 'மாட்ச்' பார்க்க வந்திருக்கிறார். அவரும் சதம் போட்டு விடுவார்!''

''ஏழடி மனுஷர் கிரெய்க்கைப் பார்த்தீரா? அவர் மட்டையைக் குனிந்து பிடித்து ஆடியே சதத்தை எட்டிவிட்டாரே!''

''சென்னை மானம் கப்பலேறாமல் தப்பியது. முதல் இன்னிங்ஸில் குமார் ஐந்து விக்கெட்டை வீழ்த்தி விட்டார். வெங்கடராகவன் மூன்றைத் தகர்த்தார்!'' என்றார் சென்னை அபிமானி.

''அப்படியிருந்தும் சர்வதேசக் கிரிக்கெட் கட்சி 360 எண்ணிக்கையைத் தாண்டிவிட்டதே, ஐயா!''

''நம்ம பசங்க போடு போடுன்னு போடப் போறாங்க, பாருங்க!''

''ஆஹா, பிரமாதம்! சதம் போட்ட ஆட்டக்காரர்களிடம்தான் 'ஆட்டோகிராப்' வாங்குவான்னு பேரு. இந்த வாண்டுப் பயல்கள் கெட்டிக்காரங்க. பூஜ்யம் போட்டு விட்டு வந்த துரானியைச் சுற்றி வட்டவளைவாக நின்னு ஆட்டோகிராப் வாங்குறாங்க!''

''அவர் "பூஜ்யர்" அன்றோ? வாங்க வேண்டியதுதானே?''

''இதென்ன? நம் இந்திய ஆட்டக்காரர்கள் வரிசையா ஒருத்தர் பின்னாடி ஒருத்தர் 'அவுட்'டாகி வர்றாங்களே!''

''164 ஆல் அவுட்; 'பாலோ ஆன்' கொடுத்து நம்ம பசங்களோட மானத்தை வாங்கிவிடப் போறாங்க!''





1. சதமெடுத்த கிரெய்க்குக்குக் கடிகாரப் பரிசு.
2. துரானியைச் சுற்றிச் சிறுவர்கள்.

''சுவாமி! இது உதவிநிதிக் கிரிக்கெட் மாட்ச். மூன்றும் நாளே ஆட்டம் முடிந்து போனால் நாலாம் நாள் 'கலெக்ஷன்' என்ன ஆகிறது!''

''ஹனுமந்த் சிங் தலைமையில் ஆடிய நம்ம பசங்க ஆட்டம் கோவிந்தா! நீர் வொரல் நினைவு நிதியைப் பற்றிக் கவலைப்படுகிறீரே!''

''வொரல் உயிர் பெற்றுப் பிழைத்து வந்தால் நம்ம இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் 'டல்' ஆட்டத்தைக் கண்டு இன்னொரு முறை உயிரை விட்டு விடுவார்!''

''அதுதான் கடைசி நாள் ஆட்டத்திலே பகவானைப் பார்த்து இந்திய கிரிக்கெட் கோஷ்டிக்கு 111 எண்ணிக்கையைக் கொடுத்து விட்டாரே!'' என்று முற்றுப் புள்ளி வைத்தார் சென்னை அபிமானி.

சர்வதேச கிரிக்கெட் கோஷ்டி வெகு நன்றாக ஆடி வெற்றிபெற்று விட்டது. நம் இந்தியக் கோஷ்டியினர் ஆட்டத்தைக் கோட்டை விட்டு விட்டார்கள். சர்வதேசக் கோஷ்டியில் பௌலர் அண்டர்வுட் இந்திய விக்கெட்டில் பெரும்பாலானவற்றைக் குறைந்த எண்ணிக்கையிலே வீழ்த்தி விட்டார்! சர்வதேசக் கிரிக்கெட் குழுவின் 'பீல்டிங்' தரமாக அமைந்திருந்தது. அனைவருமே கோட்டை போல் நின்று ரன்களைத் தடுத்து நிறுத்தி விட்டார்கள்.

சதத்துக்குமேல் எடுத்த கிரெய்க் துரதிர்ஷ்டவசமாகக் கையில் எங்கேயோ அடிபட்டுக் கொண்டு விட்டார். கைக் கட்டோடு வந்த அவருக்குக் கிரிக்கெட் சங்கக் காரியதரிசி ஸ்ரீராம் ஒரு கைக் கடிகாரத்தைப் பரிசாகக் கொடுத்தார்! பௌலிங்கில் குமாருக்குக் கடிகாரப் பரிசு கிடைத்தது.

இந்திய கோஷ்டியின் தோல்வி பற்றிப் பலரது காரசாரமான விவாதங்கள் காதில் விழுந்தன.

''ஸார்! இந்திய கோஷ்டியினர் வொரல் நினைவுநிதிக்கு ஆடுகிறோம் என்பதையேமறந்து விட்டாங்க. மேற்கிந்தியத் தீவு ஆட்டக்காரர்களிடமிருந்து இவர்கள் இன்னும் கத்துக்கலியே? அவங்க தோற்கிற மாட்சையும் வெற்றிக்குத் திருப்புவார்கள். இவங்க ஆட்டத்தை 'டிரா'கூடச் செய்யாமல் இப்படிக் கோட்டை விட்டு விட்டார்களே!'' என்று பழம் பெரும் கிரிக்கெட் ஆட்டக்காரர் ஒருவர் நவின்றார்.

''நம்ம கோஷ்டியினர் இந்த மாட்சிலே ஸீரியஸாகவே ஆடல்லே! எக்ஸிபிஷன் மாட்சா நினைச்சுட்டாங்க.''

''நம்ம ஆட்டத்திலே 'எக்ஸிபிட்'பண்ணிக்க என்ன இருக்கு!''

''ஸார்! நல்ல சேதி! நியூஸிலாந்திலே நம்ம இந்திய கோஷ்டியினர் வெற்றி முகத்தை நோக்கி முன்னேறுகிறார்கள்!''

''அயல்நாட்டு மண்ணில் அவர்களது இரண்டாவது வெற்றி இந்தத் தோல்வியை மறக்கச் செய்யும்; சரிக்கட்டிக் கொண்டு போகும்!''

— பி.எஸ்.எம்.

## சொந்தமானால் சுமை, 'ஓசி'யானால் சுவை!






# உங்கள் அபிமான சினிமா நட்சத்திரத்தின் இச்சைக்கினிய

## மர்பி டிரான்ஸிஸ்டர்கள்

வீட்டிலே உல்லாச ஓய்வு பெற, திரை நட்சத்திரம் தர்மேந்திராவுக்கு உற்ற துணை மர்பி மாடல் 816. சிறப்பான செவியின்பம் தருவதற்கென்றே டிசைன் செய்யப்பட்ட மாடல் 816 அதன் வகையிலே ஒரு 'நட்சத்திர' டிரான்ஸிஸ்டராகும்.

*உங்கள் அருகிலுள்ள மர்பி வியாபாரியிடம் இன்றே இம்மாடலைக் காணுங்கள்... தேர்ந்தெடுக்கப் பலவேறு இதர மர்பி டிரான்ஸிஸ்டர்களும் உண்டு!*



மாடல் டிபி 0816



மாடல் டிபி 0579



மாடல் டிபி 0509

## மர்பி டிரான்ஸிஸ்டர்



*Murphy sets the standard*

NAS. 53



# மகாபாரதம்

## ராஜாஜி

"இந்தக் துக்கத்துக்குக் காரணம் என்ன? தயவுசெய்து சொன்னீர்களானால் ஏதாவது நிவர்த்திக்க முடியுமானால் நானும் செய்வேன்" என்றாள் குந்திதேவி.

பிராமணன், "அம்மணி! இந்த ஊருக்கருகில் ஒரு குகை இருக்கிறது. அதில் ஒரு கொடிய அரக்கன் இருக்கிறான். அவன் பெயர் பகாசுரன். மிகுந்த பலவான். அவன் இந்தத் தேசத்தையும் நகரத்தையும் பிடித்துக் கொண்டிருக்கிறான். சென்ற பதின்மூன்று வருடங்களாக அவனால் இந்த நகரம் பிடிக்கப்பட்டு வருகிறது. இந்தத் தேசத்துக்கு அரசனாயிருக்கும் க்ஷத்திரியன் வேத்திரகிய நகரத்தில் இருக்கிறான். அவனால் நம்மைக் காப்பாற்ற முடியவில்லை. இந்த அரக்கன் குகையில் வசித்துக் கொண்டு ஊரிலுள்ள மாதர், பாலர், விருத்தர் எல்லோரையும் இஷ்டப்படி கொன்று தின்று கொண்டு வந்தான். ஊரார் எல்லோரும் சேர்ந்து ஒரு நியமம் செய்து கொள்ளும்படி அவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். 'நினைத்தபடி கொல்லாதே. உனக்கு வேண்டிய மாமிசமும் அன்னமும் தயிரும், சாராயமும், கள்ளும் பலவிதமான பானங்களும் பாத்திரங்களில் வைத்து வண்டிக்கு இரண்டு கருப்புக் காளை மாடுகளையும் கட்டி வீட்டுக்கு ஒரு மனிதனாக வாரம் ஒரு முறை அனுப்புகிறோம். நீ அன்னத்தையும் மாடுகளையும் ஆளையும் தின்றுவிட்டு மற்றவர்களை இம்சிக்காமல் இருக்க வேண்டும்' என்று ஊரார் வேண்டிக் கொள்ள, அவனும் அங்கீகரித்து அவ்வாறே நடந்து வருகிறது. அதுமுதல் இந்தப் பலவானான அரக்கன் மற்றப் பகைவர்களிடமிருந்தும் காட்டு மிருகங்களிடமிருந்தும் இந்தத் தேசத்தை ரட்சித்து வருகிறான். இந்த உடன்படிக்கைப்படி அநேக வருடங்களாக நடந்து வருகிறது.

"இந்தக் கஷ்டத்தினின்றும் தேசத்தை விடுவிக்க யாராவது எங்கேயாவது ஆரம்பம் செய்தால் அவர்களை உடனே அந்த ராக்ஷசன் பிள்ளை பெண்களுடன் கொன்று தின்றுவிட்டு அடக்கி வருகிறான். அம்மணி! எங்கள் பரம்பரை அரசன் எங்களைக் காப்

பாற்ற முடியவில்லை. சக்தியுள்ள ராஜாவை அடையாத ஜனங்கள் மனைவி மக்களைப் பெறுதலே கூடாது. தகுந்த அரசனை முதலில் அடைய வேண்டும். அதன் பிறகே மனைவியையும் தனதான்யங்களையும் அடைய வேண்டும். சரியான அரசன் இல்லாவிடில் மனைவி ஏது? தனம் ஏது? இந்த வாரத்தின் ஆளை அனுப்பும் முறை இந்தக் குடும்பத்துக்கு நேர்ந்திருக்கிறது. எங்கேயாவது ஒருவனை விலை கொடுத்து வாங்கி அனுப்புவதற்கு எனக்கும் பொருள் கிடையாது. மனைவியையாவது, குழந்தையையாவது அரக்கனிடம் அனுப்ப என்னால் முடியவில்லை. எல்லோரையும் அழைத்துக் கொண்டு அரக்கனிடம் நான் செல்வேன். எங்கள் எல்லோரையும் சேர்த்து அந்தப் பாவி தின்றுவிட்டுப் போகட்டும், அம்மா! நீ கேட்டதனால் உனக்குச் சொன்னேன்'' என்றான்.



இந்த ஏகசக்ரபுரிக் கதையில் எவ்வளவு அரசியல் தத்துவங்கள் அடங்கி நிற்கின்றன என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

குந்தி பீமனிடம் கலந்து பேசி விட்டுத் திரும்பி வந்து சொன்னாள்: ''இந்தப் பயத்துக்காக நீங்கள் துன்பப் படவேண்டாம். எனக்கு ஐந்து குமாரர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் இந்த அரக்கனுக்கு இரையை எடுத்துக் கொண்டு செல்வான்'' என்றாள்.

பிராமணன் ''ஐயோ! கூடாது! அதிதியாக வந்திருக்கும் உன் மகனுடைய உயிரை எனக்காகப் பலி கொடுக்க நான் ஒப்ப மாட்டேன்'' என்றான்.

குந்தி, ''பிராமணரே! பயப்படாதீர். என் மகன் மந்திர சக்தி பெற்றவன். அந்த அரக்கனைக் கொன்று வருவான். இவன் அரக்கர்களைக் கொன்றதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் இதை நீங்கள் யாரிடத்திலும் சொல்லக் கூடாது. சொன்னால் அந்த வித்தை அவனுக்கு உதவாது'' என்றாள். வெளியில் தெரிந்தால் துரியோதனனுடைய ஆட்களுக்கு இவர்கள் பாண்டவர்கள் என்று தெரிந்து போகும் என்று பயந்து இவ்வாறு கேட்டுக் கொண்டாள்.

குந்தி செய்த ஏற்பாட்டினால் பீமனுக்குத் தாங்க முடியாத சந்தோஷமும் உற்சாகமும் உண்டாயிற்று. சகோதரர்கள் பிக்ஷை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தார்கள். பீமசேனன் முகத்தில் புதிய ஒரு மகிழ்ச்சிக் குறிப்பைக் கண்ட தரும புத்திரன் பீமன் ஏதோ சாகஸம் செய்ய எண்ணியிருக்கிறான் என்று யூகித்துக் குந்தியிடம் போய், ''அம்மா! பீமன் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறானே, அவன் என்ன செய்ய யோசித்திருக்கிறான்?'' என்று கேட்டான். குந்தி விஷயத்தைச் சொன்னாள்.

யுதிஷ்டிரன், ''இதென்ன செய்யக் கூடாத சாகஸத்தைச் செய்கிறாய்! பீமனுடைய வலிமையை ஆதாரமாகக் கொண்டு நாம் சிந்தையற்றுத் தூங்குகிறோம். வஞ்சகர்கள் பறித்துக் கொண்ட ராஜ்யத்தை இவனுடைய பராக்கிரமத்தால் அல்லவோ மறுபடியும் அடைய எதிர்பார்க்கிறோம். பீமனால் அல்லவோ நாம் அரக்கு மாளிகையில் தீக்கு இரையாகாமல் தப்பினோம்? இந்தப் பீமனை இழப்பதற்கு வழி தேடினாயே! துயரங்களில் மனம் நொந்து போய்ப் புத்தியை இழந்து விட்டாய் போலிருக்கிறது'' என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொல்ல, குந்தி தேவி, ''யுதிஷ்டிரனே! இந்தப் பிராமணர் வீட்டில் நாம் பல நாட்கள் சுகமாக வசித்தோம். மனிதர்களாகப் பிறந்தவர்களுடைய கடமையும் லட்சணமும் உபகாரத்துக்குப் பிரதி உபகாரம் செய்வதேயாகும். பீமனுடைய பராக்கிரமத்தை நான் அறிவேன். நீ பயப்பட வேண்டாம். வாரணவதத்தி லிருந்து நம் அனைவரையும் தூக்கி வந்த பீமன், இடும்பனைக் கொன்ற பீமன்; இவனைப் பற்றி எனக்குப் பயமில்லை. இந்தக் குடும்பத்துக்கு உதவுவது நம்முடைய கடமை'' என்றாள்.

பிறகு நகரவாசிகள் பலவகை மாமிசங்களோடு சேர்ந்த அன்னத்தையும் குடங்கள் நிறையத் தயிரும் பானங்களும் வண்டியில் வைத்துக் கொண்டு பிராமணன் வீட்டண்டை வந்தார்கள். இரண்டு கருப்புக் காளை மாடுகள் பூட்டிய அந்த வண்டியில் பீமன் ஏறி அரக்கனுடைய குகைக்குச் சென்றான்.

வாத்திய முழக்கத்தோடு வண்டி சென்றது. குறிப்பிட்ட இடம் போய்ச் சேர்ந்ததும், கூட வந்த ஊர் ஜனங்கள் நின்று விட்டார்கள். பீமன் மட்டும் வண்டியை ஓட்டிப் போனான். அவ்விடத்தில் எலும்பும் மயிரும், ரத்தமும் கிடந்தன. துண்டுபட்டுச் சிதறிக் கிடக்கும் கை கால், தலைகளையும் கண்டான். கழுகுகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. பொறுக்க முடியாத நாற்றமாக இருந்தது. பீமன் வண்டியை நிறுத்தி விட்டுப் போஜன பண்டங்களை எல்லாம் அவசர அவசரமாகச் சாப்பிட ஆரம்பித்தான். ''நான் அரக்கனோடு யுத்தம் செய்யும்போது அன்னமெல்லாம் இறைந்து போய்விடும். தவிர இந்த அரக்கனைக் கொன்ற பிறகு பிணம் தொட்ட தீட்டு உண்டாகும். சாப்பிட முடியாது'' என்று முன்னதாகவே எல்லாவற்றையும் சாப்பிட்டு விடுவதாகத் தீர்மானித்து அவ்வாறே செய்ய ஆரம்பித்தான்.

வெகு நேரம் கோபத்துடன் காத்துக்கொண்டிருந்த அரக்கன், பீமன் செய்வதையெல்லாம் தூரத்திலிருந்து பார்த்து இன்னும் அதிக கோபாவேசமானான். பீமனும் அரக்கனைக் கண்டு அவனைப் பெயரிட்டு அழைத்தான். பெரிய சரீரமும் அடர்ந்த மீசையும் தாடியும் தலைமயிரும் காது வரையில் அகன்ற வாயும் கொண்ட அந்தப் பயங்கரமான அரக்கன் பீமனைத் தூக்கிச் செல்ல ஓடி வந்தான். பீமசேனன் சிரித்துக் கொண்டே அவனைக் கவனிக்காதவன் போல் (அவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு) வேறு புறம் நோக்கி உட்கார்ந்து அன்னத்தைச் சாப்பிட்டுக் கொண்டே இருந்தான். ராக்ஷசன் ஓடி வந்து முதுகில் ஓர் அறை அறைந்தான். பீமன் அந்த அடியை வாங்கிக் கொண்டு திரும்பிப் பாராமல் சாப்பிட்டுக் கொண்டேயிருந்தான். பிறகு குடத்தை எடுத்துத் தயிரையும் குடித்துவிட்டு வாயைத் துடைத்துக்கொண்டு எழுந்து ராக்ஷஸனைத் திரும்பிப் பார்த்தான்.

அதன்மேல் இருவருக்கும் பெரிய யுத்தம் நடந்தது. பகனைப் பீமன் உதைத்துக் கீழே தள்ளி ''ராக்ஷஸா! களைப்பாறு'' என்பான். பிறகு ''எழுந்து வா'' என்பான். அசுரன் அநேக தடவை பீமனால் தள்ளப்பட்டு மீண்டும் மீண்டும் எழுந்து வந்து போர் புரிந்தான். முடிவில் பீமன் அரக்கனைக் கீழே தள்ளி முதுகின் மேல் முழங்காலை வைத்து அவன் எலும்பை முறித்தான். அசுரன் பயங்கரமான சத்தம் செய்து வாயில் ரத்தம் கக்கிக் கொண்டு உயிர் நீத்தான். பிணத்தைப் பீமன் இழுத்து வந்து நகரத்தின் கோபுர வாயிலில் போட்டுவிட்டுப் பிறகு பிராமணனுடைய வீட்டுக்குப் போய் ஸ்நானம் செய்து, தாயாரிடம் நடந்ததைச் சொல்லி, அவளையும் ஊராரையும் மகிழச் செய்தான்.

# 17. திரௌபதி சுயம்வரம்

ஏகசக்ரபுரத்தில் பிராமண வேஷமும் பிராமண வாழ்க்கை முறையும் அனுசரித்துத் தாங்கள் யார் என்று ஒருவருக்கும் தெரியாமல் மறைவாகப் பாண்டவர்கள் வாசம் செய்துகொண்டிருந்த காலத்தில் பாஞ்சால ராஜனான துருபதன் மகள் திரௌபதிக்குச் சுயம்வர ஏற்பாடு நடந்தது. தானங்களைப் பெறவும் வேடிக்கை பார்க்கவும் ஏக சக்ரபுரத்தில் பல பிராமணர்கள் சுயம்வர சபைக்குப் போவதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். திரௌபதியை உத்தேசித்துப் பாஞ்சாலம் போக, தன் மக்கள் விரும்புவதைக் குறிப்பால் குந்தி அறிந்தாள்.

''நாம் இந்த நகரத்தில் இவ்வளவு காலம் வாசம் செய்தோம். ஒர இடத்தில் நெடுங்காலம் வசிப்பது நல்லதல்ல. பாஞ்சால தேசம் மிகச் செழிப்பாக இருப்பதாகக் கேள்வி. இந்தப் பிரதேசத்திலுள்ள காடுகளையும் தோட்டங்களையும் பார்த்தோம்! பார்த்ததையே பார்த்தால் முன்போல் சந்தோஷம் உண்டாகாது. பிக்ஷையும் குறைந்து வருகிறது. புதிய இடத்துக்குப் போவது நலம். துருபதனுடைய தேசத்துக்குப் போகலாம்'' என்று தானாகவே யுதிஷ்டிரனிடம் சொன்னாள். லௌகிக சாமர்த்தியத்தில் குந்தி யாருக்கும் குறைந்தவளல்ல.

பிராமணர்கள் கூட்டம் கூட்டமாகப் பாஞ்சாலத்தில் நடக்கும் சுயம்வரத்துக்குப் போனார்கள். அவர்களோடு பாண்டவர்களும் சென்றார்கள். நெடுநாட்கள் நடந்து துருபதனுடைய அழகிய நகரத்தைச் சேர்ந்தார்கள். நகரத்தையும் ராஜ மாளிகைகளையும் பார்த்து விட்டு, ஒரு குயவனுடைய

# புதிதாக அறிமுகப்படுத்தும்

# உஷா ஃப்ளோரா

**அழகான, பல வகையிலும் உபயோகமுள்ள தையல் மெஷின் நேராகவும், வளைந்து வளைந்தும். சித்திர வேலைப்பாட்டுடனும் தைப்பதற்கு ஏற்றது.**

★ நேராகத் தைத்துக்கொண்டிருக்கும்போது ஒரு விசையை நகர்த்துதில் எப்படி வேண்டுமானாலும் கோணலாகத் தைக்கமுடியும்.
★ அகலத்தை மட்டும் கட்டுப்படுத்த பொத்தான்கள் இருப்பதால் ஒரு குறிப்பிட்ட அகலத்திற்குள் குறுக்கும் நெடுக்குமாகவோ சித்திர அலங்கார முறையிலோ எப்படி வேண்டுமாயினும் தைக்கலாம்.
★ உடனடியாக ஒரு பொத்தானை அழுத்தினால் எதிர்புறமாகத் தைக்க முடியும்.
★ பாபினில் நூல் சுற்ற ஆடோமாடிக் விசை.
★ இயல்பாகவே பட்டையாக டார்னிங் தையல் தைக்கும் விசை காரணமாக துணியின்மேல் அழுத்தம் சீராக இருக்கும்.
★ துணியை நகர்த்திக் கொடுக்கும் விசையை மூன்று நிலைகளில் பொருத்தும் குமிழ் ஏற்பாடு.
★ கீலுள்ள வகை முகப்புத் தகடு-வெளிச்ச வசதியுள்ளது.
★ நூலை ஒரே சீராக எடுத்துக்கொடுக்கும் ஸ்பூன் பின் மடங்கும் ஸ்பிரிங் அமைந்துள்ளது.
★ மேல்மூடி ஸ்குருவினால் முடுக்கப்படுவதால், எண்ணெயிடக் கழட்டுவது சுலபம்.
★ திறந்த விசை ஷட்டில்ரேஸ்.
★ அழகிய இருநிற வர்ணப் பூச்சு ஏறபாடு.

*நிருபிக்கப்பட்ட*
*நம்பகத்தன்மைக்கு.....உஷா*



JEC/26 TAM

வீட்டில் இடம் செய்து கொண்டு தங்கினார்கள். பாஞ்சால நகரத்திலும் பாண்டவர்கள் பிராம்மண விருத்தியை அனுசரித்து வந்தார்கள். ஊரில் யாருக்கும் இவர்கள் இன்னார் என்று தெரியாது.

துருபதனுக்கும் துரோணருக்கும் சமாதானம் ஏற்பட்டிருந்த போதிலும், துரோணருடைய விரோதத்தினால் துருபதனுக்குக் கவலையாகவே இருந்து வந்தது. அருச்சுனனுக்குத் தன் மகள் திரௌபதியைக் கொடுத்து விவாகம் செய்து முடிக்க வேண்டும் என்பது துருபதனுடைய ஆசை. அப்படிச் செய்து விட்டால் துரோணருடைய பகை குறையும். யுத்தம் வந்தாலும் இந்தச் சம்பவத்தால் தன்னுடைய வலிமை அதிகமாகும் என்று அவன் யோசனை. பாண்டவர்கள் வாரணாவதத்தில் இறந்து விட்டார்கள் என்பதைக் கேட்டதும் அவன் மிகவும் துயரப்பட்டான். பிறகு அவர்கள் தப்பிப் பிழைத்திருக்கலாம் என்று ஒரு வதந்தி பரவி வந்தது. அதைக் கேட்டுக் கொஞ்சம் சந்தோஷம் அடைந்து வந்தான்.

சுயம்வர மண்டபம் வெகு அழகாக நிருமாணிக்கப்பட்டிருந்தது. ராஜ குமாரர்களும் விருந்தினர்களும் தங்குவதற்கு மண்டபத்தைச் சுற்றிப் பல விடுதிகள் கட்டி அலங்கரிக்கப்பட்டிருந்தன. கண்ணைக் கவரும்படியான வேடிக்கைகளும் காட்சிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பதினாலு நாட்கள் அற்புதமான விழா நடந்தது.

எஃகுத் தந்திகளால் திரிக்கப்பட்ட நாண் கொண்ட ஒரு பெரிய வில் சுயம்வர மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்தது. அந்த வில்லை வளைத்து எஃகு நாணை அதில் பூட்டி, அம்பு எய்து மேலே வெகு உயரத்தில் அமைக்கப்பட்டிருந்த ஒரு பொன்மயமான லட்சியத்தை அடிக்க வேண்டியது. இடையில் சுழலும் யந்திரம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அந்தச் சுழல் யந்திரத்திலிருந்த துவாரத்தின் வழியாக அம்பு செல்ல வேண்டியது. சுழல் யந்திரத்தினால் தடைப்படாமல் அம்பைச் செலுத்தி லட்சியத்தை அடித்த வீரன் தன் மகளை அடையலாம் என்று துருபதன் பிரகடனித்தான்.

சுயம்வரத்துக்கு நாற்றிசையிலிருந்தும் வீரர்கள் வந்திருந்தார்கள். திருதராஷ்டிர புத்திரர்களும் கர்ணனும், கிருஷ்ணனும், சிசுபாலனும், ஜராசந்தனும், சல்லியனும் உள்பட நூற்றுக் கணக்கான அரசர்கள் வந்து குழுமினார்கள். சுயம்வர சம்பவத்தைப் பார்க்க வந்த பொதுஜனக் கூட்டமும் மிகப் பெரிது. சபையில் கடலைப்போல் கம்பீர ஓசை நிரம்பிற்று. வாத்தியங்களும் மங்கல சப்தங்களும் கோஷித்தன. முன்னால் ஒரு குதிரை மேல் திருஷ்டத்யும்னன் தங்கைக்கு வழி செய்து கொண்டு வந்தான். பின்னால் மஞ்சன நீராடி அகிற்புகையினால் கூந்தலின் ஈரத்தைப் போக்கிப் பட்டாடை தரித்துக் கொண்டு, இயற்கை அழகே ஆபரணமாகப் படைத்த திரௌபதி, கையில் மாலையை எடுத்துக் கொண்டு யானையினின்று இறங்கிச் சபையில் பிரவேசித்தாள். அவள் அழகைக் கண்டு களிப்பும் பரவசமுமுற்ற வீரர்களைக் கடைக்கண்ணால் பார்வையிட்டுத் திரௌபதி சபை மத்தியில் நடந்து மேடைக்குச் சென்றாள். பிராமணர்கள் மந்திரங்கள் ஓதி அக்கினியில் அவி அளித்தார்கள். சுவஸ்தி வசனம் சொல்லப்பட்டு வாத்திய கோஷம் அடங்கிய பின், கம்பீரமான குரல் படைத்த திருஷ்டத்யும்னன், தன் சகோதரியை மண்டபத்தின் நடுவில் கைப்பிடித்து நிறுத்தி, கூடியிருந்த சபையோரைப் பார்த்து:

"இங்கே பிரசன்னமாயிருக்கிற வீரர்கள் எல்லோரும் கேட்க வேண்டும். இதோ, வில்! இதோ லட்சியம்! இவையே அம்புகள்! யந்திரத் துவாரத்தின் வழியாக ஐந்து சரங்களை எய்து, குலமும் ரூபமும் பலமும் பொருந்திய மன்னர்களுள் எவன் லட்சியத்தை அடிக்கிறானோ, அவன் என் சகோதரியை இப்பொழுதே பாரியையாக அடைவான். இது சத்தியம்" என்று சொல்லி; அங்கே வந்து அமர்ந்திருக்கும் அரசர்களுடைய பெயர்களையும் குலத்தையும் திரௌபதிக்கு வரிசைக் கிரமமாக எடுத்துச் சொன்னான்.

புகழ்பெற்ற அரச குமாரர்கள் ஒவ்வொருவராக எழுந்து வந்து வில்லைத் தூக்கி நாண் ஏற்ற முடியாமல், அவமானப்பட்டுத் திரும்பினார்கள்.

சிசுபாலன், ஜராசந்தன், சல்லியன், துரியோதனன் இவர்களும் பார்த்து ஏமாற்றமடைந்தார்கள்.

கர்ணன் எழுந்து வந்ததும் சபையிலுள்ள எல்லோரும் இவன் நிச்சயமாக வெற்றி பெறுவான் என்று எதிர் பார்த்தார்கள். வில்லை வளைத்து நாண்பூட்ட ஒரு மயிரிழையேதான் இருந்தது. அப்போது வில்லானது பளீர் என்று அவனைத் திருப்பி அடித்தது. சபையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கியதும் பிராமணக் கூட்டத்தின் மத்தியில் உட்கார்ந்திருந்த ஒருவன் எழுந்தான். (தொடரும்)

# டென்னிஸ் ராணி

ஹாலந்து நாட்டில் சைக்கிள் விடுவதை அரச பரம்பரையினரிலிருந்து சாதாரண மக்கள் வரை பழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். பொப்பிலி குமாரராணி ஹாலந்துக்கு டென்னிஸ் பந்தயம் விளையாடச் சென்ற போது அவருக்குச் சைக்கிள் ஒன்றைப் பரிசாகக் கொடுத்து விட்டனராம்.

''எனக்குச் சைக்கிள் விடத் தெரியாது! எனக்குச் சைக்கிள் எதற்கு?''

''டென்னிஸ் போட்டியில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு ஆட்டக்காரருக்கும் பரிசு கொடுத்துவிட்டோம். நீங்களும் சைக்கிள் வைத்துக் கொள்ள வேண்டியதுதான்!'' என்று கூறி, ஹாலந்து நாட்டு விளையாட்டு நிர்வாகிகள் இந்திய ராணிக்குச் சைக்கிள் கற்றுக் கொடுக்கவும் முன் வந்து விட்டனர். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் டச்சு மக்கள் இந்திய ராணி சைக்கிள் விடுவதை அதிசயத்துடன் வந்து எட்டிப் பார்த்தார்களாம்.



பொப்பிலி குமாரராணி பி. ஏ. (ஹானர்ஸ்) அரசியல் பாடம் எடுத்துத் தேறியவர். அவர் கல்லூரியில் பயின்ற காலத்தில் மாகாணக் கல்லூரிக்காகவும், ராணிமேரி கல்லூரிக்காகவும் டென்னிஸ் ஆட்டங்களில் கலந்து கொண்டிருக்கிறார். முதன் முதலில் எம். ஸி. ஸி. நடத்திய பந்தயத்தில் டென்னிஸ் மன்னர் திரு ஆர். கிருஷ்ணனின் சகோதரி லக்ஷ்மியை இறுதி ஆட்டத்தில் வென்று சென்னையின் முதல் தர ஆட்டக்காரி என்ற புகழைப் பெற்றார். ஐரோப்பாவில் உள்ள டென்னிஸ் கழகங்களும் பத்திரிகைகளும் சேர்ந்து குமார ராணியை ஐரோப்பாவில் நடக்கும் டென்னிஸ் போட்டிகளில் கலந்து கொள்ள அழைத்தன.

''ரஷ்யாவைத் தவிர மற்ற ஐரோப்பிய டென்னிஸ் பந்தயங்களில் கலந்து கொண்டேன். அங்கு பெண்கள் டென்னிஸ் விளையாட்டில் சிறந்து விளங்குகிறார்கள். ஆண்களுக்குச் சமமாக ஆடும் திறமை பெற்றிருக்கிறார்கள். சர்வதேச டென்னிஸ் போட்டிகளில் விம்பிள்டன் ஆட்டக்காரிகளில் பெரும்பாலோர் கலந்து கொண்டனர். குவார்ட்டர் பைனல்வரை அடைவது பிரம்மப் பிரயத்தனம்தான். இந்திய ராணி ஒருத்தி ஐரோப்பாவில் டென்னிஸ் ஆடுவது முதல் தடவையாதலால் நிறையப்பேர் ஆட்டத்தைக் காண வந்தார்கள். பத்திரிகைகளெல்லாம் படங்கள் போட்டுப் பிரமாதமாக எழுதியிருந்தன!'' என்று கூறி, ஸ்பெயின் தேசத்தின் பிரசித்திபெற்ற 'புதிய ஸ்பெயின்' பத்திரிகையைக் காண்பித்தார். 'மினி ஷர்ட்டில் இந்திய ராணி' என்று பல படங்களை வெளியிட்டு நிறைய எழுதியிருந்தது.

படம் : நன்றி 'ஹிந்து'

''பெண்மணிகள் புடவை கட்டி நடப்பதே அயல் நாட்டாருக்கு வியப்பு. ஸ்ரீமதி ஜி. நரசிம்மன் புடவை கட்டியபடியே டென்னிஸ் பந்தயம் ஆடி வென்ற கதையைச் சொன்னேன். அவர்களுக்கு ஒரே ஆச்சரியம்; அவர்களை நம்ப வைக்க முடியவில்லை. அவர்களுக்குப் புடவை கட்டியவர் டென்னிஸ் ஆடிய புகைப்படத்தையே அனுப்பினேன்!

''டென்னிஸ் ஆட்டமென்றால் என் கணவர் ஸ்ரீ கோபாலுக்கு உயிர். அவரும் சிறந்த ஆட்டக்காரர். அவருக்கும் என் பெற்றோர் கொடுத்துள்ள சுதந்திரத்துக்கும் நான் ரொம்பவும் கடமைப்பட்டவள்!'' என்றார் பொப்பிலி குமார ராணி.

சென்னை எழும்பூர் நகரசபை ஸ்டேடியத்தில் ஆந்திர நடிகை கமலா தேவி செமி பைனல் ஆட்டத்தில் பொப்பிலி குமார ராணியோடு ஆடினார். தம் பருத்த உடலோடு கமலா தேவி எப்படி ஆடுவாரோ என்றிருந்தது. சென்னை முதல் தர ஆட்டக்காரி பொப்பிலி குமார ராணிக்கு அவர் நல்ல எதிர்ப்பைக் கொடுத்தார். ஐரோப்பாவில் குளிர்ப் பிரதேசத்தில் ஆடி விட்டுக் குமாரராணி சென்னையில் நல்ல வெய்யிலில் வந்து ஆட வேண்டியிருந்தது. அவருக்கு வெய்யில் ஒத்துக் கொள்ளவில்லை. இருந்தாலும் அவர் நன்றாக ஆடி, 6-4, 6-4 என்ற எண்ணிக்கையில் கமலா தேவியை வென்றார். இறுதி ஆட்டத்தில் ஸ்ரீமதி ஜயா பாலசுப்பிரமணியத்தோடு குமாரராணி ஆடவிருக்கிறார்.

—குண்டுமணி



# மௌனத்தருவி



கேரளத்திலே ஒருசில ஆண்டுக ளுக்குமுன் நிகழ்ந்த ஒரு பரபரப் பூட்டும் உண்மை நிகழ்ச்சி. பாதிரி யார் ஒருவர் இனக் கவர்ச்சி காரண மாக ஒரு பெண்ணைக் கொலை செய்து விட்டதாகக் குற்றச்சாட்டு. அதன் அடிப்படையில் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்புக்குப் பங்கம் விளை யாமல் உண்மை இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற முடிவோடு எடுக்கப்பட்ட படம் மௌனத்தருவி. கதையென்றாலும் அதற்குக் கண் ணும் மூக்கும் வைத்து, உள்ளத் துக்கு நிம்மதி வழங்கியிருக்கிறார்கள்.

கடைசியிலே உண்மைப் பாதிரியா ரின் நிலையை டாக்குமெண்டரியாக உணர்த்தித் தார்மிக நம்பிக்கைக்கு ஆக்கம் தேடியிருக்கிறார்கள்.

மீனுக்குட்டி அவ்யாகிருதச் செய லில் இறங்குவதற்குத் தூபம் போடு கிறான் ஒரு ரிக்ஷாக்காரன். அவன் வலையில் சிக்குகிறார் ஒரு குடும்பஸ் தர். பலன், ஒரு குழந்தைக்கு அவள் தாயாராகிறாள். தமது தவற்றுக்குப் பிராயச்சித்தமாக அவளுக்கு வாழ்க் கைப் பணம் தரச் சம்மதிக்கிறார் அவர். அது பாதிரியாரின் மூலம் மாதந்தோறும் அவளுக்குக் கிடைக் கிறது. வேற்றூருக்கு மாற்றலாகிய பாதிரியாரை மீனுக்குட்டி காணச் செல்வதும், அவர்மீது ஐயம் வலுக்க இது உதவுவதும் உண்மை நிகழ்ச்சிக் குக் 'கதை வலு'த் தருகிறது. அதுவே பாதிரியார்மீது கொலைக் குற்றத்தைச் சுமத்திக் குடும்பத்தின் கௌரவத்தைக் காக்கவும் தூண்டு கிறது, மூத்த மகனை.

கற்பனை நிகழ்ச்சியையும், உண்மை நிகழ்ச்சியோ என்று தோன்றும்படி படம் பிடிக்கும் கேரளக்காரர்கள், உண்மை நிகழ்ச் சியே ஒரு கற்பனையோ என்று தோன்றக்கூடிய அளவில் சில இடங் களில் சித்திரித்திருக்கிறார்கள் என்றால், அது ஏற்றமா, இறக்கமா? ரிக்ஷாக்காரராக வரும் அடூர்பாசி யின் நகைச்சுவை எடுபடாமல் நகைப்புக்கிடத்தைத்தான் தருகி றது. பாதிரியாராக வரும் சத்யன், சாந்தமாக நடித்துத் தாம் ஏற்ற பாத்திரத்துக்கு மெருகு சேர்க்கிறார். மீனுக் குட்டியாக வரும் ஷீலாவின் இனக் கவர்ச்சி கொலை நடக்கும் வரையில் நீடிக்கிறது. இது என்ன கவர்ச்சிக் கொலையோ?

செவிக்கினிய இரு பாடல்களும், ஒருசில கேரளக் காட்சிகளும், உண்மைச் சம்பவம் என்ற பரபரப் பும் தயாரிப்பாளர்களுக்கு வெற்றி தேடித்தர முயல்கின்றன. உண்மை யில் வெற்றிதானா அது?



# பணமா? பாசமா?

புரட்சி! புரட்சி! தமிழ்ப் படத் துறையிலே ஒரு புரட்சி! மீனாட்சி தொழிற்சாலை முதலாளியின் மகள் சாந்தி அந்தத் தொழிற்சாலை காவல்காரர் மகனைத் தானாகவே போய்க் காதலித்து மணம் புரிந்துகொள்கிறாள்! எலக்டிரிக் டிரெயின் காதல்!

முதலாளி மகன் நாகேஷ் 'எலந்தம் பயம்' விற்கிற கண்ணம்மா — விஜய நிர்மலாவை 'இஸ்து'க்கிறான்!

தமிழ்ப் பட உலகில் புரட்சி வேறு எந்த ரூபத்தில் வந்துவிடும் என்று நினைத்தீர்கள்?

படம் முழுதும் பணம் பெரிதா, பாசம் பெரிதா என்கிற போட்டி! ரூபாய்க்கு மதிப்பில்லாத இந்தக் காலத்திலகூட எஸ். வரலட்சுமி பணத்துக்கு வக்காலத்து வாங்குகிறாள்! லட்சுமியல்லவா? அவள் பணம் பக்கம் சேருவதில் வியப்பில்லை.

மீனாட்சி தொழிற்சாலை முதலாளி டி.கே. பகவதி. அப்பாவாகத் தத்ரூபமாக நடிக்கிறார். ஆரம்பத்தில் அப்பாவி அப்பாவாகத் தோன்றினாலும் போகப் போக அமைதியும் உறுதியும் மிக்க அவரது குண இயல்பு நம்மைக் கவர்ந்துவிடுகிறது. நடிப்பில் முதலிடம் பெறுகிறார் இப்படத்தில். ஏழைக்கும் பணக்காரனுக்கும் பாலமாக அமைந்து 'ஜனநாயக சோஷலிஸ'த்தைத் திரைப்படத்தில் நிறைவேற்றி வைக்கிறார்!

ஜெமினி கணேசன் கதாநாயகன், சித்திரக்காரன், காவல்காரர் மகன். கதாநாயகி சரோஜா தேவி மின்சார ரயிலில் வருவாள், அவளைக் காதலித்துக் கஷ்டப்பட வேண்டும் என்பதற்காகவே காத்துக் கொண்டிருக்கிறார் ஜெமினி. மீனாட்சி தொழிற்சாலை முதலாளி பகவதி தம் மகள் சாந்தியை— சரோஜா தேவியை — தினம் காரில் அனுப்புகிறவர் மின்சார ரயிலில் அனுப்பி வைத்து ஏழை — பணக்காரர் காதலை நிறைவேற்றி வைக்கிறார்!

வரலட்சுமி வராமலே இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று நினைக்குமளவுக்குச் சோதித்துவிட்டார்! அவரது 'ஹிஸ்டீரியா' கூச்சல் பார்ப்பவர்களையும் பைத்தியமாக அடித்துவிடும்போல் சிரமப்படுத்துகிறது.

இயக்குநர் திலகம் கோபாலகிருஷ்ணன் தயாரிப்பு என்றால் புதுமைக்கு இடம் இருக்கும், உழைப்புக்கு மதிப்பு இருக்கும். ஆனால் அவரது முழுத் திறமையும் இதில் காணாதது நமது துரதிர்ஷ்டம். வசனம் பல இடங்களில் மெச்சும்படியாக அமைந்திருக்கிறது. 'பணமா, பாசமா' — 'ஓஹோ' என்று சொல்லிப் பாராட்டிவிடவும் முடியாது; படுமட்டம் என்று சொல்லி ஒதுக்கித் தள்ளவும் முடியாது. நடுத்தரக் குடித்தனக்காரர் நிலையில் படம் அமைந்திருக்கிறது.

சில பாட்டுக்களின் சொற்கள் 'செக்ஸ் அப்பீ'லுக்குரிய முறையில் அமைந்திருக்கின்றன.

'பணமா? பாசமா?' எதற்கு வெற்றி? பணத்தை முக்கியமாகக் கருதினால் மக்கள் சினிமா பார்ப்பதில் பாசம் வைப்பார்களா? ஆகவே பாசத்துக்குத்தான் வெற்றி!

மொத்தத்தில்: இயக்குநர் திலகம் ஏமாற்றி விட்டார்!

அனுபவம் புதுமை

# பத்திரிகை உலகம் பார்!

கி.ராஜேந்திரன்



"ஹெய்டல்பர்க்" என்றால் அச்சாபீஸில் இருக்கும் யாருக்குமே முதல்தரமான அச்சிடும் இயந்திரம் என்பது தெரியும். அப்படிப்பட்ட ஹெய்டல்பர்க் இயந்திரங்களைத் தயாரிக்கும் ஸ்தாபனம் ஜெர்மனியில் ஹெய்டல்பர்க் நகரில் உள்ளது. இது தவிர வேறு பல அச்சு இயந்திரத் தயாரிப்பு ஸ்தாபனங்களும் ஜெர்மனியில் உண்டு. முதல்தரமான அச்சு இயந்திரங்களைப் பல ரகங்களில் தயாரிக்கும் ஜெர்மனியில் பத்திரிகைகளுக்கா பஞ்சம்? மிகப் பெரிய பத்திரிகைக் காரியாலயங்கள் சிலவற்றைப் பார்த்தேன் ஃபிராங்பர்ட், பெர்லின், மியூனிக் ஆகிய நகரங்களில்.

அச்சாபீஸ் என்றால் பல கோடிக்கணக்கில் முதலீடு செய்து தொடங்கப்பட்டவை. இத்தகைய நிறுவனங்கள் முதல்தரமான இயந்திரங்களை வைத்துக் கொண்டு ஏழெட்டுப் பத்திரிகைகள், சஞ்சிகைகளை வெளியிடுகின்றன. ஒரே ஸ்தாபனத்திலிருந்து முதல்தரமான பத்திரிகையும் மிக மட்டமான பத்திரிகையும் பிரசுரமாகும். ஒன்றில் நேரக்கூடிய நஷ்டத்தை மற்றொன்று ஈடு செய்யும்! வேறு பல பத்திரிகைகள் தங்களுக்கென்று அச்சகம் வைத்துக் கொள்ளாமல் வேறு ஓர் அச்சகத்தில் பணம் கொடுத்து அச்சடித்துக் கொள்கின்றன. லண்டனில் வெளியாகும் டெய்லி டெலிகிராப் வாரமொரு முறை விசேஷ அனுபந்தம் வெளியிடுகிறது. பல வர்ணங்களில் தயாராகும் இதை ஜெர்மனியில் அச்சிடுகிறார்கள்! லண்டனில் காரியாலயத்தினர் பக்கங்களைத் தயாரித்து அனுப்பி விடுகின்றனர். சஞ்சிகை ஜெர்மனியில் அச்சாகி லண்டனுக்குப் பறக்கிறது விமானத்தில்.

ஆக, ஒரே இயந்திரம் காலையில் ஒரு கருத்தையும் மாலையில் நேர்மாறான கருத்தைக் கொண்ட வேறு ஒரு பத்திரிகையையும் அச்சிடும் விநோதத்தைக் காணலாம். இதற்கும் ஒரு படி மேலே போகிறது, "தென் ஜெர்மன் தினசரி". மியூனிக்கில் பிரசுரமாகும் இதில் வரும் செய்திகள் பெரும்பாலும் காரியாலயத்தில் அந்த அந்தத் துறைக்கென்று உள்ள நிபுணர்களால் எழுதப்பட்டவை. எழுதியவர்களின் பெயர்களுடனேயே செய்திகள் பிரசுரமாகின்றன. உதாரணமாக அராபிய — இஸ்ரேயில் யுத்தம் என்ற செய்தி வந்தால் அதை அப்படியே பிரசுரிக்காமல் அதன் பின்னணியையும் கவனித்துக் காரணங்களை ஆராய்ந்து, செய்திக் கட்டுரை வடிவில் தருகிறார்கள். இதனால் இதே பத்திரிகையில் முதல் நாள் ஒரு கருத்தும் மறு நாள் அதே பக்கத்தில் அதே இடத்தில் மாற்றுக் கருத்தும் வெளியாகின்றன. வாசகர்கள் இருதரப்பு வாதங்களையும் தெரிந்துகொண்டு பயனடைய வேண்டும் என்று பத்திரிகையை நடத்துவோர் விரும்புகின்றனர்.

இந்தக் காரியாலயத்துக்கு நான் சென்றிருந்த தினம் இப்பத்திரிகையில் இந்தியத் திரைப் படங்கள் பற்றி ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. ஜெர்மன் மொழியில் இருந்த அதை எனக்குப் படிக்க முடியவில்லைதான். ஆனால் அதைப் படித்திருந்த ஒருவர், "இந்தியத் திரைப்படங்களில் காதலர்கள் முத்தமிட நெருங்கி வந்து விட்டு உடனே ஆடவும் பாடவும் ஆரம்பித்து விடுவார்களாமே ?" என்று வியப்புடன் கேட்டார்.

"ஆமாம், அதோடு ஓடிப் பிடித்தும் விளையாடுவார்கள்" என்றேன்.

தென் ஜெர்மன் தினசரியில் பணியாற்றி வரும் டாக்டர் ஷுஸ்டர் இந்தியாவில் நீண்ட காலம் இருந்திருக்கிறார். இந்திய மொழிகள் சிலவற்றை அறிந்திருக்கிறார். "ராஜாஜி சௌக்கியமா?" என்று என்னை விசாரித்து விட்டுத் தம்முடன் இருந்த சக ஊழியர்களுக்கு ராஜாஜியைப் பற்றி விவரித்துக் கூறினார்.



இடது பக்கம்: நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை நிமிஷத்துக்கு ஆயிரம் வார்த்தைகளை அனுப்பும் எலெக்ட்ரானிக் சாதனத்தைப் பயன்படுத்துகிறது. கீழே: கம்ப்யூட்டரின் உதவியால் செய்திகள் தாமாகவே அச்சுக் கோக்கப்படுகின்றன. இந்தப் பக்கத்தில் கீழே: தாம்ஸன் ஃபௌண்டேஷன் மாணவர்கள்.




இந்தத் தினசரியைப் பொறுத்தமட்டில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு விசேஷம் உண்டு. ஹிட்லர் ஜெர்மானியருக்குத் தமது கொள்கைகளை விளக்கி எழுதிய 'மெயின் காம்ப்' என்ற நூலைப் பல பதிப்புக்கள் அச்சடிப்பதற்காக அச்சுக் கோத்துப் பக்கங்கள் தயாராக இருந்தன. யுத்தத்துக்குப் பின் இதனை உருக்கி அந்த உலோகத்தைக் கொண்டு முதல் நாள் பத்திரிகைக்கான பக்கங்களை அச்சுக் கோத்தார்கள். ஹிட்லரது கொள்கைகள் அழிந்தொழிந்து அந்த இடத்தில் சுதந்திரக் கருத்துக்கள் தடையின்றித் தழைத்தோங்க வேண்டும் என்ற பேராவல் அவர்களுக்கு.

டெலிவிஷன் தோன்றிய பிறகு மேநாடுகள் பலவற்றிலும் பத்திரிகைகளுக்குப் பெரும் சோதனைகள் ஏற்பட்டிருக்கின்றன. குறிப்பாக மாத வார சஞ்சிகைகள் பல மடிந்தே விட்டன. விளம்பரங்கள் பத்திரிகைகளுக்குக் கிடைப்பது அரிதாவதுடன் திறமை மிக்க பத்திரிகையாளர்களை டெலிவிஷன் ஈர்த்துக் கொள்வதாலும் சிரமம் ஏற்பட்டிருக்கிறது.

கிழக்குப் பெர்லின்வாசிகளைப் பற்றி, 'அவர்கள் மேற்கே தூங்கப் போகிறார்கள்; கிழக்கே விழித்துக் கொள்கிறார்கள்' என்பதாக ஒரு வாசகம் நிலவுகிறது. இதற்கு என்ன பொருள் என்று பெர்லினில் நான் ஒரு பத்திரிகைக் காரியாலயத்தில் கேட்டேன். கிடைத்த பதில் சுவையானது.

வேறு பல நாடுகளிலும் உள்ள மக்களைப் போலவே கிழக்குப் பெர்லின்வாசிகளும் இரவு டெலிவிஷன் நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டேதான் படுக்கப் போகிறார்கள். அப்போது அவர்கள் பார்க்கும் நிகழ்ச்சி கிழக்குப் பெர்லின் டெலிவிஷன் நிலையத்திலிருந்து ஒலிபரப்பாகும் நிகழ்ச்சி அல்ல. அந்தக் கம்யூனிஸப் பிரசாரத்தைப் பார்க்கப் பிடிக்காமல் அவர்கள் மேற்குப் பெர்லின் டெலிவிஷன் நிலையம் ஒலிபரப்பும் நிகழ்ச்சிகளைப் பார்க்கிறார்கள்! ஆனால் காலையில் தூங்கி எழுந்ததும் அவர்கள் வேலைக்குப் போவது கிழக்குப் பெர்லினில்தானே? ஆகவேதான், மேற்கே தூங்கப் போய், கிழக்கே விழித்தெழுகிறார்கள் என்ற சொற்றொடர் வழக்கில் வந்திருக்கிறது. ஆனால் இதற்கும் இப்போது கிழக்குப் பெர்லின் அரசாங்கம் தடை விதித்திருக்கிறது. இப்போது கிழக்கு ஜெர்மனியில் உருவாகும் டெலிவிஷன் செட்டுகள் மேற்குப் பெர்லின் நிகழ்ச்சிகளைப் பார்க்கவோ கேட்கவோ முடியாத வகையில் தயாராகின்றனவாம்.

இதை விவரித்த உதவி ஆசிரியர், ''இப்படி வாருங்கள், இன்னொரு விநோதத்தை உங்களுக்குக் காட்டுகிறேன்'' என்று அழைத்துப் போனார். இந்தக் காரியாலயம் பெர்லின் சுவருக்கு அருகில் அமைந்திருந்தது. கட்டடத்தின் உச்சியில் ஒரு பெரிய விளம்பரப் பலகை போன்ற அமைப்பு. அன்றைய முக்கிய செய்திகளின் தலைப்புக்கள் மட்டும் அதில் காணப்பட்டன. வர்ணத்தால் உருவான எழுத்துக்கள் அல்ல; நியான் விளக்கு எழுத்துக்கள் அவை. விளம்பரத்துக்குப் பயன்படுத்துவதில்லையா நியான் விளக்கு எழுத்துக்களை? அவை இங்கே செய்தியைச் சொல்லப் பயன்பட்டன! ''இரவு நேரத்தில் இவை ஒளிர்ந்து அப்பால் கிழக்கு ஜெர்மனியில் உள்ளோருக்கு இன்றைய முக்கிய செய்தியை அறிவிக்கும். மேற்கு ஜெர்மானியரும் கிழக்கு ஜெர்மானியரும் ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ளச் சுவரையும் மீறிச் செயல்படும் ஒரு சாதனம் இது! பத்திரிகைச் சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட்டுள்ள கிழக்கு ஜெர்மனியில் மக்கள் முக்கிய செய்திகளை அறிய இந்த நியான் பத்திரிகையை நாடுவதில் வியப்பென்ன?'' என்றார்.

''உலகில் எத்தனையோ விதமான பத்திரிகைகள் உள்ளன, என்றாலும் நியான் விளக்கொளியாக வெளிவரும் தினசரி இது ஒன்றே ஒன்றுதான்!'' என்றேன் நான்.

ஃ ஃ ஃ

லண்டனில் உள்ள 'டெய்லி மெயில்' காரியாலயத்தில் தரையிலிருந்து கூரைவரை உயர்ந்து நிற்கும் ஒரு புகைப்படம் சுவரில் பொருத்தப்பட்டிருக்கிறது. வீடு பெருக்கும் ஒரு பணிப் பெண்ணுடைய படம் அது. அதன் மீது கொட்டை எழுத்துக்களில், ''இந்தப் பத்திரிகை இவளைப் போன்றோருக்குத்தான் தயாராகிறது என்பதை மறக்க வேண்டாம்'' என்று எழுதப்பட்டுள்ளது. அவளுக்குப் புரிகிற மாதிரி அத்தனை எளிமையான வார்த்தைகளைப் பயன்படுத்திச் செய்தியைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்பது உட்கிடை. கோடிக்கணக்கில் விற்பனையாகும் இது போன்ற பத்திரிகைகள், பெரும்பாலும் பரபரப்பூட்டும் செய்திகளே அடங்கியிருக்கும். ஸ்காட்ஸ்மன் என்ற எடின்பரோ பத்திரிகை மிக மிக உயர்தரமானது. விற்பனை, ஒப்பு நோக்குகையில் சொற்பம்தான். ஆயினும் விளம்பர விகிதங்களைப் பார்த்தால் டெய்லி மெயிலைவிட இருமடங்கு அதிகமாகவே இருக்கும்! பத்திரிகையின் தரத்தையும் நோக்கி விளம்பர விகிதங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன; விற்பனை எண்ணிக்கையை மட்டும் பார்ப்பதில்லை!

ஃ ஃ ஃ

தினசரிகளுக்குப் பெயரிடும்போது குறிப்பிட்ட ஒரு பெயரைக் கொடுத்துவிட்டு அதைத் தொடர்ந்து கிரானிகல், எக்ஸ்பிரஸ், டைம்ஸ், ஸ்டாண்டர்டு, ஹெரால்டு என்று இப்படி ஏதேனும் ஒரு வார்த்தையைச் சேர்ப்பதைப் பார்த்திருக்கிறோம். அமெரிக்கப் பத்திரிகைகளைப் பற்றி ஒருவர் ஒரு கட்டுரை எழுதினார். அதன் தலைப்பு பின்வருமாறு:

''அமெரிக்கத் தினசரி — அது டைம்ஸுமல்ல, ஹெரால்டுமல்ல, கிரானிகலுமல்ல, ஸ்டாண்டர்டுமல்ல, எக்ஸ்பிரஸுமல்ல, டிரிப்யூனுமல்ல; அது வெறும் மோசமான செய்தித் தாள் — அவ்வளவே!''

இப்படி நீண்ட தலைப்பைக் கொடுத்துவிட்டு அமெரிக்கத் தினசரிகளில் உள்ள பல குறைபாடுகளையும் நிர்வாக ரீதியான சில கோளாறுகளையும் அலசி ஆராய்ந்து சொல்கிறார் ஆசிரியர்.

நமது ஊரில், ''பேப்பர் வாங்கறதே, பழைய பேப்பர்!'' என்று கத்திக் கொண்டு போகும் ஆள் மட்டும் அமெரிக்கப் பத்திரிகை ஒன்றைக் காணக் கூடுமானால் ஆனந்தசாகரத்தில் ஆழ்ந்து போவான்! அத்தனை கனம் கனக்கும்! ஆனாலும் செய்தித் தாள்களைப் படிப்பதில் பாரத நாட்டில் ஏற்படுவது போல் நமக்கு ஓர் ஆர்வம் உண்டாகமாட்டேன் என்கிறது அங்கே. பக்கம் பக்கமாக விளம்பரங்களைப் புரட்டுவதற்குள்ளேயே, அலுத்துப் போகும். பெரும்பாலும் உள்ளூர்ச் செய்திகளும் அதிகம் போனால் அமெரிக்க விவகாரமாகவும்தான் இருக்கும்.

அமெரிக்க சர்வகலாசாலை ஒன்றிலே பேராசிரியர் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, ''உங்கள் மாணவர்கள்

இந்தியாவைப் பற்றி என்னிடமிருந்து நிறைய தெரிந்து கொள்வதில் காட்டிய ஆர்வம் எனக்கு வியப்பை அளித்தது. இங்குள்ள தினசரிப் பத்திரிகைகளைப் பார்த்தால் அமெரிக்கர்கள் இந்தியாவில் நடப்பது பற்றிக் கவலையே படவில்லை என்றல்லவா தோன்றும்?'' என்றேன்.

''இந்தியாவைப் பற்றிப் பத்திரிகைகளில் நிறைய வராததால்தான் மாணவர்கள் இத்தனை கேள்விகள் உங்களைக் கேட்டார்கள். பத்திரிகைகளில் படிக்கக் கூடுமானால் உங்களை ஏன் அவர்கள் தொந்தரவு படுத்தப் போகிறார்கள் ?'' என்றார் அவர்.

ஃ ஃ ஃ

மேனாட்டில் பத்திரிகைத் துறை, எழுத்துத் துறை வளர்ச்சிக்கு அங்குள்ள பல்கலைக் கழகங்கள் பக்கபலமாக நிற்கின்றன.

''மாஸ் கம்யூனிகேஷன் டிபார்ட்மெண்ட்'' என்றால் அதில் டெலிவிஷன், ரேடியோ, பத்திரிகைகள் போன்ற சகலமும் உள்ளடக்கம்.

ஜர்னலிஸம் என்ற சொல் மிகப் பரவலான அர்த்தத்தில் பயன்படுத்தப்படுகிறது. தாம்ஸன் பவுண்டேஷன் ஸ்தாபனத்தின் ஆதரவில் ஜர்னலிஸம் பயின்றபோது அங்கு என் மூளையில் திணிக்கப்பட்ட விஷயங்கள் முதலில் பிரமிப்பையே ஏற்படுத்தின.

பத்திரிகை விளம்பரங்களைத் தயாரிக்கும் விதம்; பெருமளவில் விளம்பரங்களைப் பெறும் கலை; பத்திரிகை நிர்வாகம்; புகைப்படங்களை 'லே — அவுட்' செய்வது; விசேஷக் கட்டுரைகள் எழுதுவது; பேட்டி காண்பதில் உள்ள நுணுக்கங்கள்; செய்திகள் எடிட்டிங்; கட்டுரைகள் எடிட்டிங்; பிளாக் செய்யும் முறைகள்; அச்சு இயந்திரங்களைப் பாதுகாத்து முழுப் பயனையும் பெறும் நுணுக்கங்கள், பொதுஜனத் தொடர்பு, சிறுகதைகள் நாவல்கள் எழுதும் நுணுக்கங்கள் என்று இப்படிப் பல துறைகளிலும் நான் பரவலான திறமை பெற வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள். பல்கலைக் கழகங்களில் ஜர்னலிஸம் பயிலுவோர் இப்படிப் பரவலான புலமை பெற்றபின் தங்களுக்குப் பிடித்தமான ஏதேனும் ஒரு துறையில் விசேஷத் திறமை பெறுகிறார்கள். அதையே வாழ்க்கையாகவும் அமைத்துக் கொள்கிறார்கள்.

பரவலான புலமை பலவிதங்களிலும் உதவுகிறது. நமது நாட்டில் ஒரு படம் சரியாக அச்சாகவில்லை என்று நமக்குத் தோன்றினால் பிரஸ் ஃபோர்மனைக் கூப்பிட்டுச் சொல்வோம். அப்போது அவர், ''சார்! இப்போது இருக்கிற இந்த இயந்திரத்தில் நீங்கள் கொடுத்திருக்கிற இந்தக் காகிதத்தையும் மையையும் கொண்டு இந்த அளவுக்குத் தான் ஸார், அச்சிட முடியும்'' என்று ஒரே போடாகப் போட்டு விடுவார். நாமும் கேட்டுக் கொண்டு 'சிவனே' என்று பேசாமல் இருந்து விடுவோம்.

மேனாட்டில் இந்தப் பதில் கிடைக்குமானால் ஆசிரியர் குழாத்தில் உள்ள அவர் நேராக அச்சகத்துக்குப் போய் எப்படி அதனை இன்னும் சிறப்பாக அச்சிடலாம் என்பதைச் செய்து காட்டும் திறன் படைத்திருப்பார்!

ஃ ஃ ஃ

ஜர்னலிஸம் ஃபெல்லோஷிப் என்று சில பல்கலைக் கழகங்களில் உள்ளன. ஏற்கனவே பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பலர் ஆறு மாத ரஜாவில் பல்கலைக் கழகத்துக்கு வந்து அவரவர் விசேஷமாகப் பணி புரியும் துறையில் சிறப்புப் பயிற்சி பெறுகின்றனர். இப்போது அவர்கள் எழுதப் பயிலுவதில்லை — சங்கீத விமரிசகர் இசை நுணுக்கங்கள் பலவற்றைத் தெரிந்து கொள்கிறார்; தலையங்கம் எழுதுபவர் அரசியலைக் கரைத்துக் குடிக்கிறார்; பொருளாதாரக் கட்டுரைகள் எழுதுபவர் ஏராளமான பொருளாதார நூல்களைப் படித்துப் பயன் பெறுகிறார். விளையாட்டு விமரிசகர் பலவித விளையாட்டு வித்தைகளைப் பயிலுகிறார்!

ஃ ஃ ஃ

டைம், லைஃப் சஞ்சிகைகள் நிறுவனம் பத்திரிகைகளை மட்டும் நடத்தவில்லை; பெரிய பெரிய காடுகளையே பராமரிக்கிறது! கனடாவிலும் வேறு பல இடங்களிலும் உயர் தரமான காகிதம் தயாரிக்க உதவும் மரக்

---

*1932ல் வினோபா பாவே, தூலியாவில் சிறைப்பட்டிருந்தார். அப்போதுதான் அவர் தமது கீதைப் பேருரையை எழுதினார். இதில் ஓரிடத்தில் விஷ்ணுவின் தெய்விக உருவை வருணிக்க வேண்டியிருந்தது. பகவானுக்குப் பல ரூபங்கள் உண்டல்லவா? இவற்றில் எதை வருணிப்பதென்று பாவேக்குப் புரியவில்லை. கடைசியில் தம் மனத்தை ஈர்த்த ஒரு ரூபத்தை வருணித்தார்.*

*1938ல் காந்திஜியின் சேவாக்கிராம ஆசிரமத்துக்கு இரண்டு மைல்களுக்கு அப்பால் வினோபாஜி தமக்கென ஓர் ஆசிரமம் எழுப்பிக் கொள்ளத் திட்டமிட்டார். அதேபோல் தாம நதிக் கரையில் பவனார் என்ற கிராமத்துக்குத் தம் சகாக்களுடன் சென்று பூமியை வெட்டிக் கொத்திச் சமப்படுத்தினார். அப்போது பூமிக்கடியிலிருந்து அவருக்கு ஒரு விக்கிரகம் கிடைத்தது. ஆச்சரியம்! அதைக் கண்டவுடன் வினோபாஜியின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. ஆறுண்டுகளுக்குமுன் தமது பேருரையில் அவர் விஷ்ணுவின் எந்த வடிவத்தை விளக்கினாரோ அதே வடிவம்தான் இந்த விக்கிரகம்!*

**வினோபாவை**



**ஈர்த்த வடிவம்**

காடுகளைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்டு பாதுகாக்கிறது இந்நிறுவனம். காகிதம் தயாரிக்க மரங்களை வெட்டித் தள்ளத் தள்ளப் புதிய கன்றுகளை அவ்வப்போது நட்டு வளர்ப்பார்கள். காகிதப் பஞ்சத்தால் அவதிப்படக்கூடிய நிலை டைம், லைஃப் பத்திரிகைகளுக்குக் கிடையாது.

ஃ ஃ ஃ

''வாஷிங்டன் நகரில் எங்களுடைய இந்தக் கட்டடத்தைவிட உயரமாக வேறு யாரும் ஒரு கட்டடத்தை எழுப்பிவிட முடியாது'' என்றார் நேஷனல் ஜியோகிரபிக் சஞ்சிகையின் ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்த ஒருவர்.

''ஏன் அப்படி? இது ஒன்றும் அவ்வளவு உயரமில்லையே! இதைவிட உயரமான கட்டடம் எழுப்புவதில் என்ன சிரமம்?''

''சிரமம் ஒன்றுமில்லை; சட்டம் அதற்கு இடம் தரவில்லை. இந்நகரில் வாஷிங்டன் மான்யுமெண்ட் என்ற ஸ்தூபி இருக்கிறதல்லவா? அதைவிட உயரமாக எந்தக் கட்டடமும் எழும்பக் கூடாது என்று சட்டம்!''

''கட்டடம் உயராவிட்டால் என்ன? உங்கள் பத்திரிகையின் தரம் நாளுக்கு நாள் மேலே மேலே உயர்ந்து கொண்டே போகிறதே, அது போதாதா?'' என்றேன் நான். கட்டடத்தின் சுவர்களில், நேஷனல் ஜியோகிரபிக் பத்திரிகையில் இடம் பெற்றுள்ள, இடம் பெறப் போகிற வண்ணப் புகைப்படங்களைப் பலவித அளவுகளில் அலங்காரமாக மாட்டியிருந்தார்கள். அதனை ரசித்துக் கொண்டே, ''இத்தனை அற்புதமான படங்களை எப்படித்தான் எடுக்கிறார்களோ?'' என்றேன்.

ஒரு கதவைத் திறந்தார் அவர். உள்ளே நுழைந்தாலோ எந்தத் திசையில் திரும்பினாலும் காமிராக்கள், காமிராக்கள், காமிராக்கள்தான்! பத்து காமிராக் கடைகளை (அமெரிக்கக் கடைகள்) ஒருங்கு சேர ஒரே இடத்தில் பார்ப்பதுபோல் இருக்கவே பிரமித்து நின்றேன் நான்.

புறப்படுவதற்குமுன் ஒரு கேள்வி அடக்க முடியாமல் பிறந்துவிட்டது என்னிடமிருந்து: ''இத்தனை பெரிய நிறுவனத்தைக் கட்டிக் காப்பது சரிதான்; கட்டி வருகிறதா?''

''அடடா! உங்களுக்குத் தெரியாதா விஷயம்? இந்த ஸ்தாபனத்துக்கு வருமான வரி என்ற நாமதேயமே கிடையாது!''

''என்ன, என்ன? நிஜமாகவா?''

''ஆமாம். மக்களின் அறிவுப் பெருக்கத்துக்கென்று இயங்கும் ஸ்தாபனம், 'நேஷனல் ஜியோகிரபிக் சொஸைட்டி' என்பதால் இதற்கு வரி விலக்கு அளித்திருக்கிறது அரசாங்கம்.''

இருப்பிடத்துக்குத் திரும்பிப் படுக்கப் போகும் வரையில் என் நடையில் ஏற்பட்ட தடுமாற்றம் தீரவேயில்லை.

ஃ ஃ ஃ

இந்த அவசர யுகத்தில் பத்திரிகைகளை நின்று நிறுத்தி நிதானமாகப் படிக்க யாருக்கு அவகாசம் இருக்கிறது? ஆகவே, படிப்பதைவிடப் பார்ப்பதற்குரிய விஷயங்களை அதிகமாகத் தருவதே முக்கியம் என்ற நோக்கத்தில் ஆரம்பிக்கப்பட்டது 'லுக்' என்ற சஞ்சிகை. ஆனால் வெகு சீக்கிரமே இவர்கள் தங்கள் எண்ணத்தை மாற்றிக் கொள்ளும்படியாகி விட்டது. அமெரிக்காவில் இது இயந்திர யுகம். சாதாரணமான காரியம் எதுவாயிருந்தாலும் அதை இயந்திரம் செய்து முடித்து விடுகிறது; மனிதனுக்கு வேலையில்லை. ஆகவே இன்று அங்கே மனிதன் மூளையால் வாழ வேண்டியவனாயிருக்கிறான். அறிவாற்றல் மிகுந்தவர்கள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகையில் பத்திரிகைகளும் ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்ட கதை கட்டுரைகளைப் பிரசுரிக்க வேண்டிய நிலையில் உள்ளன.

வாசகர்களைக் கவருவதற்கான புதிய புதிய உத்திகளில் ஒன்று திரீ — டி (3—டி) படங்களைத் தருவது. 'லுக்' பத்திரிகையும் 'நேஷனல் ஜியோகிரபிக்' பத்திரிகையும் இதில் ஆழ்ந்த கவனம் செலுத்தி ஆராய்ச்சி புரிந்து வருகின்றன. தங்கள் ஆராய்ச்சிகளைப் பரம இரகசியமாகவும் அவர்கள் நடத்துகிறார்கள். சாதாரணமாக நாம் பார்க்கும் படங்களில் நீள அகலத்தைக் காணலாமே தவிர கன பரிமாணத்தை உணர முடியாது. திரீ — டி படங்கள் பத்திரிகைகளில் இடம் பெற்றால் கன பரிமாணத்தைக்கூடக் காணலாம் அதில்.

அறிவாளிகளுக்கே அதிகமான வேலை வாய்ப்புக்கள் உள்ள அமெரிக்காவில் அதற்கேற்ப இன்று நிபுணர்களுக்கான பத்திரிகைகள் பெருகி வருகின்றன. ராக்கெட் தளங்களில் பணியாற்றுவோருக்கு ராக்கெட் உலகில் நவீன முன்னேற்றங்களை விவரிக்கும் பத்திரிகை; டேப் ரிக்கார்டர்களைத் தயாரிக்கும் தொழிலகத்தில் பணியாற்றுவோருக்கு அத்தொழில் சம்பந்தமான புது விஷயங்களைக் கொடுக்கும் பத்திரிகை என்று இப்படி அறிஞர்களுக்கே அறிவு புகட்டும் பத்திரிகைகள் மிகப் பரவலாகப் பெருகி வருகின்றன.

அமெரிக்காவில் மட்டமான பத்திரிகைகளுக்கும் பஞ்சமில்லை. நிர்வாணப் படங்களைப் பிரசுரித்துப் பணம் சம்பாதிக்கும் பத்திரிகைகள் உள்ளன. ஆனால் அவற்றின் மீது 'வயதுவந்த ஆண்களுக்காக மட்டும்' என்று அச்சடிக்கப்பட்டிருக்கும். இவற்றைச் சிறுவர்களுக்கு விற்பது பல ராஜ்யங்களில் சட்டபூர்வமாகத் தடை செய்யப்பட்டுள்ளது. தபாலில் இவற்றைச் சந்தாதார்களுக்கு அனுப்புவதற்கும் தடை உண்டு.

''பிளே பாய்'' என்று ஒரு பத்திரிகை இந்த ரீதியில்தான் ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் அதன் ஆசிரியர் வெகு சீக்கிரமே இத்தகைய பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை பெருக வழியில்லை என்று கண்டு கொண்டார். மிக மிக உயர்தரமான கதைகளையும் கட்டுரைகளையும் பெரும் பொருள் கொடுத்து வாங்கிப் பிரசுரித்தார். இடை இடையே நிர்வாணப் படங்களையும் போட்டார். இன்று 'பிளேபாய்' கனவான்களின் பத்திரிகையாகி விட்டது!

இதெல்லாம் எப்படியானாலும் குட்டை குழப்புகிற பத்திரிகை மட்டும் அமெரிக்காவில் மருந்துக்குக்கூடக் கிடையாது. அதாவது குடும்பத்தினர் அனைவரும் வாசிக்கக்கூடிய பத்திரிகை என்று சொல்லிக் கொண்டு அருவருப்பான இனக் கவர்ச்சி விஷயங்களைப் பிரசுரிக்கும் பத்திரிகை அங்கே இல்லை.

# கம்ப்யூட்டர் கொடுமை வேண்டாம்!

"மனிதன் செய்யக்கூடிய வேலையை யந்திரங்கள் செய்வதானால், மக்கள் குலம் பிழைக்கும் வழிதான் என்ன? மற்றத் துறைகளைவிட இன்ஷ்யூரன்ஸ் தொழில் கம்ப்யூட்டர்களால் பெரிதும் பாதிக்கப்படும்.

"ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் பொதுத் துறை நிர்வாகத்தில் உள்ள ஒரு பெரிய நிறுவனம். இதனை யந்திர மயமாக்க நிர்வாகிகள் வகுத்துள்ள திட்டம் பயங்கரமானது! இந்த எலக்ட்ரானிக் கம்ப்யூட்டர் யந்திரங்களின் திறமை, அவை இயங்கும் அசுர வேகம் இவைகளை மறுப்பதற்கில்லை. ஆனால் எல். ஐ. ஸி. நிறுவனத்துக்கு இவை தேவையில்லை! இவற்றால் ஏற்படக் கூடிய நன்மைகளை விடத் தீமைகளே அதிகம். இந்த மின்னணுக் கணக்கீட்டு (கம்ப்யூட்டர்) யந்திரங்கள் எல். ஐ. ஸி.யில் முழு மூச்சுடன் செயல்படத் தொடங்கினால், இப்போதுள்ள 40,000 ஊழியர்களில் 30,000 பேர்கள் வேலை இழக்க நேரிடும் என்பது உறுதி. மக்கள் தொகைப் பெருக்கத்தினால் அவதியுறும் நாடு பாரதம். ஏற்கனவே வேலையில்லாமல் திண்டாடுகிறவர்கள் லட்சக் கணக்கானவர்கள். இந்த நிலையில், மேலும் ஆயிரக் கணக்கானோர் உள்ள வேலை வாய்ப்புக்களையும் இழந்து தவிக்க நேரிடும் துர்ப்பாக்கிய நிலை ஏற்படக் கூடாது என்றுதான் இந்த யந்திர மயமாக்கும் திட்டத்தினை நாங்கள் எதிர்க்கிறோம்" எனக் கூறுகிறார் எல். ஐ. ஸி. தென் பிராந்திய ஊழியர் சங்கத்தின் செயலாளர் திரு என். எம். சுந்தரம்.

"கம்ப்யூட்டர்களைப் புகுத்துவதால் யாரும் வேலை இழக்க நேரிடாது என்று அதிகாரிகள் உறுதியளிக்கிறார்களே?" என்று கேட்டதற்கு அவர் கூறுகிறார்: "உடனடியாக அப்படி எதுவும் நிகழாது என்பது மெய்தான். அமெரிக்கா போன்ற நாடுகளிலேயே, அந்த இயந்திரம் முழு வேகத்துடன் செயல்படத் தொடங்க மூன்று, நான்கு ஆண்டுகள் ஆகும். நம் நாட்டில் ஐந்து ஆறு ஆண்டுகள் ஆகலாம். அதன் பின்னர் ஆட்குறைப்பு தவிர்க்க முடியாததாகி விடும். பெரும் பொருட் செலவில் கம்ப்யூட்டர் யந்திரங்களைத் தருவித்த பின், ஊழியர்களின் எண்ணிக்கையைக் குறைக்காமல் இருக்க முடியுமா? நூற்றுக்கணக்கான ஊழியர்களின்



திரு என். எம். சுந்தரம்

## சுவையான சர்ச்சைகள்

வேலையைத்தானே கம்ப்யூட்டர் செய்யப் போகிறது? எனவே ஆட்குறைப்பும் செய்யாமல் கம்ப்யூட்டர்களும் செயல்பட்டுக் கொண்டே இருப்பது வெறும் கேலிக் கூத்தாக அல்லவா முடியும்? எல். ஐ. ஸி.யில் உபரியாகும் ஊழியர்களைப் பிற பொதுத் துறை அலுவலகங்களுக்கு மாற்றுவார்கள். பிற இலாகாக்களில் காலியாக உள்ள இடங்களை எல். ஐ. ஸி. யில் உபரியாகும் ஊழியர்களைக் கொண்டு நிரப்பினால், வேலை வாய்ப்புக்கள் இல்லாமல் தவிக்கிறவர்களின் நிலை என்ன ஆவது? வேலையில்லாத் திண்டாட்டம் நீடித்துக் கொண்டுதானே போகும்?"

"ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் வளர்ந்து வரும் ஓர் இயக்கம் அல்லவா? அதன் வளர்ச்சிக்கேற்ப நவீன யந்திர சாதனங்களைப் புகுத்தி, விரைவாகவும் திறமையோடும் செயலாற்றுவதற்கான வழி வகைகளை வகுக்க வேண்டியது அவசியம்தானே?" என்ற கேள்விக்கு அவர் கூறும் விளக்கம்: "எல். ஐ. ஸி.யின் தொழில் வெகுவாக வளர்ந்துள்ளது என்பது உண்மையே. 1955ல் 48 லட்சம் பாலிஸிகள் அமுலில் இருந்தன. 1965ல் ஒரு கோடியே ஒன்பது லட்சம் பாலிஸிகள். பத்து ஆண்டு காலத்தில் பாலிஸிதாரர்களின் எண்ணிக்கை இரட்டிப்பாகி விட்டது. ஆனால், இந்த

# கம்ப்யூட்டர்கள் வேலை நிறுத்தம் செய்யுமா?

நூற்றுக்கணக்கான மனிதர்களுக்குள்ள வேலைவாய்ப்பை ஒரு கம்ப்யூட்டர் இழக்கச் செய்வது ஒருபுறமிருக்க, கம்ப்யூட்டர்களின் வேலை வாய்ப்பையே இன்னொரு ராட்சத கம்ப்யூட்டர் இழக்கச் செய்கிறது!

பிரிட்டனில் அணுசக்தி இலாக்கா தலைமைக் காரியாலயத்தில் இப்போது நாலு கம்ப்யூட்டர் இயந்திரங்கள் இயங்கி வருகின்றன. ஆனால் இந்த ஆண்டு மத்தியில் இந்த நாலு கம்ப்யூட்டர் இயந்திரங்களையும் நீக்கிவிட்டு அதனிடத்தில் அத்தனை வேலையையும் செய்து முடித்துவிடக்கூடிய ஒரே ஒரு கம்ப்யூட்டர் இயந்திரத்தை நிறுவப் போகிறார்கள்! இங்கிலீஷ் எலெக்ட்ரிக் லிமிடெட் தயாரித்துள்ள "4-70" கம்ப்யூட்டர் இது.

வளர்ச்சியின் பொருட்டு இந்தத் தொழிலை இயந்திர மயமாக்குவது அவசியமா என்பதே கேள்வி. 1954ல்தான் அமெரிக்காவில் இன்ஷ்யூரன்ஸ் தொழிலில் எலக்ட்ரானிக் கம்ப்யூட்டர்களைப் புகுத்தினார்கள் முதன் முறையாக. அப்போது அங்கு எவ்வளவு பாலிஸிகள் அமுலில் இருந்தன தெரியுமா? ஏழு கோடியே எண்பது லட்சம்! ஏழு கோடிக்கு மேற்பட்ட பாலிஸி சம்பந்தப்பட்ட அலுவல்களை, தொழில் துறையில் வெகுவாக முன்னேறியுள்ள அமெரிக்கா கம்ப்யூட்டரின் உதவியின்றி நிறைவேற்றக் கூடுமானால், சுமார் ஒரு கோடி பாலிஸி சம்பந்தமான அலுவல்களைக் கவனிக்க நம் நாட்டில் கம்ப்யூட்டர் யந்திரம் எதற்கு? ஐரோப்பிய நாடுகளை விடப் பாரதத்தில் குமாஸ்தாக்களுக்குச் சம்பளம் குறைவு. நான், நீ என்று குறைந்த சம்பளத்தில் வேலைக்குப் போட்டியிடுவோர் இங்கு ஆயிரக்கணக்கில் இருக்கையில் யந்திரங்களின் உதவியை நாடுவானேன்?

"விண்வெளி ஆராய்ச்சி, பருவ நிலை ஆராய்ச்சி — இவை போன்ற ஆராய்ச்சிகளுக்குக் கம்ப்யூட்டர்களின் உதவியை நாடுவதில் தவறில்லை. வரவேற்கிறோம். ஆனால், ஆயிரக்கணக்கான குமாஸ்தாக்களின் வேலை வாய்ப்புக்கு நாசம் விளைவிக்கக் கூடிய இந்த யந்திரம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் போன்ற அலுவலகங்களுக்கு வேண்டாம்!

"பம்பாயில் உள்ள டாடா ஆராய்ச்சிச் சாலையில் ஒன்றரைக் கோடி ரூபாய் மதிப்புள்ள ஓர் எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் வாங்கியுள்ளார்கள். அந்த யந்திரம் ஒரு விநாடியில் ஆறு லட்சம் கூட்டல், கழித்தல்களை (15 ஸ்தானங்கள் உள்ள எண்கள்)யும், இரண்டு லட்சம் பெருக்கல், வகுத்தல்களையும் செய்து முடிக்கும் ஆற்றல் படைத்தது! இந்த இயந்திரத்திலுள்ள அரை அங்குல அகலமுள்ள 'மாக்னெடிக்' டேப்பில் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகள் சம்பந்தப்பட்ட எல்லா விதமான தகவல்களும் பதிவாகிவிடும். எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டரின் சக்தியை அளவிட்டுக் கூற இயலாதுதான். ஆனால், அந்த ஆற்றலே அதன் பலவீனமுமாகும்."

"எப்படி?"

"நம் நாட்டில் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், அரைகுறைப் படிப்பு உள்ளவர்கள் கையெழுத்து மட்டும் போடத் தெரிந்தவர்கள் — இத்தகையோர்களே அதிகம். பாலிஸி பற்றிய சந்தேகங்கள் எழும்போது அருகிலுள்ள அலுவலகத்துக்கு நேரில் சென்று சம்பந்தப்பட்ட குமாஸ்தாவையோ, அதிகாரியையோ கண்டு பேசி விளக்கம் பெறலாம். அவர்களுக்கு விளக்கம் கிடைப்பதுடன் நேரிடைத் தொடர்பினால் ஒருவித நம்பிக்கையும் ஏற்படுகிறது. ஆனால், யந்திரங்கள் செயல்படத் தொடங்கியதும் யாரிடம் போய், என்ன சந்தேகத்தைக் கேட்பது? என்ன தெளிவு பெற முடியும்? இன்ஷ்யூரன்ஸின் நன்மைகளைக் கிராமவாசிகள் எல்லோரும் பெற வேண்டும் என்ற கருத்துப் பரவி அதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வரும் நிலையில் யந்திரங்களைப் புகுத்திப் படிப்பற்ற அல்லது குறைந்த படிப்புள்ள மக்களுக்கு இன்ஷ்யூரன்ஸ் அலுவலகத்துடன் உள்ள நேரடித் தொடர்பினைத் துண்டிப்பது வரவேற்கத்தக்கதன்று. இன்னொரு விஷயம்:

"இந்த கம்ப்யூட்டா இருக்கிறதே — இது நாள் ஒன்றுக்கு 21 மணி நேரம் வேலை செய்தால்தான் அதன் முழு ஆற்றலும் வெளிப்படும். ஒரு நாளைக்குப் பதினேழு மணி நேரத்துக்கும் குறைவாக அது இயங்கினால், அந்த இயந்திரத்தைப் புகுத்தும் நோக்கமே பலனற்றுப் போய்விடும். நாள்தோறும் அதற்கு 21 மணி நேரம் வேலை கொடுத்தாக வேண்டும். அவ்வளவுக்கு வேலை இல்லாவிட்டாலும் 'டம்மி' தகவல்களையாவது யந்திரத்துக்கு அளித்து அதை இயங்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் கம்ப்யூட்டர் முழுத் திறமையுடன் இயங்கும். அப்படியாவது அந்த யந்திரத்தை வாங்கித்தான் ஆகவேண்டும் என்று என்ன நிர்ப்பந்தம்?

"படித்துவிட்டு வேலை கிடைக்காமல் திண்டாடுகிறவர்கள் பல்லாயிரக் கணக்கில் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்துதான் அரசாங்கம் 60 வயதில் ஓய்வு பெற வேண்டியவர்களை 50 வயதிலேயே ஓய்வு பெறச் செய்ய வேண்டும் என்று முயற்சி செய்து வருகிறது. இந்த நிலையில் கம்ப்யூட்டர் யந்திரத்தைப் புகுத்தி ஆயிரக்கணக்கானவர்கள் வேலை இழக்கும்படியான நிலையைத் தோற்றுவிப்பது நகைப்புக்கிடமானதல்லவா?" என்று கேட்கிறார் இளைஞர் சுந்தரம். பேட்டி: **பாணன்**

# மதுர இசைக்கு மதுரையில் அரங்கம்





மதுரை நகரைச் சிறப்பித்துப் பாடும் பரஞ்சோதி முனிவர் 'குழலும் தும்புரு நாரதர் பாடலும் குனித்துச் சுழலும் தொம்பரர் ஆடலும்' மதுரை நகரெங்கும் ஒலிக்கும் என்று கூறியிருக்கிறார். மதுரையில் பதினேழு வருஷங்களுக்கு முன் தோன்றிய ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜம் மதுரை நகரெங்கும் கர்நாடக இசையைப் பரப்பி வருகிறது. முதலில் மிருதங்க வித்வான் திரு வி. எஸ். முருகபூபதியையும் பின்னர் திரு நாராயண செட்டியாரையும் தலைவர்களாகக் கொண்டு வளர்ந்த சமாஜம் இன்று திரு சிவசாம்பனைத் தலைவராகப் பெற்றிருக்கிறது. நாதப் பிரும்மமாகிய தியாகராஜரின் இருநூறாவது நூற்றாண்டு வைபவம் கொண்டாடும் ஆண்டில் இயாகப் பிரும்மத்தின் நினைவைப் போற்றும் சங்கீத சமாஜத்துக்கு மாபெரும் சங்கீத மண்டபம் எழுந்துள்ளது பெருமைப்படக் கூடியது. மதுரை சர்வகலாசாலை தோன்றிய நன்னாளிலேயே சத்குரு சங்கீத சமாஜம் சங்கீதக் கல்லூரியைத் தோற்றுவித்து இசைக் கலை வளர்ச்சியில் பங்கு கொண்டது. இந்தக் கல்லூரியில் பதினேழு மாணவர்கள் சங்கீதம் பயின்று வருகிறார்கள். இது தவிர மதுரை நகரின் நான்கு பகுதிகளான சொக்கிகுளம், மதுரை டவுன், டி. வி. எஸ். நகர், திருநகர் ஆகியவற்றில் மாலை சங்கீத வகுப்புக்கள் நடத்தி, அவற்றில் சின்னஞ் சிறுமியரிலிருந்து பெரியவர்கள் வரை 125 பேர் சங்கீதம் கற்றுக் கொள்கிறார்கள். சங்கீதக் கல்லூரியின் பிரின்ஸிபாலாக வித்வான் சங்கர சிவம் பணியாற்றி வருகிறார். சங்கீதக் கல்லூரியில் நான்கு வருஷங்கள் பயின்றால் 'சங்கீத சிரோன்மணி' பட்டம் கிடைக்கும்.

பதினைந்து லட்சம் ரூபாய் செலவில் இரண்டு ஏக்கர் நிலத்தில் தல்லாகுளத்தில் கோகலே சாலையில் எழுந்துள்ள மிகப் பிரும்மாண்டமான ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜக் கட்டடம், சங்கீதக் கச்சேரிகளுக்கும், நடன நிகழ்ச்சிகளுக்கும் பயன்படுவதோடு, சங்கீத கலாசாலைக்கும் இடம் அளிக்கிறது. இரண்டு மாடிக் கட்டடமான இந்தச் சங்கீதக் கோயில் நவீன பாணி ஓவியக் கலைகள் மிளிரக் கட்டடக் கலை நிபுணர் திரு ஆர். ஆர். சர்மாவால் திட்டமிட்டுக் கட்டப்பட்டது. இந்தக் கட்டடத்தை எழுப்புவதில் முழுமூச்சுடன் பாடுபட்டவர் ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்களின் குமாரர் ஸ்ரீ ஆர். ராமச்சந்திரன். இந்தச் சங்கீதக் கட்டடம் எழும்பச் சிறு தொகையிலிருந்து பெருந் தொகைவரை நன்கொடையாகக் கிடைத்தன. டி. வி. எஸ் ஸ்தாபனம் இந்தக் கைங்கரியத்தில் பெரும் பங்கு கொண்டுள்ளது.

சிலர் கட்டிடத்துக்கு அஸ்திவாரமிடுவார்கள். அவர்கள் வைத்த வேளை அஸ்திவாரக் கல்லும் பெயர்ந்து போய்விடும். ஆனால் மதுரையில் சத்குரு சங்கீத சமாஜக் கட்டடத்துக்கு அஸ்திவாரக் கல் இட்டவர், ஞானஸ்தரும், சிறந்த சங்கீத ரசிகருமான ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார். அவரே இந்த மாபெரும் கட்டடம் எழும்பிய பிறகு மார்ச் மாதம் 8ந் தேதி அதைத் திறந்து வைக்கும் விழாவுக்குத் தலைமை தாங்குகிறார். புதுக் கட்டடத்தில் சங்கீத வித்தியாலயத்தை ஸ்ரீ டி. டி. கே.யே ஆரம்பித்து வைக்கிறார். இவர் இட்ட அஸ்திவாரம் மாபெரும் கலைக் கோயிலாக வளர்ந்திருப்பதைக் காணும் போது சந்தோஷமாகத்தானே இருக்கும்?

சங்கீத மண்டபத்தை திரு முத்தையா செட்டியார் திறந்து வைக்கிறார். சங்கீத விழா நினைவு மலரை மதுரை சர்வகலாசாலை துணை வேந்தர் திரு தெ. பொ. மீ. வெளியிடுகிறார்.

''ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜக் கச்சேரி அரங்கத்தின் விசேஷம் ஒலி அமைப்பாகும். எங்கும் எதிரொலி கேட்காது. இந்தச் சங்கீத மண்டபத்தைச் சிறப்பாக அமைத்துக் கொடுத்தது பகவான்தான்! அவரின்றி ஓரணுவும் அசையாது அல்லவா?'' என்று தன்னடக்கத்துடன் நவின்றார் பல பாடல்களை இயற்றித் தமிழிசைக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் தொண்டாற்றி வரும் ஸ்ரீமதி அம்புஜம் கிருஷ்ணா. சத்குரு சங்கீத சமாஜத்தின் துணைத் தலைவர் இவர்.

கோயில் நகரான மதுரையில் சத்குரு சங்கீத சமாஜத்தின் புதிய அரங்கம் கலைக் கோபுரமாகத் திகழ மீனாக்ஷி துணை நிற்பாள்.

## வ. பெருமாள்

சிலர் பழைமைப் பித்தர்களாக இருப்பார்கள். வேறு சிலர் மொழிப் பித்தர்களாக இருப்பார்கள். ஆனால் பழமொழிப் பித்தர்களாக இருப்பவர்கள் வெகு குறைவு. பழமொழிப் பித்தராகவும் பக்தராகவும் இருக்கும் பெருமாள் மைசூர் மாநிலத்திலிருந்து மாநாட்டின் கருத்தரங்குக்கு வந்திருந்தார். கோட்டும் சூட்டும் அணிந்த இளைஞர்தான். ஆகையால் பழைமைவாதியல்ல! ஆங்கிலத்திலும் தமிழிலும் சரளமாகப் பேசக்கூடியவர்தான். ஆகையால் மொழி மோகம் கொண்டவருமில்லை. தமிழிலுள்ள பழமொழிகளையெல்லாம் தேடித் தேடிக் கண்டுபிடித்துத் தொகுத்து ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும் தமிழ் ஆசிரியர் இவர். மைசூர் மாநிலத்தில் உள்ள ஊர்காம், கோலார் தங்க வயல் கல்லூரியில் பணியாற்றுகிறார். இந்தப் பழமொழி ஆராய்ச்சிப்பணியில் இவரை ஊக்குவிக்கப் பல்கலைக் கழக மான்யக் குழு இவருக்கு இரண்டாயிரம் ரூபாய்களை உதவிப் பணமாக வழங்கியிருக்கிறது. இதற்கு முன்னாலேயே இவர் பல ஆயிரம் பழமொழிகளைச் சேர்த்து வரிசைப் படுத்தி வைத்திருக்கிறார்.

பெருமாள் உற்சாகமான மனிதர். நண்பர்களிடம் பேசிக் கொண்டிருக்கும்போது அந்தப் பேச்சில் ஏதாவது இதுவரை தம் பிடியில் அகப்படாத பழமொழி அடிபடாதா என்று செவிகளைத் தீட்டிக் கொண்டிருப்பார். ''உங்களுக்குத் தெரிந்த பழமொழிகளை எனக்கு எழுதி அனுப்புங்களேன்'' என்று அவரால் வேண்டப்படாத நண்பர்கள் வெகு குறைவு.

'காலமும் கடல் அலையும் எந்த மனிதனுக்காகவும் காத்திருக்காது' (Time and tide wait for no man) என்ற ஆங்கிலச் சொற்றொடரை 'ஐயர் வரும்வரை அமாவாசை காத்திருக்காது' என்ற தமிழ் பழமொழியுடன் அவர் ஒப்பிடத் தொடங்கினால் சட்டென்று அங்கிருந்து ஓடிவிட வேண்டும். இல்லையானால் பெருமாள் அதே வேகத்தில் பல பழமொழிகளின் மாவட்ட, தத்துவ, இலக்கிய வம்சாவளிகளை அக்குவேறு ஆணிவேறாய்ப் பிரித்துக் காண்பித்துவிட்டுத்தான் விடை பெறுவார்.





● மாநாட்டுக் கருத்தரங்குக்கு வந்திருந்த பார்வையாளர்களும் பிரதிநிதிகளும்.



● கமில் ஸ்வலபில்



● வ. பெருமாள்

● ஜீன் பிலியோஸா



● ரெனடோ - டி - சா

## ரெனடோ - டி - சா

கையில் தோல் பையுடனும் தோளோடு தோளாக எப்போதுமே மனைவியின் துணையுடனும் மாநாட்டுக் கருத்தரங்கில் தென்பட்ட ரெனடோ டி-சா, கோவாவிலிருந்து வந்திருந்த பிரதிநிதியாவார். இவர் தென் அமெ

சிக்காவிலுள்ள, லத்தீன், ஸ்பானிஷ் மொழிப் பத்திரிகைகளின் நிருபரும்கூட.

அதிர்ந்து நடக்கவும் மாட்டார். இரைந்து பேசவும் மாட்டார். மெதுவாகப் பேசினலும் போர்ச்சுகீசியப் பாதிரிமார்கள் எவ்வளவு தூரம் தமிழைப் பேணி வளர்த்தார்கள் என்பது பற்றிக் குறிப்பிடாமலும் இருக்க மாட்டார். தங்கமான மனிதர்.

லத்தீன் கலாசார நிறுவனத்தின் செயலாளராகவும், லத்தீன் மொழிப் பள்ளியின் தலைவராகவும் இவர் கோவாவில் இருக்கிறார்.

## சி. வி. குப்புசாமி

முதல் உலகத் தமிழ் மாநாட்டை நடத்திப் பெருமை தேடிக் கொண்ட மலேசியா நாட்டிலிருந்து இரண்டாவது மாநாட்டைப் பாரதத்தில் கண்டுகளிக்க வந்த முப்பத்தி ஆறு பிரதிநிதிகளில் ஒருவர் சி. வி.குப்புசாமி. முதல் மாநாட்டு நிகழ்ச்சிகளுடன் தொடர்பு கொண்டிருந்தவர். ஆராய்ச்சிக் கட்டுரைகள், யார் எவர் முதலியவற்றை அச்சடித்து விநியோகிக்கும் குழுவில் இவர் உறுப்பினராக இருந்தவர்.

ஏதும் நிலவவில்லை. ஆழமும் கனமும் குறைவாக இருந்தாலும் கருத்தரங்கில் விவாதிக்கப்பட்ட விஷயங்கள் எண்ணிக்கையில் அதிகம் இருந்தன.

''ஆரம்பநாள் கலை ஊர்வலம் வாழ்நாள் முழுதும் மறக்கமுடியாத ஓர் இன்ப நிகழ்ச்சி'' என்ற குப்புசாமி பிரதிநிதிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கலை நிகழ்ச்சிகள், விருந்துகள், தமிழகச் சுற்றுப் பயணம் முதலியவற்றை வெகுவாகப் பாராட்டினர்.

''தாய்நாடு திரும்பும் போது ஒவ்வொரு வெளிநாட்டுப் பிரதிநிதியும், தங்களுக்கு ஆங்காங்கு அளிக்கப்பட்ட புத்தகச் சுமையை விடப் பல மடங்கு அதிகமான அன்புச் சுமையைத் தூக்கிச் செல்ல வேண்டிய நிலையில் இருந்தார்கள்'' என்றார்.

குப்புசாமி மாநாட்டுக் கருத்தரங்குக்கு மலாய்வாழ் தமிழர்கள் பற்றி ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையைச் சமர்ப்பித்திருந்தார். ஆனல் அது சற்றுக் கால தாமதமாக வந்ததால் நிகழ்ச்சி நிரலில் இடம் பெறவில்லை.

உபசரிப்பு மிகுதியானல் உடல் நலம் பாதிக்கப்பட்டு ஓரிரு நாட்கள் ஓய்வெடுத்துக்

# தமிழ் வலம் வந்த தூதுவர்கள்

''முதல் மாநாட்டில், ஏற்றுக் கொள்ளப்பட்ட அத்தனை கட்டுரைகளையுமே, அச்சடித்தோ, பிரதிகள் எடுத்தோ வந்திருந்தவர் அனைவருக்கும் வழங்கினேம். ஆனல் இங்கு பிற்பகல்களில் படிக்கப்பட்ட கட்டுரைகளின் பிரதிகள் வழங்கப்படவில்லை. இதைத் தவிர்த்திருக்கலாம்'' என்று குறிப்பிட்ட குப்புசாமி, முதலாவது இரண்டாவது மாநாடுகளை ஒப்பிட்டுப் பல விஷயங்களைச் சொன்னர்.

''முதல் மாநாட்டுக்குச் சுமார் இருநூறு பிரதிநிதிகள்தான் வந்திருந்தார்கள். பிரயாணக் கட்டுப்பாடுகளினல் கிழக்கு, மேற்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்து பல பிரதிநிதிகள் வர இயலவில்லை. மாநாட்டில் விவாதிக்கப்பட்ட விஷயங்கள் கொஞ்சமாக இருந்த போதிலும் முழுக்க முழுக்க ஆழமானதாகவும் கனமானதாகவும் இருந்தன. பிரதிநிதிகளுக்குக் கலைவிருந்தாக நடனங்கள் மட்டுமே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. சீன, மலாய், தமிழ், ஆங்கில நடனங்கள் இடம் பெற்றன.

''சீன மொழியில்தான் அங்கு நாடகத்துறை வளர்ந்திருக்கிறது. ஆகையால் நாடகங்களுக்கு ஏற்பாடு செய்யப்படவில்லை.

''தமிழர்கள் மிகுதியாக வசிக்கும் நகரங்களுக்குப் பிரதிநிதிகள், குழுக்கள், குழுக்களாகப் பிரித்து அழைத்துச் செல்லப்பட்டார்கள். சர்வகலாசாலை மாணவர்களை இந்தக் குழுக்களுக்கு வழிகாட்டிகளாகப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

''இரண்டாவது மாநாடு பல வகைகளில் முதல் மாநாட்டிலிருந்து வேறுபட்டிருந்தது. சுமார் நாற்பது நாடுகளிலிருந்து நானூறு பிரதிநிதிகளுக்கு மேல் வந்து கலந்து கொண்டார்கள். பிரயாணக் கட்டுப்பாடுகள்



தவத்திரு தனிநாயகம் அடிகள்

கொள்ள நேரிட்ட சில பிரதிநிதிகளில் குப்புசாமியும் ஒருவர் !

## கூட்டுக் காரியதரிசிகள்

உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தின் கூட்டுக் காரியதரிசிகள் பேராசிரியர் சேவியர் தனிநாயகம் அடிகளாரும் பேராசிரியர் கமில் ஸ்வலபிலும் ஆவார்கள்.

தனிநாயகம் அடிகள் இலங்கையைச் சேர்ந்தவர். கோலாலம்பூரிலுள்ள மலேயா சர்வகலாசாலையில் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். சிறந்த தமிழறிஞர். ஆங்கிலத்தின் மூலம் தமிழ் ஆர்வத்தைப் பல மேலை நாட்டு அறிஞர்கள் உள்ளங்களில் வளர்த்தவர்.

''மாநாடு சென்னையில் அமோக வெற்றியுடன் நடந்தது என்றுதான் நான் சொல்லுவேன். என் நண்பர்களான கமில் ஸ்வலபில், தியாகராஜ முதலியார், சுப்பையா மூவரும் அயராமல் உழைத்துத் தமிழுக்கும் தமிழகத்துக்கும் என்றும் நிலைத்து நிற்கும் புகழைத் தேடித் தந்துவிட்டார்கள்'' என்றார் தனிநாயகம் அடிகளார் தன்னடக்கத்துடன்.

மற்றொரு கூட்டுக் காரியதரிசி செக்கோஸ்லோவேகியா நாட்டைச் சேர்ந்த கமில் ஸ்வலபில். ஏற்கனவே தமிழ் நாட்டுக்கு நன்கு பரிசயமானவர். பல தமிழ் நூல்களைச் செக் மொழியில் பெயர்த்துக் கொடுத்திருப்பவர். இவருக்கு மலையாள மொழியும் நன்கு தெரியும். தகழியின் 'செம்மீ'னையும் செக் மொழிக்கு மாற்றியிருக்கிறார். சரளமாகத் தமிழ் பேசக் கூடியவரும் கூட.

''இரண்டாவது மாநாட்டைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்றேன்.

''எதிர்பார்த்ததைவிடச் சிறப்பாக நடந்திருக்கிறது. இத்தனை பெரிய விழாவாக இது மாறிவிடும் என்று நாங்கள் நினைத்துப் பார்க்கவில்லை. கலந்துகொண்ட அனைவரும் பிரமிப்பிலிருந்து விடுபடாமலேயே தத்தம் ஊர் திரும்புகிறார்கள். தமிழக அரசாங்கம் அளித்த ஊக்கம், நண்பர்களின் உழைப்பு, கலந்து கொண்டவர்களின் உற்சாகம், வானொலி, பத்திரிகையாளரின் ஒத்துழைப்பு எல்லாம் ஒருங்கே சேர்ந்து கருத்தரங்கைக் கலகலப்பான திருவிழாவாகச் செய்துவிட்டன. மறக்க முடியாத நிகழ்ச்சி'' என்று கூறி விடைபெற்றார்.

கூட்டுக் காரியதரிசி என்ற முறையில் அவர் பம்பரமாகச் சுழன்று கொண்டே இருக்க வேண்டியிருந்தது.

'தமிழ் இலக்கியத்துடன் அறிமுகம்'- என்ற இவருடைய கட்டுரை புத்தக உருவில் கடைசி நாள் விநியோகிக்கப்பட்ட போது, இன்றைய எழுத்தாளர்கள் பலரின் கோபத்துக்கு இவர் பாத்திரமாகிவிட்டார். சில பெயர்களைச் சொல்லியும் சில பெயர்களை விட்டும் இருந்ததுதான் காரணம்.

## கா. பொ. இரத்தினம்

இலங்கைப் பாராளுமன்ற உறுப்பினரும் சிறந்த தமிழ் அறிஞருமான கா. பொ. இரத்தினம் இலங்கைப் பிரதிநிதிகளில் ஒருவர். மனத்துக்குத் தோன்றியதைப் பட்டென்று பேசும் துணிவு உள்ளவர். முதல் மாநாட்டுக்குக் கோலாலம்பூர் போயிருந்தவரும்கூட.

''ஊர் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டவர்களெல்லாம் எப்படியோ சிபாரிசு பிடித்து வெளிநாடுகளிலிருந்து பிரதிநிதிகள் என்ற பெயரில் வந்து விட்டார்கள். இதை நிர்வாகிகள் ஓரளவு தடுத்திருக்கலாம்.

''கருத்தரங்கில் தமிழ் நிகழ்ச்சிகளுக்கு இன்னும் நிறைய இடம் கொடுத்திருக்க வேண்டும். குறைந்தபட்சம் ஆங்கிலத்துக்குச் சமமான இடமாவது அளிக்கப்பட்டிருக்க வேண்டும். தமிழ் நாட்டின் தலைநகரிலேயே இதைச் செய்ய ஏனோ தவறி விட்டார்கள்.

''கலைச் சொல் ஆக்கத்தைப் பற்றி இன்னும் தீவிரமான ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டிருக்க வேண்டும்.

''பல வெளிநாட்டு அறிஞர்கள், குறிப்பாக மலேசியா இலங்கையிலிருந்து பிரதிநிதிக் குழுக்களில் இடம் பெறவில்லை.

''இந்த நிலையைச் சற்று மறந்து வெளி நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக் கொண்டால் அவைகள் எல்லாமே — சிலை திறப்பு, ஊர்வலம், உபசரிப்பு எல்லாமே அற்புதம் என்றுதான் சொல்வேன்'' என்றார் இரத்தினம்.

## ஜீன் பிலியோஸா

உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவர் ஜீன் பிலியோஸா. இவர் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த பேரறிஞர். கீழ்த்திசை மொழிகளில் வல்லுநர். பாரிஸ் நகரிலுள்ள கீழ்த்திசை மொழிகள் ஆராய்ச்சி நிறுவனத்தின் நிர்வாகியும் கூட. ஃபிரெஞ்சுக்காரர்களுக்கே உரித்தான ஒருவகை நளினமும் எளிமையும் எப்போதும் இவர் முகத்தில் நிறைந்திருக்கின்றன. சரளமாகவும் அன்பாகவும் பேசும் சுபாவமுடையவர்.

''இந்த இரண்டாவது மாநாட்டைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்றேன் அவரிடம்.

''வொண்டர்ஃபுல்'' என்ற ஒரே வார்த்தையுடன் அவர் நழுவ முயன்றார்.

''சர்ச்சைகள், அபிப்பிராய பேதங்கள், வாக்குவாதங்கள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''எந்த மாநாட்டிலும் இவை எப்படியோ நுழைந்து விடுகின்றன. என்ன செய்வது?''

''பாரிஸில் நடக்கவிருக்கும் மூன்றாவது மாநாட்டை இந்த இரண்டாவது மாநாட்டின் அளவில் நடத்த இயலுமா?''

ஒரு கணம் பிலியோஸா தயங்கினார். ''வந்து பாருங்களேன்'' என்றார் சிரித்துக் கொண்டே.

''உங்கள் கற்பனை எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொள்வதில் தவறு இல்லையே?''

''இந்த அளவு பெரிதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் இதைவிட அமைதியாக இருக்கும் என்று நம்புகிறேன். வரட்டுமா, வணக்கம்'' என்றார் ஜீன் பிலியோஸா.

தமிழ் வலம் வந்த தூதுவர்களிடமிருந்து நாமும் வணக்கம் கூறி விடைபெறும் நேரம் வந்து விட்டது.

'நல்தவத்தவருக்குள்ளிருந்து ஓங்கும் நமச்சிவாயத்தை நான் மறவேனே' என்று பாடினார் கவி. இறைவனை வணங்குவதை விடப் பக்தனை வணங்குவது ஒரு படி மேல் என்பது நமக்குத் தெரியும். தமிழ்த் தாயின் பக்தர்களைப் போற்றிக் கலைமகளின் அருளைப் பெறுவோம்.

— மேனு

# பொன்னிவனத்துப் பூங்குயில்

### பத்தாம் அத்தியாயம்

## கூண்டில் அடைத்தால் கூவாதோ?



கொத்தமங்கலம் சுப்பு

யமுனைக் கரையில் பால் மோர் தயிர் விற்க வந்த ஆய்ச்சியர்கள், ''தயிரோ தயிரு'' என்று கூவுவதற்குப் பதில், 'தாமோதரா! தாமோதரா' என்று கூவினார்களாம். 'மோரோ, மோரு' என்று கூவுவதற்குப் பதிலாகக் 'கோவிந்தா! கோவிந்தா!' என்று கூவினார்களாம். இதைப் போலவே ஆண்டாளின் திருமுற்றத்திலே கூட்டிலிருந்த கிளிப்பிள்ளைகள் 'கோவிந்தா!' என உரைத்தன.

குயிலியை அவளுடைய மாமன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்தவுடனே ஒரு மதுரமான குரல் அங்கு கேட்டது. ''வாங்க! வாங்க! ஊஞ்சலிலே உட்காருங்க! அடியே, வெத்தலைப் பெட்டியை எடுத்து வை!'' என்ற குரல்தான் அது. குயிலியின் வீட்டுக்குள்ளே நுழைந்தவர்களை அவ்வாறு உபசரிக்கக் கூடிய வயது வந்த பெண் குயிலி ஒருத்திதான்! ஆனால் அந்தக் குயிலியோ வீட்டிலிருப்பதில்லை. பறந்து கொண்டே இருப்பாள். அப்படியிருக்கும் போது யார் அப்படி உபசரித்தார்கள் என்று பார்த்தால் கிளிப் பிள்ளைகள்தான் அப்படிப் பேசி உபசரித்தன.

சின்ன மேளம் பொன்னம்மாள் என்றால் ஒரு காலத்திலே நாடு முழுதும் பெயர் பெற்ற ஒரு பெண்மணியின் பெயராக அது இருந்தது. அந்தக் காலத்திலே சின்னமேளம் பொன்னம்மாளின் வீட்டு வாசலிலே, இரவு நேரங்களிலே 'பளீர், பளீர்' என்று பல கடுக்கன்கள் ஒளி வீசும். அவர்கள் தலையிலே முக்காடிட்டுக் கொண்டிருப்பார்கள். ஒருவர் நிற்பது மற்றவருக்குத் தெரியாமல் அவர்கள் விலகி விலகி நிற்பார்கள். அவர்கள் எல்லாரும் அவ்வூரிலுள்ள சங்கீத வித்துவான்கள். அவர்களை அங்கு இழுத்தது என்ன? க்ஷேத்ரக்ஞரின் பதங்கள்! மூவ கோபாலரின் அருமையான காதல் ரசத்தை ஊட்டும் பதங்கள். சின்னமேளம் பொன்னம்மாளும், அவள் மகள் லாவணி மீனாம்பாளும் சேர்ந்து பதங்களைப் பாட ஆரம்பித்துவிட்டால் அந்தப் பதங்களே பதம் பெறும்! அந்தச் சாகித்தியக்காரர்கள் எல்லாரும்

அவள் வீட்டுத் திண்ணையிலே தெய்வ ரூபத்திலே வந்து காத்திருப்பார்கள்.

பாடலை எழுதுகிறான் கவிஞன். அதை இசையிலே அமைத்துப் பாடு கிறார் வித்துவான். சில கலைஞர்கள் இராமாயணக் கீர்த்தனங்களைப் பாடும் போது ரகுவீரனையே கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள். உள் ளத்தை உருக்கி, மெய்ம்மறந்து ஆனந் தக் கண்ணீர் பொழியச் செய் கிறார்கள்! சிலர் பாடும்போது சாகித்தியத்தை எழுதியவர்கள், ''ஐயோ! நாம் இவரிடம் கொடுக் கவா எழுதி னோம்?'' என்று கவலைப்படுவர். அழகான பெண் ணைப் பெற்று அவளைச் சற்றும் தரம் தெரியாத வருக்குக் கலியா ணம் செய்து கொடுத்தால் அந்தப் பெண் ணைப் பெற்றவர் மனம் என்ன பாடு படுமோ அப்பாடு படும் கீர்த்தனை களை எழுதியவர் களின் மனங்கள். தம்முடைய பாவம் தெரியாமல் ஒரு வர் பாடினால் அந்தக் கவி ஞர்கள், ''அட



பாவமே, பாவமே!'' என்று தம் தலை யில் அடித்துக் கொள்வார்கள்.

சில கலைச் செல்விகள் அதை நாட்டியமாக ஆடும் போதோ அந்தப் பாடல்களின் முழு உருவத்தையும் நாம் பார்க்கிறோம்.

''தாயே யசோதா! உந்தன் ஆயர் குலத்துதித்த மாயன் கோபாலகிருஷ் ணன் செய்யும் ஜாலத்தைக் கேளடி'' என்று நாட்டியத்தில் பழக்கமுள்ள குடும்பத்தினர் பாடும்போது கண்ணனே எதிரில் வந்து நிற்கிறான். இதே பாடலை 'ரெடிமேடு வித்துவான் ரங்க மணி',

''தாயேய சோதா! உந்தன்
நாயர் குலத்துதித்த''

என்று வர்ணிக்கும் போது தலையிலே கோணல் கொண்டையை வைத்துக் கொண்டு எதிரில் ஒரு நாயர் வந்து நிற்கிறார்!

பாட்டுக்கு உரிய பொருளை அபி நயக்காரர்கள் நன்கு உணர்ந்தால்தான் அபிநயம் பிடிக்க முடியும். இல்லாவிட் டால் பிடி வழுக்கும். அவ்வுணர்ச்சிகள் சின்ன மேளம் பொன்னம்மாவின் வீட்டு வாசலிலே தாண்டவமாடிக் கொண்டிருக்கும். எந்த ராஜா எங்கு சண்டையிட்டாலும் சரி, பொன்னம் மாளுக்குத் தஞ்சையிலிருந்து திருவனந்தபுரம் வரையிலே கச்சேரிகள் இருந்துகொண்டே இருக்கும். அவள் இல்லாத தேர் திருவிழாக்கள் இல்லை யென்றே சொல்லலாம். அந்தக் காலத்திலே தஞ்சையை ஆண்ட 'புதிய போஜன்' என்று புலவர்களால் போற்றப்பட்ட ஷாஜி மகாராஜா பொன்னம்மாவிடம் உயிரையே வைத்திருந்தார். கலைச் செல்வம் மிகுந்த பொன்னம்மாவிடம் தாம் இயற்றிய 'பல்லக்கு சேவை பிரபந்தத்தை'க் கொடுத்து அவள் வாயால் பாடுவதைக் கேட்பதிலே அவ ருக்கு அத்தனை ஆசை. அதற்காக அவர் விட்ட மானியங்கள் எத்தனையோ, கணக்கில்லை.

இன்றைக்கும் குயிலியின் வீட்டி னுள்ளே அழகிய கிரீடம் வைத்த பரங்கி நாற்காலி ஒன்று இருக்கிறது. அந்த நாற்காலி மேல்நாட்டிலிருந்து நல்ல தூக்க மரத்திலே செய்யப்பட்டு

வந்தது. அதற்கு நான்கு கால்கள் இருந்த காலத்திலே அந்த வீடும் நன்கு இருந்தது. பிறகு அதுவே மூக்காலியாக மாறியது. இப்போது இரண்டே காலில் நிற்கிறது. என்ன செய்வது? வீடும் அந்த நிலைக்குத்தான் வந்துவிட்டது!

ஒரு நாள் அந்தக் குடிலுக்கு மகாராஜாவே விஜயம் செய்து அந்த நாற்காலியின் மேல் அமர்ந்தாராம். அதன் நினைவாக அந்த நாற்காலியின் மேல் ஒரு பட்டு எப்போதும் கிடக்கும். அரசர் தம் வீட்டுக்கு விஜயம் செய்தபோது அவருடைய காலைப் பாலால் கழுவி இந்தப் பட்டைக் கொண்டு தான் துடைத்தாளாம். அதுமட்டுமா? ஒரு மூலையிலே பழைய சகவாத்து ஒன்று சிவப்பு நிறத்திலே ஒரு கத்திவாத்தியத்தைக் கட்டித்தழுவி நிற்கிறது. கத்தி வாத்யம் என்றால், ''இது என்னடா ? கத்தியை வைத்துக் கொண்டு வாசிப்பார்களா ?'' என்று எண்ணலாம். தம்பூர் போன்ற ஒன்று. அதன் இரண்டு பக்கங்களிலும் இரண்டு குடங்கள். குடங்களுக்கு மேலே இழுக்கின்ற தந்திகளிலே கத்திபோன்ற ஒன்றை வைத்துக் கொண்டு நாட்டியத்தின் போது தாளமாக இசைப்பது வழக்கம். அந்தத் தாள வாத்தியத்



துக்கு முன்பு சுத்தி வாத்தியம் என்ற பெயர் இருந்தது. இப்போது அதுவே கெத்து வாத்தியம் என்றாகி விட்டது. அந்தக் சுத்தி வாத்தியத்துக்குப் பக்கத்திலே ஓரிடத்தில் தரையில் கோலம் போட்டு ஒவ்வொரு நாளும் பொன்னம்மாள் அந்தக் கோலம் போட்ட இடத்துக்கு வந்து வணங்குகிறாள். அது வேறு ஒன்றுமல்ல! அந்த இடத்திலேதான் அமர்ந்து அரசர் பொன்னம்மாளிடம் அவருடைய சாகித்தியங்களை மிக்க அன்போடு கேட்டார். அதற்காக அந்த மரியாதையை இன்றும் செய்து கொண்டு வருகிறது அந்தக் குடும்பம். மரியாதைதான் இருக்கிறதே தவிர மன்னர் கொடுத்த மானியங்கள் இல்லே. 'மன்னர் விஜயம் செய்த வீடு' என்ற பெயர்தான் அந்த வீட்டுக்கு இருக்கிறதே தவிர அதற்குரிய வசதிகள் இல்லே. காரணம் என்ன? பொன்னம்மாள் எப்போதும் பொன்னம்மாளாகவே இருக்க முடியுமா? இன்று அவள் வெள்ளியம்மாளாக ஆகி விட்டாள்.



குயிலி உள்ளே நுழைந்த வுடனே மாமன் கதவை ஓங்கிச் சாத்தினான். "ஏன் கதவைச்சாத்தறே?" என்று கேட்டாள் குயிலி.

"என்ன? ஊரெல்லாம் சுத்தறது? வீட்டுக்குச் சாப்பாட்டுக்குக்கூட வரதில்லே. வயசு வந்த பொண்ணு லட்சணமா இல்லாமே....? உன்னே ஏன்னு கேட்கிறவங்க இல்லேன்னு நினைக்கிறயா நீ?" என்று கோபித்தான் மாமன்.

"நீங்கதான் கேக்கிறீங்களே?" என்று குயிலியும் பதிலுக்குக் கோபித்தாள்.

"என்ன எதுத்தா பேசறே நீ? எங்கேடி போயிருந்தே?" என்று மாமன் கம்பை எடுத்து ஓங்கினான்.

"எங்கே, அடிங்க பார்ப்போம்? நான்தான் உங்க சங்காத்தமே வேண்டாம்னு இந்த வீட்டிலே இருக்கப் பிடிக்காமப் போறேனே?" என்றாள் குயிலி.

"ஏண்டி? நாங்க அப்படி என்ன கேவலமாப் போயிட்டோம்?" என்று இடைமறித்தாள் சின்னம்மா.

"என்னமோ? எனக்குப் பிடிக்கலேன்னு விட்டுட வேண்டியதுதானே?"

"ஊரைச் சுத்தப் புடிக்குதா? தெருவிலே நின்னுக்கிட்டுப் பத்துப் பயகளோட பாடப் புடிக்குதா?"

"நாங்க தெருவிலே நின்னு பாடிணு, நீங்க தெருவிலே நின்னு ஆடறீங்க. இங்கே வெத்தலே மடிச்சுக் கொடுக்கிறதைவிட வீதியிலே பிச்சை எடுக்கிறது கேவலமில்லே!" என்றாள் குயிலி சடக்கென்று.

"என்ன தங்கச்சி! அவ தலே தெறிச்சுப் போய்ப் பேசறா! அவளேக் கேள்வி கேட்டுக்கிட்டிருக்கியே! விறகுக் கட்டையை எடுத்து நாலு போட்டாத்தான் தெரியும்."

"என் கை ஒண்ணும் பூப்பறிக்கப் போகலே!"

"இனிமே எங்கே பூப்பறிக்கிறது? வெளியே போக விட்டாத்தானே, பூப்பறிப்பே?"

"இந்தா, நான் போறேன், என்ன செய்வீங்க பார்ப்போம்" என்று குயிலி வெளியே போகக் கிளம்பினாள்.

"எங்கே போ! ஒரு அடி எடுத்து வை! உன் காலே ஒடிச்சுடறேன் பார்" என்று மாமன் மறுபடியும் கம்பை ஓங்கினான்.

அப்போது, "அடே, அதையா அடிக்கப் போறே?" என்று ஒரு குரல் அதிகாரத்தோடு கேட்டது. வந்தாள் பொன்னம்மாள். ஒரு காலத்தில் தைலமிட்டு வாரி விடப்பட்ட அந்தக் கருங்குழல் வெண்மையாகப் பஞ்சுப் பொதி போல் நிறைந்திருந்தது. காலிலே தங்கப் பாத சரம் இட்டுத் "தகதித் ததிங் கிணதோம்" என்று ஆடிய அந்தத் திருக் கால்கள் இன்றைக்கு நடக்க முடியாமல் 'ததிங்கிணதோம்' போட்டுக் கொண்டே வந்தன. "மாலைப் பொழுது அரங்க மாலே நினைந்து மண மாலே தொடுக்கும் நங்கை மாலே நீர் அறியீரே" என்று உசேனி ராகத்தில் பாடி, அபிநயம் பிடித்து மாலே நேரத்தையும், தென்றலேயும், மலர்ந்த மலர்களின் அருமையான மணத்தையும், ஆண்டாளேயும் கண்களுக்கு முன்னே கொண்டு வந்த அந்தக் கைகள் இப்பொழுது ஒரு கோலேப் பிடித்து நடுங்கிக் கொண்டிருந்தன. "சுவாமி" என்று சொல்லும் போது தன் கண்களால் எதிரில் இருப்பவர்கள் எல்லோரையும் தரத்தில் உயர்த்தி, கிழவனேக் குமரனுக்கிய அக் கண்களில் இப்போது பொடிக் கொசுக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. வாய் மலரைத் திறந்து பாடினல் போதும் என்று வண்டுகள் போல் வித்துவான்கள் காத்திருந்தார்கள் ஒரு காலத்தில். அந்தக் குரலிலே இப்போது இருமல் இருந்து கொண்டிருந்தது. அவள் நாட்டியத்தில் அவள் நடை

இனிமைசொட்டும் 24

# குலாப் ஜாமுன்களை







## வீட்டிலேயே தயாரிக்க உதவுவது

# ஹிமா குலாப் ஜாமுன் மாவு



ஒரு பொட்டணம் என்றால் 24.
தூய்மை மயமான பொருள்களால் கலவை
பெற்றது ஹிமா குலாப் ஜாமுன் மாவு □
நீர் சேர்த்து, இலேசாகப் பிசைந்து,
24 உருண்டைகளாக்கி, குழிவாணலியில்
பொரித்தெடுக்க இருபதே நிமிடங்கள்.
நெகிழ்ச்சி கொழிக்கும்
குலாப் ஜாமுன்களாகப்
பூரித்துவிடும். சர்க்கரைப்
பாகிலே ஊறவிட்டுப்
பரிமாறவும்.




இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லின்டாஸ்-HMG. 3.77(RR)TM



தெ. ஆ. மாவட்டம் பாலூர் கிராமம் திரு ஜெ. தேவநாதன் (சுதந்திரக் கட்சி பிரமுகர்) அவர்கள் புதல்வி சௌ. அம்சவேணிக்கும் சேலம் சுப்ரமணியா ரைஸ் மில் திரு சின்னசாமி கவுண்டர் குமாரர் சிர. ஞானமூர்த்திக்கும் 12-2-68 அன்று சேலத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!





வேலூர் பாலாஜி புக் ஹவுஸ் எம். ஜி. கேசவன் அவர்கள் குமாரத்தி திருநிறைச்செல்வி மரகதமணிக்கும் திருநிறைச் செல்வன் ரங்கநாதன் B. Sc.,க்கும் வேலூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

யைப் பார்ப்பதற்கு முப்பது மைல்கள் நடந்து வந்தவர்களும் உண்டு. முன்னடையைப் பார்க்க முனிவர்கள் தவம் செய்வார்கள். பின்னடையைப் பார்த்துப் பல பெண்கள் வெட்கப்படுவார்கள். அந்த நடையழகி இன்று தளர்ந்து நடந்து வந்தாள். ஆயினும் அந்தப் பழைய கௌரவமும், அதிகாரமும் இன்னும் அவளை விட்டுப் போகவில்லை. அவள் வந்தவுடனே அவளுடைய மகன், ''என்னம்மா, நீங்க ஏன் வர்றீங்க?'' என்றான் மரியாதையோடு.

''டேய்! நீ ஏண்டா அதை அடிக்கப் போறே?''

''அடிச்சுட்டேனா? அதட்டினேன்.''

''நீ இப்படி அதட்டுகிறதை அவ அம்மா இருந்து கேட்டாளு அப்படியே உசிரை விட்டிருவா.''

''அதான் நம்ம தலையிலே கட்டிட்டுப் போயிட்டாங்களே!'' என்றான் அவளுடைய மகன்.

ஆம், மீனம்பாள் இருக்கும் காலத்திலே குயிலியைத் தரையிலே நடக்க விட்டதே இல்லை. குழந்தைப் பருவத்தில் குயிலி நடக்கும்போது அவள் கால்கள் தரையில் பட்டால் கூசுகின்றன என்பதைக் கண்டாள் மீனம்பாள். அன்று முதல் தன் ரத்ன அம்பாரத்தை விரித்து அதன் மேல்தான் அவளை நடக்க விடுவாள்.

தாய் குழந்தைக்கு அலங்காரம் செய்த அழகுதான் என்ன! கலைக் குலத்தில் பெண் என்றாலே பெருமை உண்டு. எவ்வளவு செல்லமாக வளர்த்தாள்! குழந்தையின் தலையில் அவள் சாதாரணத் தைலங்களைத் தேய்ப்பதில்லை. மீனம்பாள் தன் மகளுக்கு அருமையான சண்பக மொட்டுத் தைலத்தைத்தான் தடவுவாள். சண்பகப் பூவிலே வண்டுகள் படியாது. தன்னுடைய அருமை மகளின் கூந்தலை வண்டு கடித்துவிடக் கூடாது என்று தாய் எண்ணினாளோ என்னவோ! தலையை வகுப்பு எடுப்பதே தனி அழகு. ''நியாயத் தீர்ப்பு மயிர் பிளந்ததுபோல் இருக்க வேண்டும்'' என்பார்கள். தாயின் வகிடும் அப்படித்தான். ''பெண்ணே, நீ பெண் மாத்திரமல்ல. நீ ஆணும் கலந்தவள். உமையொருபாகனைப்போல் உன் உடலிலே சரி பாதி உன் கணவன்'' என்ற கருத்தைத்தான் தலையை நடு வகிடு எடுத்து வாருவது காட்டுகிறது.

மீனம்பாள் நடு வகிடு எடுத்தாளேயானால் அது இன்னொரு நியாயத்தையும் காட்டும். பஞ்சாயத்தார்களை வைத்துச் சொத்தைச் சரியாகப் பிரிப்பதைப் போலத் தன் ஐந்து விரல்களாகிய பஞ்சாயத்தார்களை வைத்துக் கொண்டு தன் மகளின் தலையை வகிர்ந்து சீவுவாள். இதற்குப் பொருள் 'பெண்ணே! நீ பிறந்து விட்டாய். என்னுடைய சொத்துக்கள் சரிபாதி ஒருபக்கம் இருக்கட்டும். நீ சம்பாதிக்கப் போகிறவை சரி பாதி' என்று அவளுடைய ஆசையைத் தெரிவிப்பதைப் போல இரு பங்காகவே வகிர்வாள். தலையை நன்கு வகிர்ந்து அதன் மேல் உச்சிப் பூவை வைக்கும்போது அந்தப் பூவைத் திருகிக் கொண்டே 'வாடாத நறுமலர் உன் வார்குழலில் என்றைக்கும் இருக்க வேண்டும்' என்று வாழ்த்துவாள். நறுமணங்கள் கூட்டிய சாந்தைத் தங்கக் கிண்ணத்தில் வைத்துக் கொண்டு தன்னுடைய கைவிரல்களால் சாந்தைக் குழைப்பாள்.... குழைத்த சாந்தை ஒரு முறை ஊதிப் பார்ப்பாள். ஊதிவிட்டுக் கைவிரல்களிலே அதை வைத்து ஒட்டுகிறதா என்று பார்ப்பாள். ஆம்! ஒட்டுகிறது என்று தெரிந்த பிறகுதான் அந்தத் திலகத்தை இடுவாள். அப்போது 'இந்தப் பொட்டுக்குள் உலகம் ஒட்டிக் கொள்ள வேண்டும்! சிட்டுக் குருவிக்கு ஒட்டு வைத்துப் பிடிப்பது போல உலகத்திலே சிட்டுக் குருவிகள் போலத் திரிகின்ற செல்வர்கள், கலை ரசிகர்கள், மன்னர்கள் எல்லாரும் உன் பொட்டுக்குள் வந்து ஒட்ட வேண்டும்' என்று பொட்டிடுவாள். குழந்தையின் காதுக்கு இரு குண்டலங்கள் போட்டு அவள் நடந்து வரும்போது அந்தக் குண்டலங்கள் தாளத்தோடு ஆடுகின்றனவா என்று பார்ப்பாள். ஒரு சந்தேகம் வரும். எங்கே தன்னுடைய திருஷ்டி மகளுக்குப் பட்டுவிடுமோ என்ற எண்ணத்திலே அதே சாந்தைக் கொண்டு கன்னத்திலே ஒரு திருஷ்டிப் பொட்டிடுவாள். வண்ணக் கமலத்தில் வண்டு படிந்ததைப் போல் கன்னக் கமலத்தில் கருஞ் சாந்து அமையும். மான் குட்டியின் கண்கள் போன்ற நீண்ட கரிய விழிகளுக்கு மையிடும் போதே, 'இந்த மையால் பல உள்ளங்களில் காதல் கவிதைகளை எழுது' என்று ஆசி அளித்துக் கொண்டே குயிலியின் தாய் மையிடுவாள்....

ரோஜாப்பூ பாரசீகத்திலிருந்து வந்தது என்று யாரோ சொன்னார்கள். மீனம்பாள் இதை நம்பவில்லை. ரோஜாப்பூ பிறந்ததே தன் மகளுடைய வாயிலிருந்துதான் என்று அவளுக்கு எண்ணம். ரோஜா மலர் போன்ற இரு இதழ்களும், அதற்

குள்ளே முல்லை அரும்பைப் பதித்தது போன்ற பல் வரிசைகளையும் பார்த்து ஆனந்தப்படுவாள் மீனும்பாள். நல்ல தங்கக் கிண்ணத்திலே புத்துருக்கு நெய்யை விட்டுப் பருப்புச் சாதத் தைப் பிசைந்து குழந்தைக்கு அவள் ஊட்டும் போது ரோஜா, முல்லை, சண்பகம் ஆகிய மூன்று மலர்களையும் தன் மகளின் வாயில் பார்ப்பாள். குழந்தையின் மதி முகத்தைக் காண மாட்டாள். 'வானத்தின் அழகு வையத்தில் வந்து மலர்ந்து திருமுக மண்டலமாகக் காட்சியளிக்கிறது. இது மறுபடியும் வானில் பறந்துவிடக் கூடாது' என்ற அச்சத்திலே இரண்டு ஆணிகளைத் திருகியதுபோல், குயிலி யின் மூக்கிலே இரண்டு ஆணி முத்து மூக்குத்திகளை இடுவாள் மீனும்பாள். தன் மகளைத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டும் போது அவள் பொய் உறக்கம் கொண்டு இருப்பதைப் பார்ப்பாள். மெல்ல 'குயிலே' என் பாள். குயிலியின் முகத்தில் சிரிப்பைக் கண்டால் 'ஆம்! உறக்கத்திலும் உன் சிரிப்பு இருக்கட்டும். இதைக் காண இளங் காளைகள் கிறக்கத்தோடு அலையட் டும்' என்று சொல்லுவாள். தாலாட்டுப் பாடிக்கொண்டே யிருப்பாள். பாடும் போது குயிலியும் படுக்கையிலிருந்து இலேசாகப் பாட ஆரம்பிப்பாள். எதையோ பாடுவாள். அது பாட் டல்ல. ஆனால் குயிலியின் குரலைக் கேட்டவுடனே தாயின் வாய் அடைக் கும். பிறகு அவள் வாயிலிருந்து 'நீ யாரோ? நான் யாரோ?' என்ற தாலாட்டுப் பாட்டு வரும். 'நீ யாரோ, நான் யாரோ?' என்று சொல்லி முடித்தவுடனே அவள் கண் களிலிருந்து இரண்டு சொட்டுக் கண் ணீர் வரும். 'இறைவன் கொடுத்த செல்வம். எங்கிருந்தோ வந்தது. இதற் குத் தாயாக இருக்க எனக்கு ஏது யோக்கியதை?' என்று எண்ணி முத்த மிடுவாள். இப்படிச் சீராட்டி, பாலூட்டி வளர்த்த அவள் வெகு நாட்கள் இருக்கக் குயிலிக்குக் கொடுத்து வைக்கவில்லை. குயிலிக்கு ஐந்து வயது ஆகுமுன்பே அவள் பிரிந்து விட்டாள். அவள் மாத்திரமா பிரிந்தாள்? அரவணைப்பும் அன்றோடு பிரிந்தது. மலையளவு சொத் திருந்தாலும் கலைஞர்களுடைய செல் வம் நிலையற்றது. கலைஞர்களுக்குப் பணம் வந்து கொண்டே இருக்க வேண்டும். அப்போதுதான் குங்குமப்பூ கலந்த பால் கொதித்துக் கொண் டிருக்கும். எங்கும் நறுமலர்கள் இறைந்து கொண்டிருக்கும். இளம் வெற்றிலை இசையைச் சுவைத்துக் கொண்டிருக் கும். இன்பப் புன்னகையில் ஏலம், கிராம்பு மணக்கும்.

குயிலியின் வீட்டிலும் அப்படித் தான் செலவுகள் நடந்து வந்தன. ஆனால் மீனும்பாள் இல்லை. பொன் னம்மாளுக்கோ வயதாகி விட்டது. குயிலியின் மூக்குத்தி முதற்கொண்டு விற்கும் நிலைக்கு வந்துவிட்டது. குயில் கருங்குயிலாக மாறி விட்டது. சிவந்த தேகம் கறுப்பாக மாறியது. பழைய சால்வை கிழிந்து கிடப்பதைப் போல் அந்தப் பழைய மாளிகையிலும் பள்ளம் மேடு அதிகமாகி யிருந்தது. இந்த நிலையில் மாமன் வீட்டின் மேற் பார்வை ஆளாக மாறினான். அவ னுக்கு டேப் நன்ருக வாசிக்க வரும். இது தவிர முக வீணையும் மிக அழ காக வாசிப்பான். இந்த இரண்டு கலை யும் பக்கவாத்தியக் கலைகள் ஆதலால் பலருடைய தயவை அவன் நாட வேண்டி வந்தது. நாட்டியம், சின்ன மேளம் முதலியவற்றுக்காக அவனிடம் சொல்வார்கள். பல பெண்களை அழைத் துக் கொண்டு சென்று கச்சேரிகள் நடத்தி இதிலேயே பிழைப்பு நடத்தி வந்தான். கலைஞனைக் கலைஞனாக மாத் திரமே இருந்துவிடச் செய்கிறதா உலகம்! பல பெண்கள் வீட்டுக்கு அவன் போவதும் வருவதுமாக இருப்ப தனால் அவனைச் சுற்றிச் சில இளை ஞர்கள் வட்டமிட ஆரம்பித்தனர்.

ஒரு நாள் குயிலியின் காதில் ஒரு செய்தி விழுந்தது. இதை, மாமனால் அழைத்துச் செல்லப்பட்டு நாட்டிய மாடிய பெண்களில் ஒருத்தியே சொல் லித் தன் கையிலிருந்த தங்க வளையலைக் குயிலிக்குக் காட்டினாள். அன்று முதற் கொண்டு குயிலிக்கு நெஞ்சம் படபட என்று அடித்துக் கொண்டது. இந்த மாமன் என்றைக்கேனும் தன்னிடமும் வந்து இந்த வார்த்தைகளைச் சொல்லக் கூடும் என்று கருதினாள். இனி அந்த வீட்டில் இருக்கக் கூடாது என்ற எண் ணத்திலேயே குயிலி ஊரைச் சுற்ற ஆரம்பித்தாள். ஆனால் அவளை வீட் டுக்கு வரச் செய்வதற்கு அங்கு ஒன்றே ஒன்று இருந்தது. அது பழைய வீணையல்ல. பழைய வீடும் அல்ல. பழைய கிழவிதான் அது. யாரிடம் வெறுப்பு வந்தாலும் குயிலிக்குப் பொன்னம்மாளிடம் வெறுப்பு வருவ தில்லை. அது மாத்திரமல்ல. உல கத்தையெல்லாம் மயக்கிய அவளது கண்கள் மயங்கிய நிலையில் இருக்கும் போது அவளைப் பார்ப்பதற்காகச் சில சமயம் வீட்டுக்கு வருவாள். அதையும் சில காலமாக நிறுத்திக் கொண்டாள். அப்படி இருக்கையில்தான் இன்று



**வாகன விநோதம் !**

குழந்தைகள் எளிதாக இயக்கக்கூடிய குட்டி 'ஹோவர்க்ராப்ட்' ஒன்றை பிரிட்டிஷ் நிறுவனம் தயாரித்துள்ளது. தரையிலும், தண்ணீரிலும் செல்லக்கூடிய இந்த வாகனம், தண்ணீர் அல்லது தரைக்கு மேலே இரண்டு மூன்று அங்குல உயரத்தில் பறக்கும் பிரத்தியேக அமைப்புடன் தயாரிக்கப்பட்டுள்ளது. மணிக்கு 7 மைல் வேகம் செல்லக்கூடியது. 6 அடி நீளமும், 3 அடி அகலமும் உள்ள இந்த வாகனத்தைக் காரின் 'டாப்'பில் வைத்துக்கட்டி எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம்.

---

மாமனுடைய கைகளில் அகப்பட்டாள். மாமனும் அடிக்கடி அவளைத் தேடுவதில்லை. ஆனால் இன்று ஏன் தேடினான்?

"ஏ, குயிலி! அந்த உள்ளே ஆணியிலே மாட்டியிருக்குது பார் துருத்தி. கொஞ்சம் சோத்துப் பசையைப் போட்டு அதிலே கிழிந்திருக்கிற இடத்தையெல்லாம் ஒட்டிக் கொஞ்சம் ஊதிப் பாரு" என்றான் மாமன்.

"ஏன் ? ஊதினாப் பிஞ்சுக்கும்!"

"அட! பிஞ்சுக்கிட்டா பாதகமில்லே. ஆடற பெண்கள் காலிலேயே பிசுரடிக்குது. நீ என்னமோ ஊதினாப் பிஞ்சுக்கும்கிறே. சும்மா ஊது!"

இதற்குள்ளே பொன்னம்மாள் குறுக்கிட்டாள். "ஏ ! அதை ஊதச் சொல்லாதேடா ! பாவம்! வளர்ற குழந்தே ! அப்படியே ஊதி ஊதிக் குன்னிப் போவும்."

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. அவ ஊதினா உடம்பும் ஊதும் !"

"எனக்கொன்றும் உடம்பு ஊத வேண்டாம் " என்றாள் குயிலி.

"அட, சொல்லிக்கிட்டே இருக்கேன். எதுத்துப் பேசறியே ? தங்கச்சி! கொஞ்சம் சோத்துப் பருக்கை எடுத்துக்கிட்டு வா. ஏ, குயிலி! நீ போய் அந்தத் துருத்தியை இங்கே கொண்டா" என்றான் மாமன். குயிலி வேண்டா வெறுப்போடு அந்த அறைக்குள் சென்று சுவரில் மாட்டியிருந்த வாத்தியத்தை எடுத்தாள். படீரென்று கதவைச் சாத்தி வெளியே நாதாங்கியைப் போட்டான் மாமன். குயிலி ஓடிவந்து கதவைப் படபடவென்று தட்டினாள்.

"அங்கேயே இடு ! தங்கச்சி ! கதவை யாரும் திறக்கக் கூடாது. நான் கோயிலுக்குப் போயிட்டு வரேன். நான் வந்த பிறகு சோறு போடலாம்" என்று சொல்லிப் பழைய பூட்டு ஒன்றால் கதவைப் பூட்டிவிட்டு வெளியே நடந்தான் மாமன். "அடே தம்பி ! தம்பி !" என்று அலறினாள் பொன்னம்மாள். கிழவியின் வார்த்தை கின்னரக்காரன் காதில் ஏறுமா ?

குயிலி தட்டுவதை நிறுத்தினாள். அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவர்களோடு பேசுவதைக் காட்டிலும், தனிமை இன்பமாகத் தோன்றியது. தரையில் உட்கார்ந்தாள். சேர்ந்தாற் போல் இரண்டு நாட்கள் தூங்கினால் என்ன என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். ஆனால் இந்த மாமன் எங்கே போகிறானோ ? வரும் போது எந்த முறையில் வருவானோ என்ற பயம் வந்தது. (தொடரும்)

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா

சித்திரம்: விஜயா

10























சந்திர ஒளியில் அந்தப் பீடத்தின் மீது படிந்துள்ள ரத்தக் கறையைப் பார், எப்படி ரத் தினம் போல் ஜொலிக்கிறதென்று
கந்தா, நம்மைப் பயங்கரமான ஏதோ ஓர் அபாயம் சூழ்ந்து வரு வதாக என் உள் மனம் சொல்லு கிறது.


பயந்த படியே நடந்து விட்டது. அவர்கள் பலிபீடத்தை விட்டு வெளியே வந்த போது....


கந்தா... நான்... ஆ...


இவர்கள் மனிதர்களா, இல்லை ஓநாய்களே தானா?
தன் மீது தாவியவனைச் சுழற்றித் தரையில் அடித்தான் ஆனந்தன். அப்போது வெளியே அவன் கண்ட காட்சி...?
ஆனந்தா! நாம் ஓநாய் மனிதர்களால் சூழ்ந்து கொள்ளப் பட்டோம். போராடித் தான் மீளவேண்டும்.


போராட்டம் என்பது அத்தனை சுலபமானதாக இல்லை. கந்தனைக் கீழே தள்ளி இரண்டு ஓநாய்கள் அவன் குரல்வளையை அமுக்கின.


அதே சமயம், உறுதியான ஏதோ ஓர் ஆயுதத்தினால் மற்றொரு ஓநாய் ஆனந்தனை அடித்துக் கீழே சாய்த்தது.
தொடரும்...

If paper sarees
are made in India
it is just possible
West Coast pape
might
wrap you up
nicely

WEST COAST PAPER
FOR WRITING
PRINTING
PACKAGING

**WEST COAST PAPER,** SHREENIWAS HOUSE, WAUDBY ROAD, BOMBAY 1.

PS/WCP/



# அல்டாப் அப்பாசாமி

இரும்பன்

ஆலோசனையோ' அபிப்பிராயமோ சொல்வதென்றால் அப்பாசாமி சொல்லணும் கேட்கணும். அன்று அப்படித்தான் 'டிரீம்லாண்ட்' ஹோட்டலுக்குப் போயிருந்தோம். "எப்படிடா ஹோட்டல்?" என்று கேட்டு வைத்தோம்.

"அட, எப்படியடா இப்படிச் சொப்பனபுரியாக ஒரு ஹோட்டலை நிர்மாணிக்க முடிந்தது? சுவரில் என்ன அழகான சித்திரங்கள்! பண்டைய காலத்துக்கே நம்மை இட்டுச் செல்வதுபோல்! ஏண்டா, இப்படி மங்கலா விளக்குப் போட்டு வச்சிருக்கான்?"

"எங்களுக்கு என்னடா தெரியும்?"

"உங்களுக்கு ஒண்ணும் தெரியாதுங்கிறது எனக்குத் தெரியும்டா. அதனால்தானே கேட்டேன்! இளங் காதலர்கள் இந்த இருட்டிலே இனிமையாகப் பேசி-ஆமாம், பேசி மட்டும்தான் — மகிழலாம். எத்தனை குளுமையாக இலேசானஇசை மிதந்துவருகிறது, பாரு! அது அவுங்க பேச்சுக்கு சுருதி சேர்க்கிறாப்போலே!"

அதற்குள் ஆர்டர் பண்ணிய மசாலா தோசை வந்தது.

"ஆனால் ஒரு குறை! இத்தனை ஜோடனை பண்ணி யிருக்கிறவன், அப்சர மாதர்களை இந்த வேலைக்கு ஏற்பாடு பண்ணி யிருக்கணுமடா! தடியன்களைன்னா போட்டிருக்கான்! சுத்தக் கஞ்சனா யிருப்பான்போலிருக்கு!"

"இல்லையடா!"

"என்ன இல்லே? அது நீ சொல்லித்தான் எனக்குத் தெரியணுமாக்கும்! அப்சர மாதர்களுக்கு இங்கு வந்து 'செட்டில்' ஆக 'விசா' 'லைசென்ஸ்' கிடைச்சிருக்காது. இதைத்தானே சொல்லப் போறே?"

"ஆமாண்டா!"

"என்ன ஆமான்னுட்டே! அப்சரப் பெண்களுக்கு என்ன பைத்தியமாடா பிடிச்சிருக்கு, பட்டிக்காட்டான் யானையைப் பார்க்கிற கதையாக அப்படியே விழி பிதுங்கப் பார்க்கப் போகிற உங்களுக்கு 'சப்ளை' பண்ண? — ஆமாம், இவ்வளவு நல்லா இருக்கே, இந்தத் தோசை! என்னடா விலை யிருக்கும்?"

"எண்பது பைசாடா!"

"இன்னும் ஜாஸ்தியா இருக்குமோன்னு நினைச்சேன்!"

"பில் பணம் நீ கொடுக்கிறதா யிருந்தாப் பேசமாட்டே!"

"இதென்னடா 'பிஸாத்' பணம்! என்னவோ கோடி ரூபாயைக் குதிரைப் பந்தயத்திலே கொட்டி அழுதுட்டவன் மாதிரிப் பேசறியே! — மூக்காலே அழுவாதிங்க, நான் கொடுத்துடறேன்!"

பில் வந்தது. நாலுபேருக்கு, பதினாலுரூபாய் அறுபத்திரண்டு பைசா போட்டிருந்தது.

"ஏண்டா சொச்சம் போடணும்! அரசாங்கத்தைப் போல எதையும் 'ரவுண்டப்' பண்ணியிருக்கப்படாது?"

"முன்னாடியே 'ரவுண்டப்' பண்ணிப்பிட்டானுகடா! அறுபத்திரண்டில் நாற்பத்திரண்டு விற்பனை வரியடா!"

"கொள்ளையடா! அதுவும் பகற்கொள்ளை! ஒவ்வொரு பொருளுக்கும் யானை விலை, குதிரைவிலைவச்சிட்டு, அதற்கு விற்பனை வரி வேறேயா? — என்னைக் கேட்டால்..."

"உன்னை ஒருத்தன் கேட்கணுமே!"

"கேட்டாலும் கேட்காவிட்டாலும் சொல்லவேண்டியது பெரியவங்க பொறுப்புடா. அதனாலேநான் சொல்றது என்னன்னா, ஒரு ஹோட்டல் நடத்துறதுக்கு இத்தனை பெரிய கட்டடம் வேண்டியதில்லே. இந்த மேஜை, லைட், தட்டு, கரண்டி, ஸ்பூன் எல்லாமே 'வேஸ்ட்'டுடா. படைச்சவன் பைத்தியக்காரன் இல்லே. மனுஷனுக்குக் கை வச்சவன் விரல்களையும் வச்சிருக்கான், சாப்பிட! நெருப்பைப் படைச்சான்; உப்பைப் படைச்சான். எதற்கும் அவன் காசு வாங்கலே, வரி விதிக்கலே. எல்லாத்தையும் மனுஷனுக்கு இனாமாகத்தான் கொடுத்திருக்கிறான். ஆண்டவன் கொடுக்கிற பொருளுக்கு மனுஷ்யன் விலை வாங்கலாமாடா?"

"பில்லைப் பார்த்ததும் தலை சுத்த ஆரம்பிச்சுப் பேத்த ஆரம்பிச்சுட்டியா?"

"அதுக்கு வேறே ஆளைப் பாருடா! உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்தானடா!"

அப்பாசாமி பில்லை முதலாளியின் மேஜை மீது வைத்துவிட்டு அலட்சியமாகப் பர்ஸை எடுத்தான். "இருக்கட்டும் ஸார், பரவாயில்லே" என்றவர், "நீங்க என்ன, காசு கொடுத்தா சாப்பிடணும் இங்கே? 'யூ ஆர் ஆல்வேஸ் வெல்கம், ஆஸ் எ ஹானர்டு கெஸ்ட்!'" என்றார்.

அப்பாசாமி வற்புறுத்தவில்லை. அவன் நண்பர்களுக்கோ ஆச்சரியம் தாங்கவில்லை. "'ஹானர்டு கெஸ்ட்'டாமே! அத்தனை பெரிய மனுஷனா நம்ம அப்பாசாமி!" என்று எண்ணி மலைத்துப் போனார்கள்.

"ஹோட்டல் சாம்பாரில் பல்லி விழுந்திருந்ததால் நாற்பது பேர் ஆஸ்பத்திரியில்; நாலு பேர் மரணம்!" என்று ஒரு செய்தி சில தினங்களுக்கு முன்பு வந்ததே, அதே அரோகரா ஓட்டல் முதலாளிதான் ஏராளமாகக் கடன் வாங்கிப் புதிதாக இந்த 'டிரீம்லாண்டை' ஆரம்பித்திருக்கிறார் என்பதை அப்பாசாமி வெளியில் சொன்னால்...

'டிரீம்லாண்டி'ல் ஏராளமான பணம் பண்ணலாம் என்ற முதலாளியின் நினைப்பு கனவாகவே அல்லவா முடிந்து விடும்!

அப்படி அப்பாசாமி பிரசாரம் பண்ணாதிருக்கத்தானே அவர் அவன் வரும்போதெல்லாம் ராஜோபசாரம் செய்கிறார்!

ஆனால் அது அப்பாசாமியின் அருமை நண்பர்கள் அறியாத விஷயமாயிற்றே!



''மாப்பிள்ளை ராஜீவுக்கும்
மணப்பெண் சோனியாவுக்கும்
நேரில் சென்று
ஆசீர்வாதம் செய்து
அட்சதை போடவேண்டும்
என்றுதான் நினைத்தேன்....''

# இந்திரா வீட்டுத் திருமணம்

'கதிர்'





**பட்டு மாமி:** இந்தக் கல்யாணத்தைப்பற்றி என் கருத்து என்னவென்று கேட்கிறீர்களா? நன்றாகக் கனிந்த மலைவாழைப் பழம். அதை உரித்து வாயில் போட்டுக் கொள்ளும்போது படக்கென்று தவறிப் பால் கிண்ணத்தில் விழுந்தால், மறுபடியும், எடுத்துச் சாப்பிடும் போது அதன் சுவை எப்படி அமிர்தமாக இருக்கும்? அந்த மாதிரிதான் பிரதமர் வீட்டில் நடந்த கல்யாணத்தைப் பற்றியும் கூற வேண்டும். இதில் காதல் கனிந்து, பிரதமர் வீட்டுக் கல்யாணமாக முடிந்தது. பனகல் பார்க்கு மார்க்கெட்டிலே காய்கறி வாங்கி, அவற்றைக் கொண்டு கல்யாணச் சாப்பாடு தயாரிக்கச் சொல்லியிருந்தால் இன்னும் இந்தக் கல்யாணம் பேர் பெற்றிருக்கும். டில்லிக் காய்கறிகளில் எந்தக் காயானாலும் அது ஒரே பறங்கிக் காய் ருசிதான் அளிக்கும். டில்லியில் நடக்கிற 'கல்யாணமானாலும் தமிழ் நாட்டுக் கல்யாண ஸ்பெஷலான இட்லி சாம்பாரை' மறக்கக் கூடாது. ஏனென்றால், கல்யாணப் பொண்ணு இத்தாலி நாட்டுப் பொண்ணு! 'இட்லி சாம்பார்' என்பதை இட்டாலி சாம்பார் என்று சொல்லி அவள் மகிழலாம். 'அட! நம் நாட்டின் பெயரை வைத்துக் கொண்டு இங்கே ஒரு தின்பண்டம் இருக்கிறதே' என்ற எண்ணத்தால் ஒரு சுற்றுப் பருத்துவிடுவாள்.

ஃ ஃ ஃ



**மீனாட்சிப் பாட்டி:** என் காலில் அம்மானை ஆடுகிறாளே பேத்தி. இவள் பெரிய பெண்ணாகிற போது கல்யாணமெல்லாம் இன்னும்கூடச் சீக்கிரமே முடிஞ்சுடுமோ? அஞ்சு நிமிஷத்திலேயே கல்யாணமாமே? ஒரு கையெழுத்துப் போடுகிற நாழியிலே கல்யாணமாமே! என்ன அதிசயம் இது? ரிஜிஸ்தர் புத்தகம் கொண்டு வருகிறவர்தான் நவீன கல்யாண சாஸ்திரிகள் போலேயிருக்கு! அது சரி, இந்தக் கல்யாணத்திலே பெண்ணுக்குத் தகப்பனார் வரவில்லையாமே? அவருக்கு வேலை அதிகமாமே. நேரம் கிடைக்கவில்லையாம். இப்படியும் ஒரு தகப்பனார் உண்டோ? தன் பொண்ணு கல்யாணத்துக்குக்கூடப் போக முடியாமல் அப்படி என்ன காரியங்களோ, அட அப்பாவி 'மனுஷனே..... போ!

ஃ ஃ ஃ

**விசுவம் வாத்தியார்:** கல்யாணம் ஏதோ 'ரிஜிஸ்தர் முறை' என்றாலும், கூடவே வேத பாராயணமும் இருந்ததாம்.... நல்ல ஏற்பாடுதான். வாத்தியாருக்குக் கொடுக்க வேண்டிய சம்பாவனை தட்சிணை எல்லாவற்றையும், கல்யாண ரிஜிஸ்திரார் தட்டிக் கொண்டு போயிடலியே.... அந்தமட்டில் நானெல்லாம் சந்தோஷப்பட வேண்டியதுதான்.

மாப்பிள்ளை ராஜீவுக்கும் மணப்பெண் சோனியாவுக்கும் நேரில் ஆசீர்வாதம் செய்து அட்சதை போட வேண்டும்

என்றுதான் நினைத்தேன். ஆனால் போக முடியாமல் இங்கே ஒரு கல்யாணத்துக்கு ஒப்புக்கொண்டு விட்டேன். நம்ம பிரதமர் வீட்டுக் கல்யாணத்துக்கு அழைத்துத்தானா என் போன்ற விஷயம் அறிந்த கல்யாண வாத்தியார்கள் போக வேண்டும்? கொஞ்சம் பெரிய மனுஷன் வீட்டுக் கல்யாணத்துக்கே அழைப்பைப் பற்றி யாரும் கவலைப்படாமல் விஜயம் பண்ணுகிற காலம் இது. நாட்டுக்கே பெருமை தரும் பிரதமர் வீட்டுக் கல்யாணமாயிற்றே !

ஃ ஃ ஃ

**மேளக்கார சிங்காரம்:** *பிள்ளையார் கோவில் மேளம்தான் நமக்கு நித்தியப்படி அளக்கிற தென்றாலும் சில சமயங்களில் திருமணங்களுக்கும் ஒப்புக்கிறது உண்டுங்க... யாராவது கூப்பிட்டால் அதிகமாகத் தொகை கேட்காமல் கொஞ்சம் சல்லிசாகவே ஊதிட்டு வருவது என் சுபாவங்க. பிரதமர் வூட்டுக் கல்யா*



ணத்திலே மேளம் வைத்ததாகப் பேப்பரிலே ஒரு தகவலையும்காணலியே ஏன்? யாராவது ஒருவரைப் போட்டு, இரண்டு உருப்படிகளைச் சொல்லி யிருக்கலாம். பாண்டு வாத்தியம் சங்கதியும் ஒன்றும்கிடையாது போலே யிருக்கு? ஓ.... ஓ.....! ஆமாம் ஆமாம்..... இது நவீன பதிவுத் திருமணமில்லையா? அதுவும் 'சிம்பிள்' திருமணமாச்சுதே...! மறந்தே போயிட்டேன்.

ஃ ஃ ஃ

**.ஐயாஸ்லேட் தூக்கும் நரிக்குறவர் சிங்கன்:** *யோவ்..... என்னுங்கோ.... சாமி யோவ்....... இது கண்ணாலம்? ஜான்வாசம் எங்கேங்கோவ்..... எங்கே வுட்டாங்க ஊர்வோலம்? எவ்வளவு லேட்டுங்க இந்தக் கண்ணாலத்துக்குக் கண்டிராக்டு எடுத்தாங்க? அதிகமா வெளிச்சம் போடாமே என்னுங்கோ இது ஷிக்கணம் பண்ணிட்டாங்கோ.... சாப்பாடு எங்கெங்கோ ? டெல்லியிலே கல்யாணம்கிறது சரி. ஆன்... ஊர்வோலம்...... எங்கே? பொண்ணு, ரோமாபுரியாமே? அங்கே போயிட்டிருக்குதுங்களா ஊர்வோலம்? சே.... ஊர்வோலமே கெடையாதா? ஏங்க அப்படிப் பண்ணிட்டாங்கோ?*

ஃ ஃ ஃ

**பாடகர் பஞ்சு:** *திருமணத்துக்குக் கச்சேரி ஏற்பாடுகள் இல்லைன்னு கேள்விப்பட்டேன். பொண் வீட்டுக்காரர்கள், வெளிநாட்டுக்காரர்கள். என் போன்ற ஒருவரைக் கச்சேரி செய்யச் சொல்லி. அவர்களை மகிழ்வித்திருக்கலாம். பாக்கிப் பேரைப் பற்றி நான் கவலைப்படவில்லை. மணமகன் ராஜீவின் பெயரில் மங்களம் ஒலிப்பதை இந்தச் சமயத்தில் சற்றுக் குறிப்பிட விரும்புகிறேன். 'பவமான' என்று ஆரம்பித்து இரண்டாவது அடித் தொடக்கத்தில் 'ராஜீவ...' என்ற பதம் வருவதைத்தான் குறிப்பிடுகிறேன். இதற்காகவாவது ஒரு கச்சேரி வைத்து மங்களம் பாடச் சொல்லி யிருக்கலாம் என்பது அடியேனுடைய அபிப்பிராயமாகும்.*

ஃ ஃ ஃ

**மெரினாவில் இளம் காதலர்கள் இருவர் பேசிக் கொள்வது :**

• *காதலி: இந்த ராஜீவ் – சோனியா காதல் லண்டனில்தான் முதன் முதலில் ஏற்பட்டது என்பதால், இனி காதலர்கள் எல்லோரும் லண்டனுக்குத்தானே போக வேண்டும் என்று ஆசைப்படுவார்கள்?*

*காதலன்: போகட்டும் போ ! இங்கே வந்து தொந்தரவு செய்யாமல் நம்மை நிம்மதியாக விட்டால் சரிதான் !*

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

**சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!**






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தெம்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**காட்பரிஸ் போர்ன்விடா**

2396 A TM

# இரும்பும் இளகும்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

**கா**லை நேரத்து ஏறும் இள வெய்யில். ஜன்னலின் மேல் கவிந்து படர்ந்த கொடிகளில் இலைகள் அசைந்தன. வெளியே மாதா கோயிலின் முடியில் சுடர்விட்ட சிலுவையின் மேல் உட்கார்ந்து கொண்டு ஒரு புறா கழுத்தை மினுக்கி மினுக்கிச் சிறகைக் கோதிக் கொண்டிருந்தது.

வனஜா புத்தகத்தைப் புரட்டினாள். பக்கங்களின் நடுவில், அவள் மனப் பேழையில் இரகசியமாகப் போற்றி வைத்த நினைவுகளென, மறைந்திருந்தது அந்த நிழற்படம். பழைய நினைவுகளின் அலை புரளலாக விரல் அதைப் புரட்டிற்று. மணி மணியாக இரண்டு வரிகள் எழுதிக் கையெழுத்திட்டிருந்தான் சுந்தர். அந்த வாசகத்தைப் படித்தபோது கன்னத்தில் வெப்பேறிற்று.

வகுப்பு நடந்து கொண்டிருந்தது. அவள் அமர்ந்திருந்த இடத்திலிருந்து படிப்படியாக இறங்கிய மாணவிகளின் வரிசை. கீழே இருபுறமும் ஒளி பொழியும் விளக்குகளின் நடுவே, மேஜையின் பின் நடந்தபடி பாடம் சொல்லிக் கொண்டிருந்தாள் மதர் ஜோஸபின். வெளிச்சத்தின் செறிவில் தூய வெண்ணிற ஆடை பார்க்கக் கூசிற்று. பாடம் சொல்லும் குரல் அவளினின்று எட்ட எட்ட விலகி, அழிந்து கொண்டிருந்தது.

நிழற்படத்தில் பதிந்த பார்வையில், புதிதாகக் காண்பதே போன்று உருவெடுத்த நினைவுகள்.

அத்தான் சுந்தருக்கும் அவளுக்கும் வருகிற ஏப்ரல் மாதம் கலியாணம் நிச்சயமாகி இருந்தது. படிப்பு முடியக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஊருக்கு விடுமுறைக்கு அவள் போனால், அதற்காகவே எதிர்பார்த்திருந்தவனைப் போல் சுந்தரும் வந்து விடுவான்.

மாடியில் அறையில் உட்கார்ந்து அவள் வீணை வாசித்துக் கொண்டிருப்பாள். படியேறி வரும் காலடிச் சத்தம் அவள் அறை வாசலில் நிற்கும். தந்திகளில் ஓடும் விரல்களின் மேல் படிந்த அவள் முகம் அவன்புறமாக நிமிரும். அவளுடைய விரல்கள் தந்திகளின் மேல் தாவிக் குதிப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, அந்த நாதத்துடன் தன் மனத்தையும் பிணைத்துக் கொள்ள நினைக்கும் ஆர்வம் கனியும் பார்வை.



''எங்கே? அந்த கான் — கான் டியூனை வாசி !''

அமைதியாகத் தவழ்ந்து இழைந்து கொண்டிருந்த இசையிலிருந்து கிளை பிரிந்து துள்ளி எழுவது போல் ஒரு மெட்டை—அவனுடைய இளமைத் துடிப்பின் நிழல் தெரிவதே போல் — வாசிக்கச் சொல்கிறான்.

அவள் இதழ்கள் பொய் மறுப்பாகச் சுளித்துக் கொள்ளும். ஆனால் அவளுக்குத் தெரியும். அவன் விடமாட்டான். சுருதிக் கட்டையை முடுக்கி மாற்றும் பாவனையின் எதிர்நிழலாக, முன்கூட்டியே அடையாளமாக அவன் விரல்கள் மேஜையின்மேல் தாளம் போடத் தொடங்கும்....

இருவருமாகக் கேரம் ஆடத் தொடங்குவார்கள். அப்பாவும் அம்மாவும் எதிர்க்கட்சி. பொழுது போகாமல், சினிமாவுக்குப் போகவும் நேரமாகி, தூக்கமும் வராத மாலை நேரங்களில் ஒன்று.

மளமளவென்று அப்பா காய்களைக் காலி செய்துவிடுவார். எதிர்க்கட்சியின் 'பாயிண்ட்' ஏறிக் கொண்டே போகும். அவர்கள் இருவருடைய ஆட்டமும் சூடு பிடிக்கக் கொஞ்ச நேரந்தான் ஆகும். ஆனால் முனைந்து ஆடத் தொடங்கி விட்டால் சுந்தருக்கு விரல்கள் அடங்காமல் துடிக்கும்.

அவள் சிவப்புக் காயைப் போட்டுவிடுவாள். கூடவே போட வேண்டிய காய்க்காக, 'ஸ்டிரைக்கரை' இடம் பொருத்தி வைத்து, எளிதாகப் போடக்கூடிய காயையும் அடையாளம் சொல்லிக் கொடுப்பான் சுந்தர். அவள் போட்டு முடியும்வரையில், பார்வை கட்டுக்கடங்காமல் பறக்கும். சரியாகப் போட்டு விட்டால் உடனே களிப்பில் கைகொட்டுவான். பாராட்டாய் உதிரும் பார்வையும் பேச்சும். கண்கள் கலப்பற்ற தூய மகிழ்ச்சியைச் சிந்தும். கூடவே அவர்கள் இருந்திராவிட்டால், எட்டிக் கையைப் பற்றிக் குலுக்கி இருப்பான்.....

அவள் முகம் கழுவிக் கொண்டிருப்பாள். குறையாகத் திறந்து வைத்த கதவுக்கு வெளியே அவன் சீட்டி அடிக்கும் மென் குரல் கேட்கும்.

''முகம் கழுவிக் கொள்கிறாயா?''

முகம் நிறையக் குழைத்த சோப்பின் வெண்மையில் நடுவே கருமணியாக உருளும் விழிகள். பம்மென்று புன்னகையில் குழிந்து பூரிக்கும் கன்னங்கள்.

''பார்த்தால் தெரியவில்லை ?''

அடிமேல் அடி வைத்து அவன் மெதுவாக உள்ளே வந்துவிடுவான். முகத்தருகே முகம் நெருங்கும். நறுக்கென்று கன்னத்தில் ஒரு கிள்ளு. இன்னொரு கன்னத்தில் இன்னொரு கிள்ளு.

''இப்போதுதான் தெரிகிறது.''

அந்த ஆண் சிரிப்பு அறையின் மூட்டத்தைக் கலைத்துத் திருகொளி காட்டும். கன்னத்தில் இழைந்த உணர்வில் உடல் முழுதும் ஒரு வேகம் சிலிர்த்து நிற்கும்: மோவாயும்உதடும் நடுங்கும். இதழ்களில் திரியும் சிரிப்பும், திருட்டுப் பார்வையுமாக, பாதி கழுவிய முகத்தைத் துணி மறைப்பில் புதைத்தபடி உள்ளே ஓடிவிடுவாள்.

மல்லிகை அரும்புச் சரம் கோத்ததுபோல், பவுன் 'நெக்லேஸ்' செய்திருந்தாள் அவள் தாய். மெருகிட்டு வந்ததும் அவள் கழுத்தில் போட்டு அழகு பார்த்தாள். பரிவு கலந்த பார்வையில் பெருமை பொங்கிற்று.

''எதற்கு அம்மா இது திடீரென்று ?''

''சமர்த்துக் கேள்விதான். கலியாணத்துக்கு முழுசாக ஆறு மாதம் இல்லை.''

அவள் நெஞ்சில் மரக் கிளை மேல் தொத்தி ஓடும் அணிலாக அந்த நினைவு எழுப்பிய மகிழ்ச்சி பந்து சுருட்டிக் கொண்டு ஓடிற்று. அப்போதுதான் அவளுக்கே தெரியும், — ஏப்ரல் மாதமென்று நிச்சயமாகி விட்ட செய்தி.

மோதிரக் குவியல்களாக மினுமினுத்த மேகத் துணுக்குகளைப் பார்த்தபடி, திறந்த மாடியில் யோசனையில் மூழ்கியவளாக உட்கார்ந்திருந்தாள் வனஜா. பீரோவில் பத்திரமாக வைக்கச் சொன்ன 'நெக்லெஸை'யும் கூடக் கழற்றவில்லை.

''க்ளிக்!''

சட்டென்று நினைவு கலைந்து நிமிர்ந்தாள்.

''இந்தப் புது மாலை உனக்கு அழகாக, பொருத்தமாக, அமைந்திருக்கிறது. அது தான் படம் பிடித்து வைத்துக் கொண்டேன்'' என்றான் சுந்தர் சிரித்த வண்ணம்.

அந்தப் படத்தை அவளிடம் கொடுத்து விட்டு, அப்புறம் அவனே திரும்ப வாங்கிக் கொண்டு விட்டான். பின்புறம் அவள் கையெழுத்து. பதிலுக்கு அவன் கொடுத்த அவனுடைய படம்தான் இது. பின்னால் எழுதியிருந்த வாசகம் :

''இந்தப் படத்தைப் பார்க்கும் போது நான். உன் அருகிலேயே இருப்பதாக நினைத்துக் கொள். — சுந்தர்.''

அவள் கண்கள் திடீரென்று நிறைந்தன. கன்னங்கள் சிவ்விட்டன. சொல்லவும் முடியாமல், மறைக்கவும் முடியாமல் மேலெழும் உணர்ச்சிகளின் உருக்கம். இன்னதென்று அதை அடையாளம் காணவும்கூட முடியவில்லை. அது நெஞ்சில் விளைந்த கிளர்ச்சியின் புதுமையைத்தான் நுகர முடிந்தது.

''வனஜா ! வனஜா ! உன்னைத்தான். மதர் கூப்பிடுகிறாள் பார். எழுந்திரேன்.'' பக்கத்தில் அமர்ந்திருந்த பெண் தோளை உலுக்கினாள்.

நினைவுகளை உதறிக் கொண்டு எழுந்தாள். கை பிரித்த புத்தகத்தைத் தானாகவே மூடிற்று: அந்த நினைவோட்டத்தை அடக்கி மூடிவிடும் பாவனையாக.

''எந்த உலகத்தில் இருக்கிறாய் நீ?''

'மதரி'ன் முகம் கல்லால் அடித்தாற் போல், கடினமாய், உக்கிரமாக இருந்தது. குற்றம் சாட்டும் கண்கள். இரக்கமின்றி, கம்மிப் போய் இரட்டையாகப் பேசும் கட்டைக் குரல்.

''வா, இங்கே!''

அவள் மெதுவாக இடம் விட்டு நகரத் தொடங்கினாள்.

''நீ புத்தகத்தில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்ததையும் எடுத்துவா.''

அவளுக்கு உடல் வெட வெடவென்று நடுங்கிற்று. உடல் வியர்த்துக் கொட்டிற்று. மேஜை அருகே போய் நின்றபோது,

# வேளாண்மையை ஊக்கிவிட இந்தியன் பாங்க் உதவுகிறது.




ELEGANT

உணவு—பாரத நாட்டில் ஒவ்வொரு ஆண், பெண், குழந்தை யாவருக்கும் போதிய உணவு கிடைப்பது தான் எமது முக்கிய குறிக்கோள்.

எனவே இந்தியன் பாங்க் தற்போது வேளாண்மையை ஊக்கி விடுவதை தங்கள் முக்கிய முயற்சிகளுள் ஒன்ருகக் கருதுகிறது. விவசாயிகள் கீழ்க்கண்டவற்றை வாங்கிப் பயன் படுத்த பண உதவி புரியத் தயாராக இருக்கிறது.

***டிராக்டர்கள்-பண்ணை யந்திர சாதனங்கள் சிறப்பான விவசாயக் கருவிகள்—சிறப்பான விதை—உரங்கள்.***

விவசாயிகளுக்கும், கடன் உதவி புரிய இந்தியன் பாங்கிற்கு வசதியுண்டு. அறுபது ஆண்டுகளாக பாரத நாட்டுக்கு தொண்டு செய்துவரும் இந்தியன் பாங்கின் 200 கிளைகளும் விவசாயிகளுக்கு உதவ விழைகின்றன.






## தி இந்தியன் பாங்க் லிமிடெட்

*சென்னை*

சேர்மன்: டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் (செட்டி நாடு) Kt.B.A. D. Litt., M.L.C.

காரியதரிசி: L. பாலச்சந்திரன்

உதட்டைத் திறந்து பேச முடியவில்லை. இரண்டு நிமிஷங்கள் ஜுரக் கனவில் மிதந்த வளாய் வாழைக் குருத்தைப் போன்ற சில்லிட்ட உணர்வில், கட்டுண்டு நின்றாள். உதடு நனைந்து நொந்தது.

''கொடு அதை இப்படி.''

படத்தை வைத்து மூடிய புத்தகத்தை விரல்கள் நடுங்க நீட்டினாள்.

பிரித்து ஒரு கணம் பார்த்துவிட்டு முகம் நிமிர்ந்தாள் மதர்., பார்வை அவளைக் குத்து வதுபோல் நிலைத்தது. முகம் இறுகிக் கண்கள் ஊசி முனைகளாய்ச் சிறுத்தன.

''சாயங்காலம் என்னை ஹாஸ்டலில் பார்.''

விரல்களைப் பிசைந்து கொண்டு புத்தகத் தைத் திரும்பப் பெற ஒரு கணம் நின்றாள்.

''இதையும் அப்போது வாங்கிக் கொள். இங்கிருந்து போய்விடு.''

**வ**குப்புகள் முடிவதற்கு ஒரு மணி நேரம் முன்பாகவே ஹாஸ்டல் அறைக்குத் திரும்பி யாயிற்று. பிற்பகல் வகுப்புக்குப் போக மன மில்லை. தன் யோசனைகளின் மழலையில் தானே குழறியபடி படுக்கையில் புரண்டு கொண் டிருந்தாள். திகிலும், பயமுமாகக் குழம்பிய எண்ணங்களின் நடுவே ஓர் ஆறுதலாகத் தலைதூக்கும் அந்த நினைவு.

சுந்தர் அவளுக்கென நிச்சயம் செய்து வைக்கப்பட்ட வாலிபன். நான்கு மாதங் களில் அவனைக் கணவனெனக் கைப்பிடிக்கும் உரிமை அவளுக்குக் காத்திருக்கிறது. அதைத் தெரிந்து கொண்டால் மதர் ஜோஸபீன் ஒரு வேளை மனம் இளகலாம். அவள் உணர்ச்சிகளுக்குக் கண்ணியமான பின்னணி இருப்பதாக அறிந்து மன்னித்துவிடலாம். இல்லாவிட்டால்? ஒரு வேளை.... ஒருவேளை?

ஓர் அவலமான உணர்ச்சியில் உடல் முழுதும் குறுகுறுப்பு ஏறிற்று. படிப்பு முடியும் வேளையில், அதற்காகக் கல் யாணமே காத்திருக்கும் நேரத்தில், அவள் தலை குனிந்து வெளியேறும்படி தண்டனை ஏதும் கிடைத்து விட்டால்?

மதர் ஜோஸபீன் கண்டிப்புக்குப் பெயர் போனவள். எளிதில் மன்னிப்பது அவளுக்குத் தெரியாத உணர்ச்சி. அதுவும் மாணவிகள் கல்லூரியில் படிக்கும்போது, மனத்தைப் பிற வழிகளில் 'அலைய விடுவதை அவள் என்றும் பொறுத்ததில்லை. கடுமையான தண் டனைதான் கிடைக்கும், பிடிபட்டு விட்டால்.

# வரியால் வாடும் ரயில்!

கோ. கந்தசாமி



ஊர்ப்பயணம் செய்வதற்கு உதவும் ரயில் நானே
உயர்ந்தோரையும் தாழ்ந்தோரையும் ஏற்றிச் செல்லுவேனே
ஏறுகின்ற பிரயாணிகள் வெறுப்பார் என்னை இனிமேல்
எதற்கு என்று நினைக்கிறீரா வரிச்சுமை என்மேல்!

வரி... என்றால் சரி... என்று உடனே எந்தன் நினைப்பா?
வந்தேறும் மூன்றாம் கிளாஸ் பயணிகளால் சலிப்பா?
வருடந்தோறும் எந்தன் கட்டணம் உயர்த்துகின்றீர் ஏனோ?
வாங்க வாங்கக் கொடுக்க நானும் அட்சய பாத்திரம் தானோ?



எங்க ஊருக்கு டிக்கெட் என்போர் ஏங்கி நின்று விழிப்பார்!
இது என்ன நியாயம் என்று என்பேர் சொல்லிப் பழிப்பார்!
அங்கும் இங்கும் பயணம் செய்வோர் அலட்டிக் கொள்வார் வீணே
ஆள்வோர்களே உங்களாலே வசைகள் எனக்குத் தானே?



''புக்கிங் ஆபீஸ்'' முன்னே வந்து டிக்கெட் கேட்பார் ஒருவர்
புதிய கட்டணம் எடுத்துக் கொண்டு மிச்சம் உடனே தருவர்
''பக்'' என்று பதறி நிற்பார் டிக்கெட் அறையின் முன்னே
பயணத்தையே குறைக்கும் எண்ணம் வந்தால் நிலைமை என்னே!



''பார்சல்'' செய்யும் வியாபாரிகள் தலையில் தூக்கிப் போவார்
படுக்கை டிக்கெட் வாங்குபவரும் முடக்கிக் கொள்வராவார்!
'பாஸ்'' வாங்கும் பேர் வழிகள் டோஸ் கொடுப்பார் எனக்கு
பெருகிப் போகும் ஓசிப் பயணம் போவோரின் கணக்கு!

எல்லா மாணவிகளும் பேசிக் கொள் வார்கள்; அந்த நெஞ்சக் கடினத்துக்குப் பின்னால் இன்னும் ஆறாத ஒரு மனப் புண் இருக்கிறதென்று; அந்த ஏமாற்றம்தான் அவ ளுக்கு அந்தத் துறவு வாழ்க்கையைக் கொடுத்து விட்டதென்று. அதன் நிழல்தான் அப்படிப் பொறுமையின்மையாக வெளிப் படுகிறதோ ? வாழ்க்கையில் தான் அடையத் தவறிவிட்ட ஒன்றை, கைநழுவ இழந்து விட்ட ஒன்றை, பிறரிடம் அவர்கள் அநுப விக்கப் பார்க்கப் பொறுக குமுறல்தானோ அது?

எதுவானால் என்ன? விளைவது ஒன்று தான். அவளுக்கு ஏதோ ஒரு தண்டனை கிடைக்கத்தான் போகிறது. மனம் நிச்சய மாகச் சொல்லிற்று.

முன்னிரவு. மற்ற மாணவிகள் சாப் பாட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். மதர் ஜோஸபீன் ஹாஸ்டலின் வார்டன், அறைக்கு வந்தாயிற்று. மாடி அறையில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. போய்ச் சந்திக்க வேண்டியதுதான். என்ன நடக்கும்?

நமைச்சலாக ஓர் உணர்வு அவளை உறுத் திற்று. நுட்பமான கருதி கலந்துவிட்டபிறகு மறுபடியும் அதைக் கூட்டத் தவிப்பது போன்ற மனச் சஞ்சலம். நடக்கப்போவதை எண்ணி எண்ணி, அதன் கற்பனையில் மேலே எதிலும் படர முடியாமல் நினைவோட்டம் சிக்கிக் கொண்டது. அறையின் முன் வைத் திருந்த மறைப்பில் நகக் கணுவால் மரியாதை யாகத் தட்டினாள்.

''எஸ்.''

உள்ளிருந்து வந்த கணீரென்ற அந்தக் குரல் கொக்கி போல் அவள் மேல் விழுந்து இழுத்தது. மூலையில் வைத்த மண் தொட்டியி லிருந்து எழுந்த பெரிய குரோட்டன்ஸின் நிழலின் கீழிருந்து ஒரு பெருமூச்சு கிளம் பியது போன்ற பிரமை. உள்ளே மெதுவாக அடியெடுத்து வைத்தாள்.

மதர் அவளை நிமிர்ந்து பார்த்தாள். முகம் கைதேர்ந்த ஓவியனின் தூரிகைக் கீற்று பட்டதைப் போல், கணப் பொழுதில் கடுமையாக மாறிற்று. பேசாமல் அவள் புத்தகத்தைக் கையில் எடுத்தாள். அறைக் கடிகாரத்தில் விநாடிகள் சொட்டிக் கொண் டிருந்தன.

நிழற் படத்தைக் கையில் எடுத்து மேஜை விளக்கொளியில் விசிறினாள்: ''யாருடைய படம் இது?'' என்று கேட்டுக் கொண்டு. குரல் தனி கம்பீரத்தைத் திடீரென்று அடைந்தது. கருவிழிகள் வெள்ளை மேட்டில் சுழன்றன.

''என்னுடைய அத்தான்.''

அவள் சிரிப்புப் புகைந்தது. ''உன் பெற் றோர்களுக்குத் தெரியுமா இது?''

அந்தக் கேள்வி புது வழிகாட்டியதுபோல் இருந்தது. ஒரு தெம்போடு, மூழ்கப் போகிற வன் கரையைப் பற்ற முயலுவதைப் போன்று அந்தக் கேள்வியையே பிடித்துக் கொண்டாள்.

''அவர்கள் பார்த்து நிச்சயம் செய்து வைத்திருக்கிறார்கள் மதர். ஏப்ரலில் எங்கள் கலியாணம் நடக்கப் போகிறது.''

நான்கு புறமும் மடக்கிக் கொண்டதால் பாய முடியாத விலங்கென, அவள் முகத்தில் ஏமாற்றம் நிழல் தட்டிற்று. அதற்கு அவள் தயாராக இல்லைதான். அதனாலேயே அந்தக் கோபம் மேலும் கொப்புளித்துப் பொங்கிற்று.

''இருக்கட்டுமே — அதுவரையில் நீ இங்கே 'டிஸிப்ளினி'ல் தவறாமல் இருக்க வேண்டிய பெண். இது படிப்பதற்காக வந்த கல்லூரி. உன் கனவுகளுக்கு இங்கே இடமில்லை.''

''மதர் — ''

''பேசாதே. உன்னைவிட எனக்கு அநுப வம் அதிகம். என் வயதில் நீ இருந்ததில்லை. உன் வயதில் நான் இருந்ததுண்டு. இந்தக் கனவுகள் அர்த்தம் இல்லாதவை; பலிக்க முடியாதவை. அவற்றின் விளைவாகத் தோன் றும் ஏமாற்றத்தை அப்புறம் ஆயுள் முழுவ தும் அழிக்க முடியாது. அது ஆறாத புண்ணாக நிலைத்துவிடும்.''

மதர் ஜோஸபீன் படபடப்பு அடங்க, மூடிய கண்களுடன் நாற்காலியின் பின்சாய் வில் சரிந்தாற்போல் உட்கார்ந்து கொண் டாள். முகம் கன்னும்பாக வெளிறிட்டு விட்டது. உணர்ச்சிகள் வடிந்து மாவுப் பொம்மையாக, பார்க்கச் சங்கடம் விளைவிப் பதாக ஒரு தோற்றம்.

''மதர். என்னை மன்னித்து விடுங்கள். இனி மேல்......''

''இனிமேல்?'' — அவள் நிமிர்ந்தாள். கண்கள் கொதித்தன. ''மறுபடியும் இப்படி நடந்தால் உனக்கு இங்கே இடம் இல்லை. போ !''

புத்தகத்தை அவள்புறமாக மேஜை மேல் விசிறினாள். கண்ணாடித் தகட்டில் வழுக்கி அது கீழே விழுந்தது. வனஜா அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு அறைக்குத் திரும்பினாள். வழி நெடுகிலும் மீண்டும் மீண்டும் வெறுப்புச் சுழித்த அந்தக் குரல் கேட்டுக் கொண்டேயிருந்ததுபோலிருந்தது. சிலந்தி நூல் போல் அந்த இருளிலும் அது இழை பிரிந்து வந்து அவளை எட்டிற்று.

இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன.

பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. மாணவிகளின் அறைகளில் இரவு நெடு நேரம் விளக்கு எரியும். சாப்பாட்டுக்குப் போய் எட்டு மணிக்குத் திரும்பியதும் ஹாஸ் டல் மணி அடித்துவிடும்: அதற்குப் பிறகு 'ஸைலன்ஸ் அவர்'. இரவின் அமைதியில் பேச்சின் முணு முணுப்பும் கூடக் கேட் காமல் 'கல்'லென்று இருக்கும். அறைக்கு அறை கவனித்தபடி வராந்தாவில் நடக்கும் வார்டனின் கால் செருப்பொலி மட்டும் கேட்கும்.

எம்.எஸ்ஸி. பட்டப் பரீட்சை எழுதச் சில மாணவிகள் தனியாக அங்கு வந்திருந் தார்கள், இரசாயன பாடத்தில், சோதனைச் சாலையில் அவர்களுக்குப் பயிற்சிப் பாடங்கள் நடந்து கொண்டிருந்தன. சில அறைகளில் அப்படி வந்த மாணவிகள் தங்குவதற்கு அனுமதிக்கப்பட்டார்கள்.

அப்படி வனஜாவின் அறைக்கு வந்தவள் தான் ரீடா. பார்த்ததுமே அவளைப் பிடித்து விட்டது வனஜாவுக்கு. நல்ல சிவப்பு. எடுப்



பம்பாய் நகரில் 1968 பிப்ரவரி 4ந் தேதி தமது 76-வது வயதில் காலமான திரு P. G. சீதாராமன் விளம்பர உலகத்தில் ஓர் ஜாம்பவான் போன்றவர். சுமார் 40 ஆண்டு அனுபவமுள்ளவர். ஆரம்பகாலத்தில் வால் கார்ட் கம்பெனியின் விளம்பர அதிகாரியாகவும், பின்னர் 17 ஆண்டு காலம் ஜே. வால்டர் தாம்ஸன் கம்பெனியிலும், 1946க்குப் பின்னர் தமது சொந்தத்திலேயே "ஸ்ராபிக் அட்வர்டைசிங் பிரைவேட் லிமிடெட்" என்ற கம்பெனியை நிறுவி வெற்றியுடன் நடத்தியும் பெரும் கீர்த்தியையும், பல நண்பர்களையும், பெற்று மிகுந்த கௌரவத்துடன் விளங்கியவர். அவருடைய மறைவு விளம்பர உலகத்துக்கு மகத்தான நஷ்டமாகும். ●

பான தோற்றம். மழமழவென்ற கன்னம். கண், மூக்கு, உதடு எதிலும் செதுக்கினாற் போல் ஓர் அமைப்பு. களங்கமற்ற நேர்ப் பார்வையில், முப்பது நாட்கள் குழந்தையின் கண் விளக்கொளி தெரியும். எல்லோருட னும் கையைக் கொட்டிச் சிரித்துப் பேசியபடி, ஆற்று நீரைப் போல் கலகலப்பாக இருப் பாள் அவள்.

அவள் கையை இழுத்துத் தன் கையுள் ஆசையாக வைத்துக் கொள்வாள் வனஜா. "உன் கை எப்படிப் பட்டுப்போல் மெத் மெத்தென்று இருக்கிறது ?"

புன்னகையின் அரும்பொளி வீச அவள் வனஜாவை அணைத்துக் கொள்வாள்.

"ஒத்திகை பார்க்கிறாயா அம்மா ? ஏப்ரல் வரையில் பொறுமையாக இரு!"

அவர்களுக்குள்ளே இரகசியம் இல்லை. பருவ மலர்ச்சியில் இதழ் விரிக்கும் எத் தனையோ ஆசைகளை, பெண்ணுக்குப் பெண் ணாகப் பகிர்ந்து பரிமாறிக் கொள்ளும் நேரங்கள். அந்த இனிய பொழுதுகளுக்கு அளவில்லை.

அவளுக்குப் புரியாத பாடங்களைத் தன் நேரம் போவதையும் பொருட்படுத்தாமல் சொல்லிக் கொடுப்பாள் ரீடா. விடுவிக்க முடியாத கணக்குகளை எளிதாகச் சிக்கல் பிரித்து நூலெடுத்துக் கொடுப்பாள். படிக்கக் கனமான பகுதிகள், அவள் விளக்கங்களில் எவ்வளவோ இலேசாகத் தோன்றும்.

இரவு ஒன்பது மணி.

ரீடா அவளுக்கு ஏதோ சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். கேள்வியும் பதில் கேள்விகளுமாகக் குரல் உயர்ந்து அறைக்கு வெளியேயும் எட்டி இருக்கக் கூடும். விவாதத்தின் சுவாரசியத்தில் இருவ ருமே அதைக் கவனிக்க வில்லை. கதவருகே கால் செருப்பொலி வந்து நின்றதும் கூடத் தெரியவில்லை.

"வனஜா.... ஐலே.... இங்கே பார்."

அந்தக் குரல் காதில் விழுந்ததும், மாம் பழத்துள் கத்தி இறங்குவது போல், அடி வயிற்றுக்குள்ளே சில்லிப்புத் துண்டமிட்டது வனஜாவுக்கு. வாசற்படி அருகே மதர் ஜோஸபீன் நின்று கொண்டிருந்தாள். மடியை உதறிக் கொண்டு எழுந்து நின்றாள்.

"இது ஸைலன்ஸ் அவர். உனக்கு ஞாபகம் இல்லை ?"

திகிலில் வனஜாவின் விழிகள் சுழன்றன. கால் கட்டை விரலிலிருந்து இரத்தம் பாய் மாதிரி சுருண்டு கொண்டே வந்தது. நாற் காலியின் பிடியில் தன்னைத் தாங்கிக் கொண் டாள். பதில் சொல்லக்கூடத் தெம்பில்லை.

அந்த ஓரிரு நிமிஷங்களில் ரீடா தன்னைச் சமானித்துக் கொண்டிருக்க வேண்டும். சட் டென்று முன்னால் வந்தாள். விளக்கின் வெளிச்சத்தில் ஒரு கம்பீரத்தோடு அவள் உருவமும் முழு உயரமாக வந்து நின்றது.

"எக்ஸ்கியூஸ் மீ மதர். தப்பு என் னுடையதுதான்."

கீழ் உதட்டைத் திருகிக் கொண்டு வியப் புடன் அவளை நோக்கித் திரும்பினாள் மதர்.

"ஆமாம். நான்தான் பேச்சுக் கொடுத் தேன் —"

மதர் அவள் சொன்னதைக் காதில் வாங்கிக் கொண்டது போலவே தெரிய வில்லை. ஏதோ ஒரு யோசனையாக அவள் பார்வை ரீடாவை அளந்து கொண்டிருந் தது. அவளை அப்போதுதான் முதல் முறையாகக் காண்பது போல், கண்களில் ஒரு சிறு வியப்பு ஒளிர்ந்தது.

"உன் பெயர் ?"

"ரீடா. இங்கே போஸ்ட்கிராஜுவேட் பரீட்சைக்காக வந்திருக்கிறேன்."

மதர் கண் கொட்டாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். ரீடாவின் பதிலை அவள் மனம் உள்வாங்கியதுபோலத் தோன்ற வில்லை. முக அசைவுகளை, பார்வையை, குரலின் பாணியை, பாவனை களை எடையிட்டு மதிப்பிடுவது போலத் தோன்றும், நிதானமான கண்ணோட்டம்.

"உன் தந்தையின் ஊர் ?"

"வேளாங்கண்ணி."

இரட்டை நாயனத்தில் எதிர் சுரம் அடுக்கும் மறு நாயனம் போல, அந்தக் கேள்வி பதில், இரண்டிலுமே அடங்காத ஓர் ஆர்வம் முரண்டெழுந்தது. அவள் பதிலில் வசியம் கண்டதே போல் மதர் முகம் இளக, புன்முறுவல் பூக்க அசைவின்றி நின்றாள்.

"உன் தந்தையின் பெயர் ஜார்ஜ். இஸ் இட்?"

"ஆமாம்."

மதர் ஜோஸபீன் இரண்டடி முன்னால் நடந்து உள்ளே வந்தாள். அவள் கண்கள் ரீடாவைப் பரிவோடு நோக்கின. சிரிப்பு உதட்டின் ஓர் ஓரத்தில் தொடங்கி, வர்ணத் தால் இழுத்த கோடு போன்று மறு நுனியில் போய் முடிந்தது. கைகள் ரீட்டாவின் புறமாக நீண்டன.

ரீடா அவள்புறமாக நகர்ந்து நெருங் கினாள். மதர் அவளை மெதுவாக அணைத்து முதுகை வருடினாள். குழந்தையை உச்சி முகரும் பாவனையாக அவள் முகம், தோள் மேல் சாய்ந்த ரீடாவின் கூந்தல்மேல் பதிந்தது.

"ஓ டியர்..... ம்...... உன் தந்தையைப் போலவே இருக்கிறாய் நீ!"

விளக்கொளியில் உறுதி தளர்ந்த அந்தக் கண்ணில் ஈரம் கண்டு மின்னுவது தெரிந் தது வனஜாவுக்கு. இரும்பு மனமும், கடுமை யான முகத் தோற்றமும், கண்டிப்பான குரலுமாக அவள் அதுகாறும் அறிந்த மதர் ஜோஸபீனை அப்போது அவள் காணவில்லை. தன் எதிர் நிழலாய், பருவத்தின் மலர்ச்சி யில் எதையோ எதிர்பார்த்து ஏங்கும் இள நங்கையின் முகம்தான் தெரிந்தது. தன்னைப் போல் அவளும் ஒரு பெண்; அதற்குரிய இதய மென்மையோடு.

தன்னை மீறி அவளுள் ஒரு பச்சாத்தாபம் எழுந்தது. அவள் நெஞ்சில் இனி என்றும் அந்த உருவம்தான் இருக்கும். என்றேனும் நினைவுபடுத்திக் கொள்ளும்போது, மதர் ஜோஸபீன் அவளிடம் கடுமையாக நடந்து கொண்ட சமயங்கள் எதுவும் இனிமேல் அவள் நினைவுக்கு வராது.

VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA

Veena•எம்ப்ராய்டரீஸ்

மிகச் சிறந்தவை.

தயாரிப்பாளர்கள்:
S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.,
த.பெ.எண்: 8,
குமாரபாளையம் போஸ்ட்
(ஈரோடு வழி)

அமரஜோதி டிரேடர்ஸ்

---

சேவிங்ஸ் கணக்கு
ஆரம்பிக்க ரூ 5/= போதுமானது.
ரூ 25,000 வரை வைத்துக்-
கொள்ளலாம். வாரம் ஒன்றுக்கு
ரூ 2000 வரை செக் மூலம்
பணம் பெற்றுக் கொள்ளலாம்.

THE TANJORE PERMANENT BANK LTD.

தஞ்சாவூர் பர்மனேண்ட்
பாங்க் லிமிடெட்.,

பதிவு அலுவலகம்:
1087, மிஷன் தெரு தஞ்சாவூர்.

சேர்மன்
K. V. சச்சிதானந்த மூப்பனார்
செக்ரட்டரி
B. K. மாதவன்

சேவிங்ஸ்
டெபாசிட்டு
களுக்கு

5%

வரை வட்டி
அளிக்கப்
படுகிறது

## இரண்டு சதுர மைல் முகச் சவரம்

நீங்கள் ஒவ்வொரு நாளும் முகச் சவரம் செய்துகொள்ளும் பழக்கம் உள்ளவரா? அப்படியானல் நீங்கள் அறுபது வயதை எட்டும்போது இரண்டு சதுர மைல் பிரதேசம் செய்திருப்பீர்கள்!

25 கோடி ரோமங்களை வெட்டியிருப்பீர்கள்! 3252 மணி நேரம் அதாவது சுமார் நாலரை மாத காலம் முகச் சவரத்தில் செலவழிந்திருக்கும்!

மோவாயின் மேதான் ரோமம் ரொம்பவும் அடர்த்தியாக வளருகிறது. அதாவது சதுர அங்குலத்துக்கு 750 ரோமம் இருக்கிறதாம்!

மீசைப் பிரதேசத்தில் வளர்வது சராசரி சதுர அங்குலத்துக்கு 685.

'ஓர்ல்ட் டைஜஸ்ட்'

தகவல்; 'பாலசந்தர்'

## திரைப்பட அரங்கும் தேவாலயமாகும்

டிரைவின் ஹோட்டல், டிரைவின் பாங்க் எல்லாம் இருப்பதுபோல் அமெரிக்காவில் 'டிரைவின் சர்ச்'கள் கூட இருக்கின்றன! அமெரிக்க ஐக்கிய ராஜ்யத்தில் இம்மாதிரி மொத்தம் எழுபது மாதாகோயில்கள் இருக்கின்றன. ஞாயிற்றுக்கிழமை காலை வேளைகளில் மட்டும் டிரைவின் தியேட்டர்களை 'டிரைவின் சர்ச்'களாக மாற்றுகிறார்கள். திரைமேடையில் பாதிரியார் நின்றுகொள்கிறார். கார்கள் உள்ளே வந்து நின்றதும், அங்குள்ள வேலையாட்கள் காருக்குள்ளே இருப்பவர்களுக்கு அச்சடித்த வேத பாடல்களைக் கொடுக்கிறார்கள். பின்பு கார் ஜன்னல்களில் சிறு ஒலிபெருக்கிகளைப் பொருத்துகிறார்கள். அந்த ஒலிபெருக்கிகளின் வழியாகக் கார்களில் உட்கார்ந்திருப்பவர்கள் பாதிரியார் பாடும் பாடல்களைக் கேட்கிறார்கள். விடுமுறை நாட்களைக் கழிப்பதற்காக உல்லாசமாகக் காரில் கிளம்புகிறவர்களுக்கு இந்த டிரைவின் சர்ச்சுகள் மிகவும் உபயோகமாக இருக்கின்றன. தவிரவும் நோயாளிகள், அங்கஹீனர்கள், சிறு குழந்தைகள் உள்ள பெற்றோர்கள் ஆகியோருக்கும் இவை மிகவும் பயன்படுகின்றன.

ஆதாரம்: பெமினு.

தகவல்; சரோஜா ராமச்சந்திரன்





## தப்பினர், ஊ தாண்ட்!

ஐ. நா. காரியதரிசி ஊ தாண்ட் டெல்லி வந்தபோது குழந்தைகள் அவரைச் சூழ்ந்துகொண்டு கேள்விகள் கேட்டார்கள்.

"உங்களுக்கு இப்பொழுது உள்ள வேலை பிடிக்கிறதா? அல்லது பழைய உபாத்தியாயர் வேலை பிடித்திருக்கிறதா?"

"எனக்குப் பழைய உபாத்தியாயர் வேலைதான் பிடித்திருக்கிறது. அந்த வேலையில் மகிழ்ச்சி அதிகம்."

"உங்களுக்குக் காமிக், ஜோக் பிடிக்குமா?"

"ஓ பிடிக்குமே. உங்களைப் போலவே எனக்கும் பிடிக்கும்."

கேள்விகளுக்குப் பதில் சொன்ன ஊ தாண்ட் கடைசியில் சொன்னது: "நல்ல வேளையாக வியட்நாமைப் பற்றிக் கேள்வி ஒன்றும் இல்லை." —பாபு

ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா'

வெள்ளித் திரை வைபவம்

# மச்சத்தின் மகிமை!

காந்தன்



ஸ்டூடியோவில் டைரக்டர், மிருகக் காட்சி சாலையில் கூண்டுக்குள் உலாவும் புலி மாதிரி இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந்தார். அவர் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தார் என்பதற்கு அடையாளமாக நிறைய சிகரெட் துண்டுகள் கீழே இறைந்து கிடந்தன. வெள்ளித்திரை வெங்கு அப்போது அங்கே வந்தான்.

''என்ன டைரக்டர் ஸார்! ஒரே சிந்தனையில் ஆழ்ந்து போய் நான் வந்தது கூடத் தெரியாமல் உலாத்திக்கிட்டிருக்கீங்க!''

''வா அப்பா வெங்கு, எல்லாம் நம்ம படத்தைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் சுவாரஸ்யமாகத் திரைக் கதையில் சம்பவங்கள் என்ன சேர்க்கலாமென்று பார்க்கிறேன். ஆங்கிலப் படத்திலிருந்து சில நல்ல 'ஐடியாஸ்' வைத்திருக்கிறேன். அதெல்லாம் நம்ம 'பீப்பி'ளுக்கு 'அப்பீல்' ஆகுமா என்று பார்க்க வேண்டும்.''

''ஆங்கிலப் படத்திலிருந்து நீங்க நல்ல சம்பவங்களையும் விறுவிறுப்பான காட்சிகளையும் சேர்த்தீங்கன்னு அதை 'அப்ரிஷியேட்' பண்ணுகிற ஞானம் நம்ப ஜனங்களுக்குக் கிடையாது. 'பூங்குயில்' படத்தை எடுத்தானே பதுமநிதி, அவன் இப்படித்தான் பண்ணினான். படம் ரிலீஸ் ஆகிறதுக்கு 'டேட்' கொடுத்தாச்சு. அதுக்கு நாலு நாள் முன்னாடி ஒரு இங்கிலீஷ் பிக்சரைப் பார்த்துத் தொலைச்சுட்டான். உடனே அதிலே வர மாதிரியே மிருகக் காட்சிசாலையிலே ஹீரோவும் வில்லனும் சண்டை போடுகிற ஒரு காட்சியை அவசர அவசரமாகப் படம் பிடிச்சுச் சேர்த்தான். என்ன ஆச்சு? ஒரேயடியாகப் 'பணால்' ஆயிடுத்து! பத்திரிகை விமரிசகர்கள் சும்மா இருந்தார்களா? 'இந்தப் படம் பல ஆங்கிலப் படங்களின் கதம்பம்' என்று எழுதிப்பிட்டாங்க. சினிமா படமே மேல் நாட்டிலேயிருந்து வந்ததுதானே! அப்புறம் அதிலே போய், பாரதப் பண்பு, தமிழ்ப் பண்பு என்றெல்லாம் பேசுவானேன்! பிதற்றல்!''

''அப்போ என்ன செய்யலாம்னு யோசனை சொல்றே நீ?''

''ஆங்கிலப் படத்தையெல்லாம் காப்பி அடிக்க வேண்டாம். நம்ம தமிழ்ப் படங்களிலே ஆகிவந்த காட்சிகள் எவ்வளவோ இருக்கு. முக்கியமா ஒரு அயிட்டத்தை நீங்க மறந்துவிடக் கூடாது. கதாநாயகன் மிதமிஞ்சிக் குடிச்சுட்டுத் தள்ளாடிண்டு வர காட்சியைப் புகுத்தணும்!''

''அதெப்படியப்பா முடியும்? நாம் கதாநாயகனை மிகவும் பண்புள்ளவனாக அல்லவா படைத்திருக்கிறோம்?''

''அதனால் என்ன சார்? கதாநாயகன் இடைக் காலத்தில் குடித்துவிட்டுக் கெட்டழிந்து போவான். ஆனால் கடைசியில் திருந்திவிடுவான். அதாவது, 'இடைவேளை'க்கு முன்னால் குடித்துக் கும்மாளமடித்துக் கிளப்பில் பல 'பிக்கினி'ப் பெண்களுடன் கூத்தாடிவிட்டுக் கடைசிக் காட்சியில், 'பழைய பரமானந்தம் இறந்துவிட்டான்; இப்பொழுது உன் எதிரில் நிற்பவன் புதிய பரமானந்தம்!' என்று ஹீரோயினிடம் கம்பீரமாகக் கூறிவிட்டானானால் தீர்ந்தது. அவன் குடி போதையில் இருக்கும்போது எந்த மாதிரிக் காட்சியை வேணுமானாலும் புகுத்தலாம். கனவுக் காட்சி மாதிரி இந்தக் குடி போதைக் காட்சியும் படத் தயாரிப்பாளர்களுக்கு ஒரு வரப்பிரசாதம்! மேற்படி காட்சிகளில் எவ்வளவு வேண்டுமானாலும் பெண்களின் ஆடைகளைக் குறைத்துக் காட்டலாம். எல்லாவித 'டான்சு'களையும் புகுத்துவதற்கு நிறைய 'ஸ்கோப்' இருக்கு. குடி போதைக் காட்சிகளிலே ஹீரோ உளறிக் கொட்டுகிற 'டயலாக்' எழுதுறதும் சுலபம். எதை எழுதினாலும் ஜனங்கள் ஏனென்று கேட்க முடியாது. குடி மயக்கத்தில் ஹீரோ எதைப் பேசினாலும் சிரிப்பாங்க!''

''சபாஷ் வெங்கு! நீ சொல்கிற மாதிரி குடி போதைக் காட்சியைச் சேர்த்துவிட வேண்டியதுதான். இன்னும் ஏதாவது சேர்க்கலாமா சொல்லு!'' என்றார் டைரக்டர்.

''குடிகாரன் நடந்து வரும்போது முக்கியமாகக் கவனத்தில் வைக்க வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. அதுதான் கோட்டு!''

''கோட்டா? அது என்னத்துக்கு? வேஷ்டி சட்டையோடு ஹீரோ வந்தால் போதாதா?'' என்று வியப்புடன் கேட்டார் டைரக்டர்.

''கோட்டைப் போட்டுக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. குடிகாரன் அதைக் கையில் வைத்துக் கொண்டு அடிக்கடி தோளில் போடுவதும் எடுப்பதுமாக இருக்கணும். அப்பத்தான் அவன் குடிகாரன் என்பதை சினிமா ரசிகர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள். அப்படித்தான் அவனைப் படங்களில் பார்த்து அவர்களுக்குப் பழக்கம். நீங்கள் என்ன கேட்டீர்கள்? இன்னும் ஏதா



''கல்யாணம் செய்து கொள்வது ஒன்றுதான் எனக்குச் சரியான மருந்து என்று ஒரு 'பிரிஸ்கிருப்ஷன்' எழுதிக் கொடுங்க டாக்டர்! அப்பாவிடம் காட்டணும்.''

---

வது புதிதாகச் சேர்க்கலாமான்னு கேட்டீங்க, இல்லையா? இந்தப் படத்தில் நாம் இதுவரையில் யாருக்குமே 'டபிள் ரோல்' கொடுக்கவில்லையே? இப்போது கொடுத்தாலென்ன?''

''ஆகா, நல்ல ஐடியா! நானே • இது பற்றி . யோசித்துக் கொண்டிருந்தேன். ஹீரோவுக்குக் கொடுக்கலாமா?''

''நீங்க என்ன யோசிச்சு வச்சிருக்கீங்க? அதைச் சொல்லுங்க.''

''கதாநாயகன் மாதிரியே முக ஒற்றுமையுடைய இன்னொரு வாலிபன் 'பார்க்'கில் உட்கார்ந்திருக்கிறான். அவன் அருகில் ஒரு பெண் உட்கார்ந்திருக்கிறாள். கதாநாயகி வழக்கம் போல் தன் காதலனைச் சந்திக்க அங்கு வருகிறாள் — அவளுக்குக் கோபம் வந்துவிடுகிறது. 'உங்களுக்கு என்ன தைரியம்? இவள் யார்? எத்தனை நாட்களாக இந்த நாடகம் நடக்கிறது? ஏன் என்னிடம் இதைச் சொல்லாமல் மறைத்து வைத்தீர்கள்? என்ன நெஞ்சழுத்தம் உங்களுக்கு? ஆகா!' என்று கேட்டுச் சீறுகிறாள். அவன் ஒன்றும் புரியாமல் விழிக்கிறான். 'பேதைப் பெண்ணே' நீ யார்? எங்கு வந்தாய்? உன்னை இதற்கு முன்பு எங்கேயும் பார்த்ததாக நினைவில்லையே! என்னிடம் ஏன் சண்டைக்கு வருகிறாய்?' என்று மிகவும் அமைதியாகக் கேட்கிறான். இந்தக் காட்சியின் மூலம் படத்திலே ஒரு 'இ ெபக்டிவ் சஸ்பென்ஸ்' உண்டாக்கலாம் என்று பார்க்கிறேன்.''

''டைரக்டர் ஸார், எனக்கென்னவோ ஹீரோயினுக்குத்தான் 'டபிள் ரோல்' கொடுக்கணும்னு தோன்றுகிறது!''

''ஏன், அதில் என்ன விசேஷம்?''

''விசேஷம் இருக்கு, ஸார்! பொம்பளை கிட்டே ஆம்பளை சந்தேகப்பட்டால்தான் நமக்குச் சம்பவங்களை நிறையப் புகுத்தறதுக்கு 'ஸ்கோப்' இருக்கும். அவளைக் கண் கலங்கிக் கதற வைத்து, அந்த அபலையின் கண்ணீரிலே நல்ல கலெக்ஷனுக்கு ஏற்பாடு பண்ணலாம். 'சந்திரமதி', 'சக்குபாய்' முதலிய புராண காலத்துக் கதைகளிலிருந்து பெண்கள் கஷ்டப்பட்டுக் கண்ணீர் விடுவதைப் பார்க்கத்தான் எல்லோரும் விரும்புவார்கள். அதுவும் இன்னொரு முக்கியமான 'ஸைக்காலஜி'யைக் கவனிக்கணும். பெண்களுக்கே மற்ற பெண்கள் சிரமப்படறதைப் பார்த்துக் கண்ணீர் விடுவதில் தான் ஆறுதல் கிடைக்கிறது. அதனாலே கதாநாயகிக்குத்தான் 'டபிள் ரோல்' கொடுக்கணும்னு எனக்குத் தோன்றுகிறது.''

''சரி. கதையை எப்படிக் கொண்டு போகலாம் என்கிறாய்?''

''அந்த 'டூப்ளிகேட்' கதாநாயகி வருகிறாளே, அவள் கதாநாயகியின் கூடப் பிறந்த சொந்தத் தங்கைதான். அவள் சின்னஞ் சிறு பெண்ணாக, உலகமறியாச் சிறுமியாக இருந்த போது ஒரு 'ஜிப்ஸி' கூட்டத்தினர் அவளைத் தூக்கிக் கொண்டு போயிடறாங்க. குழந்தைப் பருவத்திலே குடும்பத்தை விட்டுப் பிரிந்து விட்டாளாகையினால் அவளுக்குத் தன் உடன் பிறந்த சகோதரியான லதாவைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.''

''சரி. ரொம்ப சரி. அவள் குடும்பத்தினரை விட்டு எப்படி, எந்தச் சமயத்தில், எங்கே காணாமல் போனாள் என்பதைப் பொருத்தமாகப் படத்தில் 'எஸ்டாபிளிஷ்' பண்ணியாக வேண்டுமே! அதற்கு என்ன செய்வாய்?''

''டைரக்டர், ஸார்! அது ரொம்ப ரொம்ப சுலபம்! எப்படி என்கிறீர்களா? இப்போ கும்பகோணத்தில் மகாமகம் நடந்ததல்லவா? அந்த மாபெரும் ஜன சமுத்திரத்திலே குழந்தை காணாமல் போய் விட்டதாகக் காட்டி விடலாம். இதில் இன்னொரு அநுகூலமும் இருக்கிறது. 'இந்தப் படத்தில் இவ்வாண்டு மகாமகக் காட்சியைக் காணத் தவறாதீர்கள்' என்று பத்திரிகையில் விளம்பரம் கொடுத்து விடலாம்!''

''பேஷ்! வெங்கு, நல்ல 'ஐடியா'தான். ஆனால் மகாமகக் கூட்டத்தை முன்யோசனையாகப் படம் பிடித்து வைத்துக் கொள்ளாமல் போய்விட்டோமே.''

''அதைப் பற்றி நீங்க கொஞ்சம்கூட, 'வொர்ரி' பண்ணிக்காதீங்க. திருவிழாக் கூட்டங்களெல்லாம் ஒரே மாதிரிதான். எந்தக் கூட்டமானால் என்ன? பெருங் கூட்டத்தை, ஒரு ஜன சமுத்திரத்தை வெள்ளித் திரை முழுக்கக் காட்டிண்டே இருக்கணும். கும்பகோணம் கோவில்களையெல்லாம் மாற்றி மாற்றிக் காட்டணும். இதற்கு மத்தியில் குழந்தை காணாமல்போன காட்சியை ஸ்டுடியோவிலேயே தனியாக 'ஸெட்' போட்டு எடுத்துச் சேர்த்துக்கணும். அவ்வளவுதானே!'' வெங்கு ஷர்ட் காலரைத் தூக்கி விட்டுக் கொண்டு சிரித்தான்.

''வெங்கு, உண்மையிலேயே நீ ஒரு 'ஜீனியஸ்'தான்! அது சரி, சகோதரிகள் ஒருவரை யொருவர் கடைசியில் எப்படித் தெரிந்து கொள்கிறார்கள்?''

''அதென்ன அப்படிக் கேட்டு விட்டீங்க? இருக்கவே இருக்கிறது மச்சம்! அதன் உதவியிலேதான் லதா தன் தங்கையைத் தெரிந்து கொள்ளுகிறாள்'' என்றான் வெங்கு.

# தேவை, ஒரு செங்கல்!

உமாசந்திரன்

பார்க்கப் போனால் ஒரு செங்கல். யந்திரச் சூளையில் தயாராகும் அச்சுச் செங்கல் கூட இல்லை. பழைய காலத்து நாட்டுச் செங்கல். ஆனால் அதை எடுத்து வருவதற்குள் நாகு பட்டபாடு !

பாவம், ஒரு வாரமாக அந்தச் செங்கல்லுக்காக அவன் ஏங்கியிருக்கிறான். ஆபீசில் அவன் உட்கார்ந்திருக்க இடத்திலிருந்து ஜன்னல் வழியே பார்த்தால் எதிரே அந்தப் பழைய காலத்துப் பாழ் வீட்டின் இடிபாடுகள் நன்றாகத் தெரியும். அவனுடைய காரியாலயம் புதுக் கட்டடத்துக்கு மாற்றலாகி வந்து நான்கு வருஷங்களாகின்றன. இந்த நான்கு வருஷங்களாக அந்த எதிர் வீடு எருக்கும் தும்பையும் நாயுருவியும் முளைத்துப் போய்க் கேட்பாரில்லாமல்தான் கிடந்தது.

அந்த வீட்டை யாரோ வாங்கிவிட்டார்கள். பத்து நாட்களாக அதைத் தரை மட்டமாக்கும் வேலைதான் நடந்து கொண்டிருந்தது.

நாகு ஒருவனுக்குத்தான் அப்படி உட்காரத் தெரியும் என்பதை அறிந்துதான் எல்லோருமாக அந்த நொண்டி நாற்காலியை அவன் தலையில் கட்டினார்களோ, என்னவோ ! நாகு பாவம், அதைப் பற்றி அலுத்துக் கொள்வதே கிடையாது.

பகல் ஒரு மணியிலிருந்து இரண்டு மணி வரை சிற்றுண்டி இடைவேளை என்று உண்டே, அந்தச் சமயத்தில்தான் அவன் மேஜை டிராயரிலிருந்து அகிலா கட்டிக் கொடுத்து அனுப்பும் டிபன் பொட்டலத்தைக் கையில் எடுத்துக் கொண்டு நிமிர்ந்து உட்காருவான். இடப் பக்கமாக ஒடிந்து விடுவதுபோல் சாயும் அந்த நாற்காலி. அதுவே நாகுவுக்குச் சாய்வு நாற்காலியைப் போல் இதமாயிருக்கும். அகிலா கட்டிக் கொடுத்த டிபன் மோர்க்களியாக இல்லாமல் இட்டிலியாகவோ, தோசையாகவோ இருந்து விட்டால் நாகு முன்னும் பின்னும் அந்த நாற்காலியை லாகவமாக ஆட்டிக் கொண்டே அதன் சுவையை ரசித்துச் சாப்பிடுவான். அதன் பிறகு பின்னுக்குச் சாய்ந்த நிலையில் ஜன்னல் வழியே வெளியுலகத்தைப் பார்த்து ரசித்துக் கொண்டு இரண்டு மணி வரை உட்கார்ந்திருப்பான். அந்த விதத்தில் துளி அதிர்ஷ்டம் அவனிடம் ஒட்டிக் கொண்டிருந்தது. நொண்டி நாற்காலியாயிருந்தாலும் ஜன்னல் பக்கமாக இடம் கிடைத்ததே! அந்த ஜன்னல் வழியே அவனுக்குத் தெரிந்ததெல்லாம் அந்தப் பாழ் வீடுதான் என்றாலும் அதுவே அவனுடைய ரசனைக்குப் போதுமானதாயிருந்தது.

பாழ்வீடு இடிபட்டுச் செங்கல் குவியல் தோன்றியபிறகு தான் நாகுவின் மனத்தில் நாற்காலியின் குட்டைக் காலுக்கு முட்டுக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமே உதித்தது. அந்தக் குவியலிலிருந்து ஒரு செங்கல்தான் அவனுக்குத் தேவை. நாற்காலிக்கு முட்டுக் கொடுப்பதற்கு மட்டுமா, அல்லது பாழ் வீட்டின் ஞாபகத்துக்கும் சேர்த்துத்தானா ? அந்தப் பாழ் வீட்டின் மேல் அப்படி என்ன பாசம் என்று நினைத்து நாகு மனத்துக்குள் சிரித்துக் கொண்டான்.

பியூன் பங்காருவின் உதவியைத்தான் முதலில் நாடினான் நாகு. ''அங்கிருந்து ஒரு செங்கல் கொண்டு வந்தால் போதும், பங்காரு!'' என்று மன்றாடினான்.

ஆனால் பங்காரு அலட்சியமாகச் சிரித்தான்.

''அதுக்கு வேறே ஆளைப் பாரு சார் ! பேயும் பிசாசும் பூந்து விளையாடின வீடு அது! அந்தச் செங்கல்லெ மனிசன் விரலாலே தொடுவானா?'' என்று முணுமுணுத்துக் கொண்டு போய் விட்டான்.

இடிபாட்டு நிலையிலேயே அந்த இடத்துக்கு ஒரு காவல்காரனையும் போட்டு விட்டார்கள். அந்த ஆள் ஒரு மூலையில் குடிசை போட்டுக் கொண்டு தன் மனைவியுடனும் குழந்தையுடனும்







குடித்தனம் நடத்த ஆரம்பித்து விட்டான். பெரும்பாலும் அந்த ஆள் செங்கல் குவியலின் மேல் உட்கார்ந்து பீடி குடித்துக் கொண்டிருப்பான்.

அவனிடம் கேட்பதற்கு நாகுவுக்குத் துணிவு வரவில்லை. பியூன் பங்காருவைப் போல அவனும் எடுத்தெறிந்தாற்போல் பேசி விட்டால்? அப்படிப்பட்ட ஆளாகத்தான் அவன் தோன்றினான்.

நாகுவின் தயக்கத்திலேயே நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. செங்கல் குவியலை யார் யாரோ வந்து பார்த்துப் பேரம் பேசி விட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள். கடைசியில் யாராவது லாரி லாரியாகக் கொண்டு வந்து அவ்வளவையும் அள்ளிக் கொண்டுதான் போய்விடப் போகிறார்கள்! அப்புறம் நாகுவுக்குச் செங்கல் கிடைத்தாற் போலத்தான்! அவனே துணிந்து போய் எடுத்து வந்தாலொழிய வேறு வழியில்லை.

இந்த முடிவுக்கு வந்ததும் நாகு தீவிரமாக அதைச் செயல்படுத்துவதில் முனைந்தான். மறு நாள் அலிலாவை அவசரப்படுத்தி வழக்கத்துக்கு அரைமணி நேரம் முன்னதாகவே சாப்பிட்டு முடித்துவிட்டுப் பையை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டான். பாழ் வீட்டுக்கு அக்கம் பக்கத்தில் ஈ, காக்கை இல்லை. பரட்டைத் தலைக் காவல்காரன் தனியாகப் பீடி குடித்து அலுத்துப் போய் எங்கோ தோழர்களுடன் பீடிக் கச்சேரி நடத்தப் போயிருந்தான் போலிருந்தது. குடிசைக்குள்ளிருந்து வந்த குழந்தையின் அலறல், அதன் தாயார் அதற்கு எண்ணெய் முழுக்காட்டிக் கொண்டிருந்தாள் என்பதை அறிவித்தது.

ஓர் அசுரத் துணிச்சல் நாகுவை நெட்டிப் பிடித்துத் தள்ளியது. ஒரே பாய்ச்சலில் செங்கல் குவியலை நோக்கிச் சென்றான். சட்டென்று குனிந்து உடையாத செங்கலாகப் பார்த்து ஒன்றை எடுத்துக் கைப் பையில் திணித்துக் கொண்டு மறு பாய்ச்சலில் வெளியே வந்துவிட்டான். சில விநாடிகளில் காரியம் முடிந்து விட்டது. இதற்கா இவ்வளவு தயங்கினேம் என்று அவனுக்கே சிரிப்பாய் வந்தது. வெற்றிக் களிப்புடன் காரியாலயக் காம்பவுண்டுக்குள் அவன் நுழைந்தான்.

அப்போது உதவி மானேஜர் கார் ஆபீசுக்குள் நுழைந்தது.

காரை விட்டு இறங்கிய உதவி மானேஜர் நாகுவின் பக்கம் திரும்பிப் பார்த்தார். பையுடன் கையை உயர்த்தி அவருக்கு வணக்கம் தெரிவித்தான் நாகு. கை உயர்வதற்குப் பதிலாக முதுகு முன் பக்கம் ஒடிந்து விழுவது போலிருந்தது. ஒரு செங்கலுக்கு இவ்வளவு கனமா? அந்தக் காலத்துச் செங்கல்லா சும்மாவா? அந்தக் காலம் அந்தக் காலம்தான்! எதிலும் அழுத்தம், கனம், உறுதி!

''நாகு, உமக்கு இப்போது அவசரமான வேலை ஒன்றும் இல்லையே!''

தன்னுடைய அவசர வேலை என்னவென்று நாகு உதவி மானேஜரிடம் எப்படிச் சொல்ல முடியும்! அவர் எதற்காகக் கேட்கிறார் என்று தெரியாதா என்ன?

''உங்கள் வேலை ஏதாவது இருந்தால் சொல்லுங்கள், சார். முதலில் அதைக் கவனிக்கிறேன்.''

''பையை வைத்துவிட்டு என் அறைக்கு வாரும்!'' என்று கூறிவிட்டு உதவி மானேஜர் உள்ளே சென்றார்.

பரவாயில்லை. பையையும் சுமந்து கொண்டு அவர் அறைக்குப் போக வேண்டிய தொல்லை இல்லை. அதுவரைக்கும் காப்பாற்றினார்.

காரியாலயத்தில் கொலு கூடுவதற்கு இன்னும் கால் மணி நேரம் இருந்தது. அந்தக் கால்மணி நேரத்தில் நிம்மதியாகச் செங்கல்லை நாற்காலிக்குச் சரிபார்த்து முட்டுக் கொடுத்து விட்டு ராஜா போல் உட்கார்ந்திருக்கலாம். இந்த உதவி மானேஜர் நடுவில் புகுந்து கெடுத்து விட்டாரே! சட்டுப்புட்டென்று அவர் வேலை முடிந்து ஓர் ஐந்து நிமிஷமாவது தனிமையான நிம்மதி கிடைத்து விட்டால் போதும். ஆனால் உதவி மானேஜர் நச்சுப் பேர்வழியாயிற்றே! அவ்வளவு சீக்கிரம் எங்கே விடப் போகிறார்!

பையை நாற்காலிக்கு அடியில் மேஜையோடு சேர்ந்தாற்போல் வைத்து விட்டு உதவி மானேஜரின் அறைக்கு விரைந்தான் நாகு. அவன் நினைத்தது சரிதான்! உதவி மானேஜர் அவனை இலேசில் விடும் வழியாயில்லை. அவனை அப்படியே நிற்க வைத்து விட்டு ஏதேதோ பைல்களைப் புரட்டிக்கொண்டிருந்தார். பிறகு நாலைந்து பக்கங்களில் சிவப்புப் பென்சிலால் அடையாளம் செய்து அந்தப் பகுதியை மட்டும் அங்கேயே உட்கார்ந்து டைப் செய்து கொடுக்கும்படி கூறினார்.

நாகு தன் வேலையை முடித்துக் கொண்டு தன் இடத்துக்கு வந்தபோது அங்கு 'ஜே ஜே' என்று கொலு கூடியிருந்தது. அசாதாரணச் சுறுசுறுப்புடன் ஒருவர் பாக்கியில்லாமல் ஆஜராகி யிருந்தனர். அனைவர் கண்களும் அவனையே வியப்புடன் நோக்கின. உதவி மானேஜரின் அறையிலிருந்து வருகிறானே! காக்காய் பிடிக்கும் கலையில் நாகுவுக்குங்கூட நாட்டம் விழுந்துவிட்டதா என்ன?

நாகு பாவம், அவன் எண்ணமெல்லாம் தான் அவ்வளவு கஷ்டப்பட்டு எடுத்து வந்த செங்கல் மேலேயே இருந்தது. இவ்வளவு கண்களின் கழுகுப் பார்வைக்கு எதிரே அதைப் பையிலிருந்து எடுத்து நாற்காலிக்கு முட்டுக் கொடுப்பது சாத்தியமில்லையே! சிற்றுண்டி இடைவேளை வரையில் காத்திருக்க வேண்டியதுதான்! வழக்கம்போல் நாற்காலியில் முன்பக்கம் சாய்ந்து உட்கார்ந்து பேனவை ஓட்ட ஆரம்பித்தான்.

சிற்றுண்டி இடைவேளைக்கு ஒவ்வொருவராக எல்லோரும் எழுந்து வெளியே சென்று விட்டனர். யாரும் அவனைக் கூட வரும்படி அழைத்த நாளே கிடையாதே! அலிலா கொடுத்து அனுப்பும் டிபன் பொட்டலத்தில் யாரும் கை வைத்ததும் கிடையாது. அந்த வரைக்கும் லாபம்!

செங்கல்லை எடுப்பதற்காக நாகு பையைத் துழாவிய போது முதலில் டிபன் பொட்டலம்தான் அவன் கையில் தட்டுப்பட்டது. அதை வெளியே எடுத்ததும் வழக்கம்போல் மோர்க்களியாகத்தான் இருக்கும் என்ற

அலட்சியம் தோன்றியது முதலில். ஒரு வேளை வேறு ஏதாவது இருந்தால்? எதற்கும் பார்த்து விடலாமே! ஆனால் பொட்டலத்தைச் சிறிது பிரித்தானோ இல்லையோ, மிளகாய்ப் பொடி மணத்துடன் கலந்த இதமான தோசை மணம் அவன் நாசியை வந்து தாக்கி அவனது பசியைக் கிளறிவிட்டது. அவ்வளவுதான்; செங்கல் நினைவு சட்டென்று பின்னுக்கு ஓடியது. அடாடா! இவ்வளவு அற்புதமான தோசையைத் தருந்தபடி ரசித்துச் சாப்பிட வேண்டாமா? எப்படிப்பட்ட கவிதை நிரம்பிய கல்தோசை! முன்னும் பின்னும் ஆடிக் கொண்டே சாப்பிட்டால் எவ்வளவு பிரமாதமாக இருக்கும்! ஊருக்கு முன்னால் நாற்காலிக்குச் செங்கல்லை முட்டுக் கொடுத்துவிட்டுக் கட்டை மாதிரி முதுகை நிமிர்த்தி வைத்து உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவதில் என்ன சுவாரசியம் இருக்கிறது? முதலில் தோசை; அதற்குப் பிறகுதான் செங்கல். எதற்கு எப்போது முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று நாகுவுக்கா தெரியாது?

உண்மையிலேயே அந்தத் தோசையைப் பிரமாதமாகத்தான் செய்து கொடுத்திருந்தாள் அகிலா. அந்த நாற்காலியில் முன்னும் பின்னும் ஆடிக் கொண்டே அவசரப்படாமல் கொஞ்சம் கொஞ்சமாக ரசித்துச் சாப்பிட்டான் நாகு. நேரம் ஆனால் ஆகட்டும். இரண்டு மணிக்கு முன்னால் செங்கல்லை முட்டுக் கொடுக்க முடியாமல் போனால் சாயங்காலம் ஆபீஸ் விட்டதும் பார்த்துக் கொள்ளலாமே! கைவசம் செங்கல் என்னவோ இருக்கிறது. நம்மை விட்டு எங்கே ஓடிப் போகிறது?

சிற்றுண்டி இடைவேளை சீக்கிரமேதான் முடிந்து விட்டது. கலைந்திருந்த கொழு மறுபடியும் கூடி விட்டது. சாயங்காலம் வரை பொறுத்திருக்க வேண்டியதுதான்! அதைப் பற்றி நாகு அலட்டிக் கொள்ள வில்லை. அந்த நொண்டி நாற்காலிக்குக் கால் நேராவதற்கும் வேளை வர வேண்டுமல்லவா?

அன்று பார்த்து நாகுவுக்கு அடுத்தடுத்து வேலை. அன்றே பதிவு செய்து முடிக்க வேண்டிய நாலைந்து பதிவுப் புத்தகங்கள் மேஜை மேல் வந்து குவிந்துவிட்டன. மறு நாள் காலையில் முதல் காரியமாக அவை மானேஜரின் பார்வைக்குத் தயாராயிருக்க வேண்டியவை. ஆபீஸ் நேரம் முடியும் தறுவாயில்கூட அவை முடிந்தபாடில்லை. ஐந்து மணிக்கு அவரவர் கடையைக் கட்டிக் கொண்டு கிளம்பியபிறகும் நாகு அந்தப் பதிவுப் புத்தகங்களுடன் போராடிக் கொண்டிருந்தான். ஒரு வழியாக அவற்றை முடித்து ஒழுங்காக வைத்துவிட்டு நிம்மதியுடன் அவன் தலையை நிமிர்ந்த போது பங்காரு ஜன்னல் கதவைச் சாத்திக்கொண்டிருந்தான்.

''கொஞ்சம் இரு பங்காரு. ஓர் ஐந்து நிமிஷ வேலை பாக்கி இருக்கிறது'' என்றான்.

''நாளைக்குப் பார்த்துக்க சார். இப்பவே மணி அஞ்சரை ஆயிட்டது. நான் கதவெல்லாம் மூடிக்கிட்டு எப்ப வீட்டுக்குக் கிளம்பறது?''

''பங்காரு....'' என்று ஆரம்பித்த நாகு, பங்காருவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் தான் கூற வந்ததை நிறுத்திக் கொண்டான். இந்த அற்பப் பயலிடம் என்ன கெஞ்ச வேண்டியிருக்கிறது? ஆக்கப் பொறுத்தது ஆறப் பொறுக்காதா? நாளைக்குக் காலையில் தான் அதன் கால் சரியாக வேண்டுமென்று அந்த நாற்காலியின் தலையில் எழுதியிருக்கிறது போலிருக்கிறது! இன்று புறப்பட்டது போலவே கொஞ்சம் முன்னதாக வீட்டை விட்டுப் புறப்பட்டால் காதுக்குக் காது வைத்தாற்போல் காரியம் முடிந்துவிடும். இப்போதைக்கு இந்தச் செங்கல்லை வீட்டு வரையில் சுமந்தாக வேண்டுமாக்கும்! சுமந்துவிட்டுப் போகிறது.

கையில் பிடித்த பையுடன் பஸ்ஸில் வௌவால் போல் வாரைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு நின்றிருந்த போதுதான் நாகு அந்தச் செங்கல் எவ்வளவு கனம் என்பதை நன்றாக உணர்ந்தான். ஒரு கையிலிருந்து மற்றொரு கைக்கு மாற்றி மாற்றி எப்படியோ சமாளிக்க முயன்றும் அவன் இறங்கவேண்டிய இடம் வருவதற்குள் இரண்டு கையும் இற்று விழுந்துவிடும் போல் ஆகிவிட்டது.

அலுத்துச் சலித்து நாகு வீட்டுக்குத் திரும்பியபோது அதே காலுடன் கடைவீதிக்குப் போய் வர வேண்டிய வேலை அங்கே காத்திருந்தது. அன்று வெள்ளிக்கிழமை. ஆபீஸிலிருந்து வரும்போது சுவாமி படத்துக்குச்

## வர்த்தக மொழி காட்டும் வழி

அர்ஜென்டைனா முதல் ஹைய்ட்டி வரை உள்ள பல்வேறு நாடுகளின் பட்டியலைக் கொடுத்து அவை உள்நாட்டு வியாபாரத்துக்கும் அயல்நாட்டு வாணிபத்துக்கும் பயன்படுத்தும் மொழியை விவரிக்கிறது வர்த்தக நிர்வாகம் சம்பந்தப்பட்ட ஒரு சஞ்சிகை.

மொத்தம் 61 நாடுகள் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. இவற்றில் அயல் நாட்டு வாணிபத்துக்கு ஆங்கிலத்தை மட்டும் பயன்படுத்தும் நாடுகள் 57. ஆங்கிலத்துடன் இன்னொரு மொழியையும் பயன்படுத்தும் நாடு ஒன்று. ஆக மொத்தம் 58.

உள்நாட்டு வியாபாரத்துக்கு ஆங்கிலத்தையும் அத்துடன் இன்னொரு மொழியையும் பயன்படுத்தும் நாடுகள் 32. ஆங்கிலத்தை மட்டுமே பயன்படுத்தும் நாடுகள் 17. ஆகமொத்தம் 49.

ஆதாரம் : ''சுயராஜ்யா''வில் ராஜாஜி எழுதிய கட்டுரை

சாத்துவதற்குக் கொஞ்சம் புஷ்பம் வாங்கி வரும்படி கூறியிருந்தாள் அகிலா. செங்கல் பையை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தால் போதும் என்ற வேதனையில் நாகு அந்த விஷயத்தை மறந்து விட்டிருந்தான். அவன் வீட்டுக்குள் நுழைந்ததுமே அகிலா கேட்ட முதல் கேள்வி புஷ்பத்தைப் பற்றித்தான். மறு வார்த்தை பேசாமல் நாகு பையை அப்படியே நடையில் வைத்து விட்டுக் கடை வீதியை நோக்கிச் சென்று விட்டான்.

புஷ்பத்தை வாங்கிக் கொண்டு திரும்பி வந்த நாகு அலமாரியில் அதை வைத்து விட்டு அந்தக் கூடத்தில் போட்டிருந்த ஒரே ஊட்டாரும் சாதனமான சாய்வுநாற்காலியில் சாய்ந்தான். 'நாலைந்து குடித்தனங்களுக்கு அடைக்கலம் கொடுத்து வந்த அந்த வீட்டில் நாகுவின் குடித்தனத்துக்குக் கிடைத்திருந்த பகுதி அந்தக் கூடமும் அதையடுத்து முன் பக்கத்தில் ஒரு சிறிய அறையும் பின்பக்கத்தில் சமையலறையும் குழாய் முற்றமும் தான். ரயில் பெட்டி மாதிரி ஒன்றுக்குள் ஒன்றாக இணைந்த போர்ஷன். நாகு, அகிலா, குழந்தை மூவரை மட்டுமே கொண்ட அந்தக் குடித்தனத்துக்கு அதற்கு மேல் எதற்கு?

அடுத்தடுத்து இரண்டு குழந்தைகள் தவறிப் போய் இப்போது மூன்றாவது ஆயுசோடு இருக்கிறது. ஒன்றரை வயதைக் கடந்து பல் முளைக்கும் தொந்தரவெல்லாம் தாண்டியாயிற்று. இனிமேல் கவலை இல்லை. முதல் இரண்டு குழந்தைகள் ஒரு வயது நிரம்பும் வரையில்கூட உயிரோடு இருக்கவில்லையே! இந்த மூன்றாவது குழந்தையாவது ஆயுசோடு இருக்க வேண்டுமென்று நாகுவின் அம்மா ஏதேதோ தெய்வங்களை வேண்டிக் கொண்டு ரட்சை கட்டிக் குழந்தைக்குக் 'குப்பை' என்று பெயரும் வைத்து விட்டாள்!

அம்மாவின் வேண்டுதலும் ரட்சையும் பொய்த்துப் போகவில்லை. குப்பை ஒரு குறைவும் இல்லாமல் வளர்ந்து வேளா வேளைக்குச் சாப்பிட்டு வேளா வேளைக்குத் தூங்கிக் கொண்டிருக்கிறான். அம்மாவைத்தான் வாழ்த்திக் கொண்டிருந்தான் நாகு. ''இது குப்பை இல்லேடி, அகிலா. குப்பையிலே கிடைத்த தங்கக் கட்டி! இந்தத் தங்கக் கட்டி நமக்குத் தக்கணுமென்னுதான் குப்பைன்னு பேர் வைக்கச் சொன்னேன்!'' என்று குழந்தையை வாரி அணைத்து முத்தமிட்டுக் கொண்டே கூறுவாள் அம்மா. அம்மாவுக்குத்தான் இந்தக் குழந்தையிடம் எவ்வளவு ஆசை! குழந்தையை விட்டுப் பிரியவே மனமில்லாமல் தான் போன மாதம் ஊருக்குப் புறப்பட்டுப் போனாள்.

தூளியில் அசைவு தெரிந்தது. நாகு எழுந்து தூளியைச் சற்று அகற்றி உள்ளே குனிந்து பார்த்தான். குப்பை தூங்கிக் கொண்டுதான் இருந்தான். கனவு கண்டு காலை உதைத்துக் கொண்டான் போலிருக்கிறது! தூளியை ஓர் ஆட்டு ஆட்டிவிட்டு மீண்டும் சாய்வுநாற்காலியில் வந்து சாய்ந்தான் நாகு.

அகிலா உள்ளே என்ன செய்து கொண்டிருக்கிறாள்? குழாயடி முற்றத்திலிருந்து பரட்டு பரட்டென்று ஏதோ பாத்திரத்தைத் தேய்க்கும் சத்தம்! அகிலாவே அப்படித்தான். வேலைக்காரி பாத்திரம் தேய்ப்பது அவளுக்கு ஒரு நாளும் திருப்தியே அளிக்காது.

நாகு எழுந்து சமையலறையைத் தாண்டிக் குழாயடி முற்றத்துக்குச் சென்றான். அப்போதுதான் அகிலா தோசைக் கல்லைக் கழுவி எடுத்துக் கொண்டு நிமிர்ந்தாள்.

''முத்தம்மா கைக்கு முடுருதான் பண்ணிப் போடணும்! கொஞ்சம்கூட அழுத்தாதா ஒரு கை! தோசைக் கல்லிலே எண்ணெய்ப் பிசுக்கே போகலே! இப்பப் பாருங்க! பளபளன்னு வெள்ளித் தகடு மாதிரி ஆக்கிட்டேன்!'' என்று பெருமையுடன் காட்டினாள்.

''இன்னிக்குக் கொடுத்திருந்த தோசை பிரமாதமாயிருந்தது அகிலா!'' என்றான் நாகு.

''அதிருக்கட்டும். எனக்குச் செங்கல் வேண்டியிருக்கும்னு உங்களுக்கு எப்படி ஜோசியம் தெரிஞ்சது? உங்க பையை எடுத்து வைக்கிறபோது பாத்தா உள்ளே செங்கல்! தோசைக் கல்லைத் தேய்க்கிறதுக்கு எவ்வளவு சௌகரியமாயிருந்தது தெரியுமா?''

நாகு திடுக்கிட்டான். ''என்ன சொல்லறே, அகிலா! அந்தச் செங்கல்லை வைச்சா தோசைக் கல்லைத் தேய்ச்சிண்டிருந்தே? தொலைஞ்சுது! அந்தச் செங்கலுக்காக நான் எவ்வளவு பாடுபட்டேன்! அவ்வளவையும் வீணடிச்சுட்டேயே! இனிமே அந்தச் செங்கல் உருப்படியா இருக்கிறதேது?''

''ஒரு செங்கலுக்காகவா இப்படி உருகிப் போறீங்க?''

''அந்தச் செங்கல்லோட அருமை உனக்கு என்ன தெரியும்? ஆபீசிலே என் நாற்காலிக்கு முட்டுக் கொடுக்க அதுதான் சரியாயிருக்கும்னு எடுத்து வைச்சிருக்கேன். தேய்ச்சுத் தொலைச்சுட்டியே!''

''அதுக்கு ஒண்ணும் ஆயிடலே. முழுசாத்தான் குழாயடியிலே கிடக்கு!'' என்று கூறிய அகிலா, தோசைக் கல்லின் வெள்ளித் தன்மையைப் பார்த்துக் கொண்டே உள்ளே சென்றாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் கூடத்திலிருந்து, ''அகிலா! அகிலா!'' என்று அவன் பரபரப்புடன் உரக்க அழைக்கும் சத்தம் கேட்டது.

''ஏன்? என்ன ஆச்சு?'' என்று கேட்டுக் கொண்டே கூடத்துக்கு விரைந்தாள் அகிலா.

''இதோ பாரு அகிலா, இந்தச் செங்கல்லைச் சரியாப் பாரு! என் கண்ணுக்குத்தான் அப்படித் தெரியறதா? அல்லது உண்மையிலேயே அப்படி இருக்கான்னு பாத்துச் சொல்லு!'' என்ற நாகு செங்கல்லை விளக்கு வெளிச்சத்துக்கு இன்னும் அருகில் எடுத்துச் சென்று அவள் நன்றாகப் பார்க்கும்படி திருப்பித் திருப்பிக் காட்டினான்.

''சந்தேகமே இல்லை! இது தங்கச் செங்கல்தான்!'' என்று கூவினான் வெறிபிடித்தாற்போல்.

''அப்படியும் இருக்குமா?''

''ஏன் இருக்காது? இதை நீங்க எங்கேயிருந்து எடுத்து வந்தீங்க?''

''ஆபீசுக்கு எதிரே ஒரு பாழ்வீடு இருந்துதே! அதை இடிச்சுப் போட்டிருக்

காங்க. அந்தச் செங்கல் குவியலிலேயிருந்து தான் இதை எடுத்தேன். பழங்காலத்துச் செங்கல், அதனுலேதான் இப்படி கனக்கிறதுன்னு நினைச்சேன்.... இது தங்கச் செங்கல்னு தெரிஞ்சா......''

''இப்பப் புரியறது. அந்தக் காலத்துப் பணக்காரன் யாரோதானே அந்த வீட்டைக் கட்டியிருப்பான்! எப்படியெல்லாம் கொள்ளையடிச்சுப் பணத்தைச் சேர்த்திருந்தாஞே! கொள்ளையடிச்ச பணத்தைப் பதுக்கியாகணுமே! அவ்வளவையும் தங்கச் செங்கல்லா மாத்திச் சுவரோட சேத்து வைச்சுக் கட்டிட்டான் போலேருக்கு!''.

''இதை அந்தக் குவியல்லேயே கொண்டு போய் எறிஞ்சிட்டு வந்துடுங்க.''

மறு பேச்சில்லாமல் நாகு அந்தச் செங்கல்லைப் பைக்குள் வைத்துக் கொண்டு புறப்படத் தயாராஞன்.

''நாகு! நாகு!''

பையை ஒரு பக்கமாக வைத்துவிட்டு வெளியே எட்டிப் பார்த்தான் நாகு. ஜக்கு உரிமையுடன்உள்ளேவந்துகொண்டிருந்தான்.

''அடேடே! ஜக்குவா? வெளியூருக்கு எங்கேயோ வேலை தேடிப் போயிருந்தேன்னு கேள்விப்பட்டேனே!''

''வேலை தேடறதா? இனிமேலா, ஐயாவை என்னன்னு நினைச்சே? சொந்த பிஸினஸ் ஆரம்பிச்சிருக்கேன். பிரதர்! நானு பேருக்கு நானே வேலை போட்டுக் கொடுக்க முடியும்!'' என்று கூறியவாறே தன் கையிலிருந்த பையைச் சுவரோரமாக வைத்து விட்டுப் பெரிய மனுஷ தோரணையுடன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான் ஜக்கு.

நாகுவுக்கு இந்த ஜக்குவைக் கண்டாலே பிடிக்காது. பெரிய அடாபிடிப் பேர்வழி. நாகுவின் காரியாலயத்திலேயே வேலை பார்த்து ஏதோ தகிடுதத்தம் செய்து மாட்டிக் கொண்டு வேலையிலிருந்தே நீக்கப்பட்டு வெளியே போனவன். நாலைந்து மாதங்களாகவே வேலை இல்லாமல் எங்கெங்கோ அலைந்து கொண்டிருந்தான். இப்போது சொந்த பிஸினஸ் ஆரம்பித்திருப்பதாகக் கூறிக் கொண்டு வந்திருக்கிருனே! அவன் வந்த டாக்ஸி இன்னும் அவனுக்காகக் காத்துக் கொண்டு வாசலிலேயே நின்று கொண்டிருக்கிறது!

''நாகு, நானே கேக்கிறேன், எட்டு வருஷமா அந்த ஆபீசிலேயே பேனவைத் தேய்ச்சுக்கிட்டிருக்கியே, என்ன சுகத்தைக் கண்டே? எட்டு வருஷ சர்வீஸ் ஆகியும் இன்னும் உனக்கு நாற்காலிகூட உருப்படியாக் கிடைச்சபாடில்லே! இன்னமும் ஏன் அங்கேயே ஒட்டிக் கொண்டிருக்கேன்னு கேக்கறேன்! காலத்துக்குத் தகுந்தாப்பலே நாமும் போகணும் பிரதர். நான் சொல்றேன் கேளு. அந்த வேலைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு நம்ம கம்பெனியிலே சேர்ந்துடு! அங்கே வாங்கற சம்பளத்துக்கு மேலே நூறு ரூபா நான் போட்டுக் குடுக்கறேன்.''

''இல்லே ஜக்கு. எனக்கு இப்ப ஒரு குறையும் இல்லே. சந்தோஷமாத்தான் இருக்கேன்.......''

ஜக்கு அவனை ஏளனமாகப் பார்த்தான்.



''பிரதர்! உனக்கு ஒரு உதவி செய்யணுன்னு எனக்கு ஆசை!''

''என்ன உதவி?''

''டிக்கட் வாங்கப் பணம் இல்லே. காட்சி முடிகிறவரை உன் குட்டியை நான் பார்க்கிறேன். நீ போய் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளப்பா!''

---

''சந்தோஷமாத்தான் இருக்கியா? இந்த ஒண்டுக் குடித்தனத்திலே அவஸ்தைப்பட்டுக் கிட்டிருக்கியே, இதுதான் சந்தோஷமா? டேய் நாகு, நீயெல்லாம் முன்னுக்கு வர ராசி இல்லேடா! பிழைக்கத் தெரியாத பய!''

''இருந்திட்டுப் போறேன். எல்லாம் அவங்கவங்க மனசைப் பொறுத்ததுதான்!''

''மனசாம் மனசு! சுத்தச் சோங்கி மனசு! எட்டு வருஷங்கள் பழகியிருக்கோமே, நம்மாலானது கொஞ்சம் கைதூக்கி விடலாம்னு பார்த்தா, உனக்கு அந்த அதிர்ஷ்டம் இருந்தாத்தானே? கிணத்துத் தவளை மாதிரி இருக்கிறதுதான் உனக்குச் சந்தோஷமாயிருக்கு! அப்படியே இரு பிரதர்! நான் வரேன்.''

விடுவிடென்று வெளியே சென்று அவன் டாக்ஸியில் ஏறிக் கொண்டதும் அது உறுமிக் கொண்டு கிளம்பிச் சென்றது.

அகிலா உள்ளிருந்து வந்தாள்.

''நல்ல வேளை, சரியானபடி பதில் சொல்லி அனுப்பிச்சீங்க. எங்கே அவனுடை ஆசை வார்த்தையிலே ஏமாந்து போயிடுவீங்களோன்னு பயமாத்தான் இருந்தது....''

''சரிதான்! ஜக்குவைப் பத்தி எனக்கு இன்னிக்கு நேத்திக்கா தெரியும்!'' என்ருன் நாகு.

''அது போகட்டும். நீங்க முதல்லே அந்தச் செங்கல்லைக் கொண்டு போய் எறிஞ்சிட்டு வந்திடுங்க. அதை வீட்டிலேயே வைச்சுக்கக் கூடாது!''

''ஆமாம். அதை எறியப் போனபோது தான் ஜக்கு வந்து சேர்ந்தான். அட! இதென்ன! இது நம்ம பை இல்லேயே! சரிதான்! ஜக்கு போகும்போது நம்ம பையை மாத்தி எடுத்துக் கொண்டு போயிருக்கான்!''

ஐக்கு வைத்துவிட்டுப் போன பையும் ஏதேதோ புத்தகங்களை உள்ளடக்கிக் கொண்டு ஏறக்குறைய அதே கனம்தான் இருந்தது.

''இரு. இப்பவே அவனைப் பிடிச்சு இதைக் குடுத்திட்டு நம்ம பையை வாங்கிட்டு வந்திடறேன்!'' என்று கூறிவிட்டுப் பரபரப்புடன் அங்கிருந்து கிளம்பினான் நாகு.

பஸ்ஸைப் பிடித்து ஐக்குவின் வீட்டுக்குப் போனால் அங்கு ஐக்கு இருந்தால்தானே? வெளியே போனவன் இன்னும் திரும்பி வரவில்லை என்று தெரிந்தது. டாக்ஸியிலேயே பிஸினஸ் விஷயமாக எங்கெங்கே சுற்றிக் கொண்டிருக்கிறானோ! ஒரு வேளை, பை மாறி விட்டதைத் தெரிந்து கொண்டு அவன் வீட்டுக்கே போயிருப்பானோ? அப்படியே போனாலும் அகிலா தகுந்த பதில் சொல்லி அனுப்ப மாட்டாளா என்ன? ஐக்குவின் வீட்டில் ஒரு வேலைக்காரனைத் தவிர வேறு ஆள் கிடையாது. அங்கேயே எப்படி உட்கார்ந்திருப்பது? வெளியே கொஞ்ச நேரம் சுற்றுவதும் மறுபடியும் வந்து பார்ப்பதுமாக நாலைந்து தடவைகள் அலைந்த பிறகு சுமார் பத்து மணி தறுவாய்க்கு ஐக்குவைப் பிடிக்க முடிந்தது. ஐக்கு அவனை வியப்புடன் பார்த்தான்.

''என்ன நாகு, என்னோட யோசனைக்குச் சம்மதம் தெரிவிக்கத்தான் என்னைத் தேடி வந்தாயா?''

''இல்லே ஐக்கு. உன் பையும் என் பையும் மாறிப் போச்சு. தவறுதலா உன் பையை வச்சிட்டு என் பையை எடுத்து வந்திருக்கே!''

''அப்படியா? நான் கவனிக்கவே இல்லையே! நடுவிலே எங்கேயும் என் பைக்குத் தேவையே ஏற்படலே. ஆமாம். இது என் பைதான்! இரு, உன் பையை எடுத்து வரேன்.........'' என்று கூறிய ஐக்கு உள்ளிருந்து நாகுவின் பையைக் கொண்டு வந்து கொடுத்தான்.

நாகுவுக்குத் திக்கென்றது.

''இதிலே...... இதிலே.......!''

''என்ன?''

''செங்கல் ஒண்ணு வச்சிருந்தேனே!''

ஐக்கு கேலியாகச் சிரித்தான். ''செங்கல்லா? பையிலே வச்சிருந்தியா?''

''ஆமாம், ஐக்கு. நம்ம ஆபீஸ் எதிரே பாழ்வீட்டை இடிச்சுப் போட்டிருக்காங்களே, அங்கேயிருந்து எடுத்து வந்தேன். பாவச் செங்கல். திரும்பவும் அங்கேயே போட்டுடணும்னு.....''

''இன்னிக்கு நீ பேசற பேச்செல்லாமே ஒரு மாதிரியாத்தான் இருக்கு! பசி மயக்கத்திலே உளறுகிறாயா?''

''சொன்னா உனக்குப் புரியாது ஐக்கு. அந்தச் செங்கல்..... மறுபடியும் அதை அங்கேயே கொண்டு போய்ப் போட்டுடணும்.''

''இவ்வளவுதானே?.... டாக்ஸியிலேயே உருண்டு விழுந்தாலும் விழுந்திருக்கும். பீடை விட்டதுன்னு நிம்மதியா வீட்டுக்குப் போ! செங்கல்லாம், பையிலே வச்சிருந்தானாம்! யாராவது கேட்டாச் சிரிக்கப் போறாங்க!'' என்று கூறிய ஐக்கு வாயில் வரை வந்து அவனை வழியனுப்பி வைத்தான்.

வெகு நேரம் கழித்து வெறும் பையுடன் நாகு வீடு திரும்பியதும் அகிலா கேட்டாள்: ''அதை வீசியெறிஞ்சிட்டு வந்திட்டீங்களா?''

''இல்லே, அகிலா! ஐக்கு வெறும் பையைத்தான் குடுத்தான். செங்கல் டாக்ஸியிலேயே உருண்டு விழுந்திருக்கும்னு சொல்றான்!''

''எப்படியாவது நம்ம கையை விட்டுப் போச்சில்லையா? ஒழிஞ்சுது பீடை! நீங்க காலாகாலத்திலே சாப்பிட்டுட்டு நிம்மதியாப் படுத்துத் தூங்குங்க!''

மறு நாள் ஆபீசுக்குப் போகும்போது பாழ் வீட்டுப் பக்கம் ஒரு நோட்டம் விட்ட நாகு வியப்புடன் நின்றான். செங்கல் குவியல் காலியாயிருந்தது. அவ்வளவு சீக்கிரம் அதை யார் அள்ளிப் போட்டுக் கொண்டு போனார்கள்?

வழக்கம்போல் அங்கே பீடி குடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த காவல்காரனைக் கேட்டான்: ''ஏம்பா, இங்கே இருந்த செங்கல் குவியல் எல்லாம் என்ன ஆச்சு?''

''அப்படியேவா கிடக்கும்? நேத்து ராவோட ராவா ஒருத்தர் வந்து முந்நூறு ரூபா குடுத்து அவ்வளவையும் லாரியிலே அள்ளிப் போட்டுக்கிட்டுப் போயிட்டாரு.... நூறு ரூபாய்க்குக்கூடக் கேட்பாரில்லாமே கிடந்துது. திடீர்னு அதுக்கு அடிச்சது யோகம்!'' — அந்தப் பெருமையைப் பீடிப் புகையாக ஊதினான் காவல்காரன்.

வாங்கிப் போனவன் ஐக்குவாயிருப்பானோ? யாராயிருந்தால் நமக்கென்ன? அவன் வரைக்கும் அகிலா சொன்னதுதான் சரி. அவனுடைய நொண்டி நாற்காலி அன்று அவனுக்கு வழக்கத்தைவிடப் பாந்தமாக இருந்தது. டிபனுக்கு அகிலா மோர்க் களிதான் கட்டிக் கொடுத்திருந்தாள். ஆனால் அதைக்கூட நாகு நாற்காலியில் முன்னும் பின்னும் ஆடிக் கொண்டே சாப்பிட்டான்.

சாயங்காலம் அவன் வீட்டுக்குப் போனபோது அகிலா சற்று முன்புதான் வந்த செய்தித் தாளுடன் அவனைஎதிர் கொண்டாள். ''இந்தச்செய்தியைப்பார்த்தீங்களா?''

நான்கே வரிகளில் அந்தச் செய்தி அடங்கியிருந்தது.

''பழைய செங்கல் குவியலை ஏற்றிக் கொண்டு சென்று கொண்டிருந்த லாரி ஒன்று பாலத்தில் மோதி ஆற்றில் குப்புறக் கவிழ்ந்தது. லாரி டிரைவர் தெய்வாதீனமாக உயிர் தப்பினார். கூடவே சென்ற ஜகதீசன் என்பவர் செங்கல்லுக்கு அடியே சிக்கி மரணம் அடைந்தார்......''

நாகு பெருமூச்செறிந்தான்.

''பாவம், ஐக்கு இப்படிச் செய்திருக்க வேண்டாம்!''

''நான் சொன்னது சரியாய்ப் போச்சா? அது பாவச் செங்கல்! ஆளைப் பலி வாங்கியே தீரும்!''

''அது உண்மையிலேயே தங்கச் செங்கல்லா, இல்லையான்னு.....''

''அதுதான் ஆத்தோடே போயாச்சே! இனி அதைப் பத்தி என்ன? நம்ம குப்பைதான் நமக்குத் தங்கக் கட்டி!'' என்று குழந்தையை வாரியணைத்து முத்தமிட்டாள் அகிலா.

# சோர்வா? சோம்பலா?
# அஜீர்ணமாக இருக்கலாம்

ஜீரணம் பாதிக்கப்பட்டால், வேலையில் ஈடுபாடு குறைகிறது. எரிச்சல் ஏற்படுகிறது. தலைக்குமேல் வேலை காத்திருக்கும்போது உங்களை அஜீர்ணம் பாதிக்க விடலாமா? ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கிறது. வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கும் நல்லது. வயிற்றுப் போக்கு இருந்தால் அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், 86A நைனியப்ப
நாயக்கன் தெரு, மதராஸ் 3






ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்குச் சிறந்தது

# ஒருமைப்பாடு வீடு

(பேராசிரியர் நீலகண்டன் வீட்டு ஹால். நீலா ஒரு நாற்காலியில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறாள். நீலகண்டனின் மனைவி பார்வதி உள்ளிருந்து எட்டிப் பார்க்கிறாள்.)

நீலா (ரகசியக் குரலில்): என்ன ஆச்சு?

பார்வதி (தணிந்த குரலில்): ஒளிச்சு வைத்திருக்கேன்.

நீலா: அப்பா எங்கே?

பார்வதி: அதைத்தான் தேடிண்டு இருக்கார்!

நீலா: நீ அவரையே எங்கேயாவது ஒளிச்சு வைச்சிருக்கலாம்?

பார்வதி: என்னடி உளர்றே?

நீலா: ஆமா! இப்போ அவர் தேடிக் கண்டுபிடிச்சுட்டாக்க என்ன ஆகும்....!

பார்வதி: அணுகுண்டு வெடிக்கும்! யுத்தம் வரும்!.... வீட்டிலே தோய்க்காத



துணிகளும் தேய்க்காத பாத்திரங்களும் குவியும்.

நீலா: உன் குட்டு வெளிப்படும்! உன் ஒப்பந்தங்கள் தோல்வியாகும்.

பார்வதி: ஏண்டி வதைக்கிறாய்! என்னத்தையாவது பண்ணி உங்கப்பா கவனத்தைத் திருப்பி இந்த ஹாலுக்கு வர வழைத்து விடேன்! அப்புறம் நான் சமாளித்துக் கொள்கிறேன்.

நீலா: ஒரு பெர்ரிமேசனையும் ஒரு ஜேம்ஸ் பாண்டையும் கலந்து ஒரு ஆளை உருவாக்கினு அந்த ஆளுக்கு எவ்வளவு தீவிரமும் வேகமும் இருக்குமோ, அத்தனை பரபரப்புடன் தேடிக் கொண்டிருக்கிறார். இப்போ சீஃப் மினிஸ்டரே அவரைத் தேடிண்டு வரட்டுமே! "வெயிட்டிங்"லே போட்டுட்டுத் தேடுவார்!.... அவராக முயற்சியைக் கைவிட்டாத்தான் உண்டு.

பார்வதி: இந்த வயசிலே இவருக்குக் கிரிக்கெட் மாட்ச் பார்க்கிறதிலே ஏன் இத்தனை ஆசை?

நீலா: அடி அசட்டு அம்மா! வயசுக்கும் ஆசைக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லே. பன்னிரண்டு வயசுப் பையன் சாமியாராகப் போக ஆசைப்படலாம். தொண்ணூறு வயசுக் கிழவி மசாலா தோசை தின்க ஆசைப்படலாம். சீனு தேசத்திலே கன்பியூஷியஸ்னு....

பார்வதி: எனக்கு ஒரு கன்ஞெவியும் வேண்டாம்!

நீலா: கன்ஞெவியில்லே அம்மா!.... கன்பியூஷியஸ்!

பார்வதி: உன்னோட உங்க அப்பா கண்ணு மூச்சி விளையாடறதே போதும்... இந்தக் கண்டத்திலேயிருந்து தப்பறதுக்கு வழி சொல்லுவன்னு கதை சொல்ல வறியே....

நீலா: கடைக்குப் போய்ப் புதிசா ஒண்ணு வாங்கிண்டு வரலாம். ஆனால் அதிலே இரண்டு பிரச்னை இருக்கு....

பார்வதி: பணம் வேணும்னு நான் தர்றேன். அப்புறம் எப்படியாவது, புரட்டி அட்ஜஸ்ட் பண்ணலாம்!

நீலா: பணத்தை விட்டுத் தள்ளு! முதலாவது அதே கலர், டிசைன் கிடைக்கணுமே!

பார்வதி: உங்க அப்பாவுக்குத்தான் ஞாபக மறதி கூடப் பிறந்ததாயிற்றே! இதை



யெல்லாமா நினைவு வைத்துக் கொண்டிருக்கப் போகிறார்?

நீலா: நாசமாப் போச்சு!... இந்தமாதிரிசிறிய விஷயங்களில் நல்ல ஞாபகம் இருக்கும்! இரண்டாவது டெஞ்சர் என்ன தெரியுமோ?.... அப்படியே புதுசா, அதேமாதிரி வாங்கிக் கொண்டு வந்தாலும், அதை எங்கே மறுபடியும் ஒளித்து வைப்பாய்? அப்பா இத்தனை நேரம் தேடாத இடம் ஏதாவது பாக்கி இருக்கா?

பார்வதி: என் மடியிலேதான் ஒளித்து வைக்கணும்!.... ஹூம்! பரதேவதே! எந்த வேளையிலே அந்த நாகம்மாளை வேலைக்கு வைத்துக் கொண்டேனோ......

நீலா ! அவள் பேரே நாகம்மா!.... நடுங்கித்தானே ஆகணும்! இந்த டேஞ்சரிலே யிருந்து நீ தப்ப முடியாது.

(நீலகண்டன் உள்ளிருந்து கையில் ஒரு சிறு துணி மூட்டையுடன் திடீரென்று வருகிறார்.)

நீலகண்டன்: என் கண்ணிலேயிருந்து தப்ப முடியுமா ? ஆறு மாசமாகத் தேடறது இன்னிக்கு அகப்படுகிறது.... அக்கிரமமாக இருக்கே.....! ஆல்வின் பீரோவிலே இருக்க வேண்டியது அடுப்பங்கரை ஷெல்புக்கு அடியிலே கிடக்கு.....

பார்வதி (திடுக்கிட்டு மெதுவாக): இது என்ன புதுக் குழப்பம்?

நீலகண்டன் (ஆத்திரத்துடன்): எவர் சில்வர் பாத்திரம் வாங்கறதுக்காக இதை அபேஸ் பண்ணி வைத்திருக்கிறாயா?....

நீலா: போங்கப்பா!.... இதை ஒரு பாத்திரக்காரனும் தொடக்கூட மாட்டான்!.... ஏதோ தவறுதலாக.....

நீலகண்டன்: இந்த வீட்டிலே வேறு என்ன தான் ரைட்டாக நடக்கிறது?....

(டெலிபோன் மணி அடிக்கிறது. நீலா டெலிபோனை எடுக்கிறாள்.)

நீலா: ஹலோ!.... வாட்...? ராங் நம்பர். (டக் என்று டெலிபோனை வைத்து விட்டு)..... அப்பா !.... உட்காருங்க அப்பா.....! இந்த மாதிரி ராங் நம்பரை 'அவாய்ட்' பண்றதுக்கு ஏதாவது 'மெக்கா



**கோமதி சுவாமிநாதன்**



னிஸம்' கண்டுபிடிக்கக் கூடாதோ?..... யாரையோ எவனோ கூப்பிட்டா மூணாவது மனுஷன் வீட்டிலே ஏன் மணி அடிக்கிறது ?

நீலகண்டன்: அடி அசடே!... 'அவன் சுத்தறது என்னவோ கரெக்டா நம்ப வீட்டு நம்பரைத்தான் சுத்தறான்! அதனாலேதான் இங்கே மணி அடிக்கிறது. விஷயம் என்னன்னு..... டெலிபோன் டைரக்டரியிலே நம்பரெல்லாம் பொடியாக இருக்கிறதா ? நீலகண்டன் என்கிற பேரைப் படித்துக் கொண்டே எதிராக இருக்கும் நம்பரையும் பார்க்கும் போது மேலேயோ, கீழேயோ இருக்கும் நம்பரைப் பார்த்துச் சுற்றி விடுகிறார்கள். வேறே எவனாவது சுத்தினவனுக்கு டோஸ் விடுவான்!.... நானே ஒரு நாள் மூணு தடவைகள் சேர்ந்தாற்போல ஒரு ராங் நம்பரைச் சுற்றி அந்தப் பக்கம் இருந்தவன் அர்ச்சனை பண்ணினான் பாரு.... முதல் தடவை 'ராங் நம்பர் பிளீஸ்'ன்னான். அடுத்த தடவை 'ராங் நம்பரையா! வச்சுத் தொலை'ன்னான். மூணாம் தடவை 'அடச்சீ ! ராங் நம்பர்! கழுத்தை அறுக்காதே'ன்னான். போதுமா....?

(மறுபடியும் டெலிபோன் மணி அடிக்கிறது.)

நீலா: பார்த்தீர்களா, அப்பா...! அதே ஆசாமிதான்!....நான் டோஸ் விடறேன்.

நீலகண்டன்: உஷ்!.... அந்த சான்ஸை எனக்குக் கொடு!.... ரொம்ப நாளா நான் இந்தமாதிரி ஒரு 'ஆப்பர்சூனிட்டி'க்கு வெயிட் பண்ணிண்டு இருக்கேன்....

(போய் டெலிபோனை எடுக்கிறார்.)

யாரையா கழுத்தை அறுக்கறே ! இது ராங் நம்பர். பிராணனை வாங்காதே.

டெலிபோன் குரல்: நான் இன்னும் நம்பரையோ பெயரையோ சொல்லலே இல்லையே....

நீலகண்டன்: அதைச் சொன்னாலும் ராங் நம்பராத்தான் இருக்கும்! வச்சுடு !:...

டெலிபோன் குரல்: 99099. புரொபசர் நீலகண்டன் வீடுதானே !

நீலகண்டன்: ஐயையோ !.... ரைட் நம்பர் ! ரைட் பேரு.... நீ யாரு?....

டெலிபோன் குரல்: நானும் ரைட் ஆசாமி தான். வேணு பேசறேன். என் மணிபர்சை ஸ்டோர் ரூம் பீரோ மேலே வைச்சிருந்தேன். அது பின்னாலே விழுந்துடுத்து. அதை மறந்து போய் வெளியே கிளம்பிவிட்டேன். நீலாகிட்டே சொல்லி எடுத்து வைக்கச் சொல்லுங்கோ....

நீலகண்டன்: ஸ்டோர் ரூம் பீரோ பின்னாடிதானே ? நீலாகிட்டே சொல்லுவானேன்? நானே எடுத்து வைக்கிறேன், கவலைப்படாதே !

(டெலிபோனை வைத்து விட்டுப் போகிறார்.)

பார்வதி: குடி கெட்டது போ!... அந்தப் பீரோவுக்குப் பின்னாலே தான் வைச்சிருக்கேன்.

*நீலா:* முதலிலேயே வேணுதான் கூப்பிட்டான்! நான்தான் அப்பா கவனத்தைத் திருப்ப ராங் நம்பர் டாப்பிக்கை ஆரம்பித்தேன். பிரயோசனப்படலே.....

(வேலைக்கார நாகம்மாள் வருகிறாள்.)

*நாகம்மாள்:* இப்போ என்னம்மா நடந்திருக்க! நீ கொடுக்கிற பொல்லாச் சம்பளத்துக்குக் கொஞ்சம் லேட்டாவந்தா என்னவோ தலையை வாங்கிடற மாதிரிப் பேசறியே....

*நீலா:* நீ மூணு ராவணன்களை வரிசையா நிறுத்தி வைச்சு முப்பது தலைகளையும் வாங்குவியே.... நாங்க என்னவோ பேசிக்கிட்டு இருக்கோம். நீ வர போதே வம்புச் சண்டைக்கு வர்றியே!.... போ போ!..... துணிகளுக்கெல்லாம் சோப்பு போடு....

*நாகம்மா:* யம்மோவ்! இன்னிக்கு ஒரே பேஜாராக இருக்கு! முதலிலே காப்பியைக் கொடுத்துடு!.... சூடா வச்சிருக்கியில்ல ?....

*பார்வதி:* இன்னிக்குக் காப்பி இல்லே!.... வயிற்றெரிச்சலைக் கொட்டிக்காதே....

*நீலா:* உஷ்.....! நாகம்மா! வேலையைப் பார்த்துட்டுப் போறப்ப சில்லறை தரேன். ஹோட்டலிலே குடிச்சுக்க.....

*நாகம்மா:* அட போம்மா! அந்த ஹோட்டல் காப்பியை யாரு குடிப்பா!...யம்மோவ்! நான் சோப் போடறதுக்குள்ளாற பிளிட்டரிலே கொஞ்சம் பொடி போட்டுச் சுடுதண்ணி ஊத்தேன்!.... மறந்தே போயிட்டேனே! உன் புருஷன்கிட்டே சொல்லி பீபரி வாங்கச் சொல்லு! ரோபஸ்டா போட்டு அடிக்காதே. எனக்கு வீட்டுக் காப்பிதான் வேணும்...

(நீலகண்டன் கையில் தெர்மாஸ் பிளாஸ்குடன் வருகிறார்.)

*நீலகண்டன்:* நான் விடுவேனு!..... பார்வதி! இதோ பாரு.... ஆம்புட்டுடுத்து!

*நாகம்மாள்:* இன்னிக்கு மழைதான் கொட்டப் போகுது! ஐயாவே காப்பி கொணுந்துட்டாரு!....

*நீலகண்டன்:* வாட்....! உனக்குக் காப்பியா?.... அது யாரு வீட்டிலே?.... நான் கிரிக்கெட் மாட்ச் பார்க்கப் போக, பிளாஸ்க் தேடிக் கண்டுபிடிச்சிருக்கேன்! ஏய், மடப் பார்வதி! உனக்கு வர வர ஞாபக மறதி ஜாஸ்தியாப் போச்சு. ஸ்டோர் ரூம் பீரோ பின்னாலே இருந்தது.

(பேசிக்கொண்டே பிளாஸ்க் கார்க்கை எடுக்கிறார். சூடான காப்பி காலில் கொட்டக் குதிக்கிறார்.)

*நாகம்மாள்:* ஐயையோ!... அது எனக்கு அம்மா எடுத்து வைத்திருக்கிற காப்பியாச்சே!

*பார்வதி:* உஷ்! சும்மா இருடி நாகம்மா.

*நீலகண்டன் (முன்னால் வந்து):* அவளை ஏன் சும்மா இருக்கச் சொல்றே!..... நாகம்மா! உனக்கு எத்தனை நாளா இந்த வீட்டிலே காப்பி கொடுக்கிறா ?

*நாகம்மாள்:* வேலைக்கு வந்த நாளிலே இருந்துதான்! காப்பிதான் சாமி என் உசிரு. என் கண்டிஷனே அதுதானே!.... நீ என்ன சம்பளம் கொடுத்துக் கிழிச்சுட்டே!

*நீலகண்டன்:* உன்னை டிஸ்மிஸ் பண்ணிட்டேன்......! நின்னுக்க.....

*நாகம்மாள்:* மூணு மாசம் நோட்டீஸ் கொடு. அதுவரை காப்பியும் கொடு.

*நீலகண்டன்:* கெட் அவுட்! கெட் அவுட்! நீ இங்கே நுழையப்படாது.....

*நாகம்மாள்:* வேறு யாரும் நுழையறதைப் பார்த்துடறேன்!....

(கோபமாய்ப் போகிறாள்.)

*நீலா:* என்னப்பா அவசரப்பட்டுட்டீங்க! இவ பெரிய கலாட்டாப் பேர்வழியாச்சே!

*நீலகண்டன்:* காப்பிலோட்டாப் பேர்வழி! இந்த வீட்டிலே எனக்கு எதிராக அம்மாவும் பொண்ணுமே சதி பண்ணறபோது அந்த விரோதி ஏன் கூத்தாடமாட்டா? இவளுக்குக் காப்பி எடுத்து வைக்க என் பிளாஸ்க். அதை நான் கண்டு பிடிக்காமல் இருக்க ஏழு பொய்.... நான்சென்ஸ்!

(சாட்டர்ஜீ வேகமாக வருகிறார்.)

*சாட்டர்ஜீ:* புரொபசர் சார்!.... 'லேபர் லா' புத்தகம் ஏதாவது உங்ககிட்டே இருக்கா?

*நீலகண்டன்:* உங்கள் ஸ்தாபனத்திலே ஏதும் ஸ்டிரைக்கா ?

*சாட்டர்ஜீ:* ஸ்தாபனத்திலேயா? வீட்டிலே சார்! வேலைக்காரப் பொண்ணு பாதி பாத்திரம் தேய்த்துக் கொண்டிருக்கும்போது அப்படியே கீழே போட்டுவிட்டு, கையிலே இன்னிக்கு வரை சம்பளத்தைக் கணக்குப் பண்ணிப் போடச் சொல்றாளாம். உங்க வீட்டு வேலைக்காரி நாகம்மா வந்து ஏதோ சொன்ன பிறகுதான் இந்த வேலை நிறுத்தமாம்....

*நீலகண்டன்:* நாகப் பாம்பு அங்கே ஊர்ந்து வந்து விட்டதா ?

(கன்யாலால் வேகமாக வருகிறார்.)

*கன்யாலால்:* நீலகண்டஜீ! நீலகண்டஜீ! ஓர் அர்ஜெண்ட் ஹெல்ப். உங்க வீட்டு வேலைக்காரியைக் கொஞ்ச நேரம் 'ஸ்பேர்' பண்ணுங்களேன். நம்ப வீட்டு வேலைக்காரக் கிழவி நோட்டீஸ் கொடுக்காமல் ரிசைன் பண்ணிட்டாளாம்! பாதி அழுக்குத் துணி அப்படியே குழாயடியிலே கிடக்கு!

*நீலகண்டன்:* எங்க வீட்டு வேலைக்காரியை இப்போதானே நான் டிஸ்மிஸ் பண்ணினேன்.

*சாட்டர்ஜீ:* இந்த டிஸ்மிஸல் ஆர்டரோட விளைவுதான் இந்த ஸ்டிரைக்கோ என்னவோ?

*நீலகண்டன்:* சாட்டர்ஜீ.... கன்யாலால்ஜீ....? நாம் எல்லோருமே புது வேலைக்காரிகளை அமர்த்திக் கொள்வோம்..... ஜஸ்ட் வெயிட்....

*நீலா:* நாகம்மா உயிரோட இருக்கிற வரை ஒரு வேலைக்காரியை இந்தக் கட்டடத்துக்குள்ளேயே வரவிடமாட்டா!

*நீலகண்டன்:* இப்போ நான் என்ன பண்ணணும்கிறே ?

*பார்வதி:* கொஞ்ச நேரம் வெளியிலே போயிட்டு வாங்கோ! அதற்குள்ளே நான் நிலைமையைச் சமாளித்து எல்லார் வீடுகளிலும் வேலை நடக்க ஏற்பாடு பண்றேன்.

*நீலகண்டன்:* அந்த நாகப் பாம்புக்குப் பஸ்டு கிளாஸ் காப்பி வார்க்கப் போகிறாய்!... அப்படித்தானே?.... செய்! செய்! ஆனால் அதுக்கு முன்னாடி நான் கோபம் தணிஞ்சு வெளியே போகணும்னு அவளுக்குப் போடற காப்பியிலே எனக்கும் கொஞ்சம் கொடு.

(சிரிப்பொலி எழுகிறது.)

(காட்சி முடிவு)

# நாட்டு மக்கள் அனைவருக்கும் நிறை உணவு...



இது வெறும் கற்பனையல்ல. கூட்டுறவு நிறுவனங்கள் நாட்டின் வேளாண்மை மற்றும் இதர கிராமக் கைத்தொழில் களின் வளர்ச்சியிலே நேரிடையாக ஈடுபட்டுள்ளன.

விவசாயிகள் அமோக விளைச்சலைத் தரும் வீரிய விதைகளையும் சிறந்த கலப்பு உரங்களையும், நவீன விவசாயக் கருவிகளையும் பெறவும், சிறு பாசன வசதிகளைச் செய்து கொள்ளவும் புண உதவி யளிப்பதன் மூலமாக உணவு உற்பத்தியைப் பெருக்கி நாடு உணவுத் துறையிலே தன்னிறைவு பெற கூட்டுறவு நிறுவனங்கள் பணிபுரிகின்றன.

நாட்டு மக்கள் அனைவருக்கும் நிறை உணவு —
இன்றைய கனவு நாளை நிறைவேற
சென்னை மாநில கூட்டுறவு வங்கியில் முதலீடு செய்க.

விவசாயிகளுக்குற்ற நண்பர்கள் கூட்டுறவு நிறுவனங்களே

**சேமிப்புக்குச் சிறந்த நிறுவனம்**

## சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

**271, அங்கப்ப நாயக்கன் தெரு**

**சென்னை-1**






சென்னையில் போக்குவரத்தின் அவல நிலையைக் கண்டேன். அவ்வளவு பேர்களுக்கும் டிக்கட்டு கொடுத்த பின்னரே, நடுவில்நின்ற 'தமிழக அரசு போக்குவரத்து' நகருகிறது. ஐந்து மைல் செல்ல அரை மணி நேரம் ஆகிறதென்றால், பஸ் படம் போட்ட தூணருகே நிற்பதற்கு அரை மணி நேரம் எடுத்துக் கொள்ளுகிறது! சைதாப்பேட்டையிலிருந்து மயிலாப்பூர் செல்ல 45ம் எண் படைத்த பஸ்ஸுக்காக ஒரு நாள் இரவு 8 மணியிலிருந்து 9 மணி வரை நின்றேன்.

உலகத் தொழில் கண்காட்சியைப் பார்த்து விட்டு அண்ணா நகரில் இரவு 8 மணிக்கு 39ம் நம்பர் பஸ்ஸில் ஏறினேன் ஒரு நாள். பத்தடி தூரத்திலேயே பஸ்ஸின் ஹெட் லைட் அவிஞ்சு போச்சு. ஷெனாய்நகர் பணிமனையில் ரிப்பேருக்குப் பெரும் நேரம் ஆயிற்று. அது முடிந்துபஸ் வந்தபோது, எனக்கு உட்காரும் இடமும் போய்விட்டது. இடித்துத் தள்ளிக் கொண்டு ஏறிய பின்னரும் ஒன்றும் விடிந்துவிடவில்லை. அரை மணி நேரம் கழித்து, எங்கோ ஒரு பாதையில் இருட்டில் நின்றுவிட்டது வண்டி. 'டீசல் இல்லே சார். எல்லாரும் இறங்கிப் போங்க' என்றார் டிரைவர். 'நீங்க — பாசஞ்சர் யாராவது கம்ப்ளெயிண்ட் பண்ணுங்க' என்று கூறினார் கண்டக்டர். பெரிதாக டிக்கட்டில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். எனக்குச் சென்னையில் ஓரிடமும் தெரியாது. பஸ் நிற்கும் இடம் எதுவென்றே தெரியவில்லை. 'கலைக் கல்லூரிப் பக்கம்' என்று யாரோ செந்தமிழில் கூறினார்கள். நான் தனியாக இருந்தால் டீசல் என்ன, அடாமிக் எனர்ஜி வரும்வரைகூட 'வெயிட்' பண்ணத் தயார். கூட என் தங்கைகளையும் பொடிசுகளையும் கூட்டிப் போயிருந்தேன். கார்கள்தாம் அந்தப் பாதையில் சென்றனவே தவிர, டாக்ஸியையே காணவில்லை.

ஒரு நாள் திருவல்லிக்கேணியி லிருந்து திரும்பி வந்தபோது, டாக்டர் நடேசன் ரோட்டில் பஸ் நின்று விட்டது. 'பிரேக் டவுன்'மா. 'எல்லோரும் இறங்கி நடந்து வீட்டுக்குப் போங்க' என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் உள்ள ஹோட்டலுக்குள் நுழைந்துவிட்டார் டிரைவர்! நடப்பது பெரிய காரியமல்ல. பெங்களூரில் லால்பாக், கப்பன்பாக், விதான் சௌதா என்று ஆறு மைல்களுக்கு மேல் ஒரே மூச்சாக நடந்திருக்கிறேன். ஆனால் உச்சிவெய்யிலில் 12 மணிக்கும் இரவு 9 மணிக்கு மேலும் நடக்கவேண்டும் என்றால் ரசமாகவா இருக்கும்? (அப்படி ஒரு தடவை இரவு 10 மணிக்கு மேல் நடக்க ஆசைப்பட்டு, நடந்து, எட்வர்டு எலியட்ஸ் ரோடில் கல்யாணி ஆஸ்பத்திரியின் பக்கம் ஒரு போலீஸ்காரரிடம் மாட்டிக் கொண்டு விழித்திருக்கிறேன்!)

மதுரையிலிருந்து திருவனந்தபுரம் மெயிலில் வந்துகொண்டிருந்தேன். மதுரைக்கே அது இரண்டு மணி நேரம் தாமதமாக வந்ததால் அடுத்துச் 'செல்ல வேண்டிய திருநெல்வேலி எக்ஸ்பிரஸ் முதலில் சென்று விட்டது. எட்டரை மணிக்கு இரவில் புறப்பட்ட எங்கள் வண்டி சமயநல்லூரில் நின்றுவிட்டது. காரணம் முன்னால் சென்று கொண்டிருந்த இரண்டு எக்ஸ்பிரஸ் வண்டிகளையும் சோழவந்தானில் மாணவர்கள் (மன்னிக்க வேண்டும்!) கல்லால் பதம் பார்த்துக் கொண்டிருந்தார்களாம்! போலீஸ்காரர் வந்து எங்கள் பெட்டியின் ஜன்னல் கதவுகளை யெல்லாம் மூடச் செய்தார். யார் கதவைத் தட்டினாலும் திறக்கக் கூடாது என்று எச்சரித்து விட்டுப் போனார். இரவு பத்தரை மணிக்குச் சோழவந்தானை அடைந்தபோது முன்னால் இரண்டு வண்டிகளிலும் தம் கைவரிசையைக் காட்டிவிட்டுக் களைப்படைந்து பாதிப்பேர் சென்றுவிட்டிருந்தனர்.




மீதமுள்ளோர் 'காப்பி வேர்க்கடலை' என்று பொய்க் குரலால் விளித்தனர். (காப்பியையும் வேர்க்கடலையையும் இந்த ஊரில்தான் சேர்த்து விற்பார்கள் போலும்!) 'அவங்கள்ளாம் போயிட்டாங்க. கதவைத் திறவுங்க' என்று கதவை இடித்தனர். நாங்கள் பயந்த புத்திசாலிகளாகவே இருந்து விட்டோம். காலையில் நான்கு மணி நேரம் லேட்டாக எழும்பூரை அடைந்ததால் 'டாக்ஸி' இல்லை.

ஆண்டவனே! இந்தத் தமிழ் நாட்டு அனுபவம்......!

திருச்சி — நாராயணன்

28—2—68

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி